|| श्रीः ||

ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷியால் அருளிச் செய்யப்பட்ட

# || श्रीशक्तिमहिम्नः स्तोत्रम् ||

# ஸ்ரீ சக்திமஹிம்ந ஸ்தோத்திரம்

(மூலமும்)

சென்னை ஸ்ரீ குஹாநந்தமண்டலி கிரந்த பிரசுராலய
சொந்தக்காரரும், நூலாசிரியருமாகிய

பிரஹ்மஸ்ரீ, **ந. சுப்பிரமண்ய அய்யரால்**

இயற்றப்பட்ட

**ஸ்ரீ ரஹஸ்யார்த்த விமர்சினி**

என்னும் தமிழ் விருத்தியுரையும்.

(முதற்பதிப்பு)

**N. RAJAM & CO.,**

VEPERY, MADRAS.

 1943 [அணா 12

**SRI**

# SAKTI MAHIMNA STOTRAM

(With Tamil Commentary)



N. SUBRAMANIA IYER

# முன்னுரை

ஸ்ரீ த்ரிபுராமஹிம்நம் அல்லது **சக்திமஹிம்ந ஸ்தோத்திரம்** என்னும் இந்நூல் **ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷியால்** இயற்றப்பட்டதொன்றாகும். இவர் பரமேஶ்வரனாகும் ஸ்ரீ கைலாஸபதியின் அம்சமாய், அத்திரி மஹர்ஷிக்கும் அநஸூயா தேவிக்கும் பிறந்தவர். இவர் பரமேஶ்வரதுல்லியரதலின் ஸர்வக்ஞகல்பர். இவருக்குக் **குரோதபட்டாரக** ரென்று ஒரு பட்டப் பெயருண்டு. பட்டாரக பட்டம் தரித்தவர்கள் மூவரே யாவர். அவர்கள் பரமசிவபட்டாரகர், குரோதப்பட்டாரகர், சிருங்காரபட்டாரகரென்பவராவர். இவர்கள் முறையே பரமேஶ்வரன், ஸ்ரீ துர்வாஸர், காளிதாஸர் என்பவராவர்.

துர்வாஸர் பரதேவதா ஸ்தோத்திராசாரியர்களுக்குள் மிகச்சிறந்தவரும் முதன்மையானவருமாவர். பரதேவதா ஸ்தோத்திராசாரியர்கள் ஒவ்வொரு யுகத்திற்கு ஒவ்வொருவராக நான்கு யுகங்களுக்கும் நால்வராவர். அவர்கள் கிருதயுகத்திற்கு **ஸ்ரீ துர்வாஸமஹரிஷியும்**, திரேதாயுகத்திற்கு **ஸ்ரீ பரசுராமரும்**, துவாபர யுகத்திற்கு **ஸ்ரீ தௌம்மியரும்**, கலியுகத்திற்கு **ஸ்ரீ மூகாசாரியரு**மாவர்.

இவர் இரண்டாயிரம் ஶ்லோகங்கள் இயற்றியுள்ளதாகத் தக்க பிரமாணங்களால் ஏற்படினும், தற்போது சில நூற்றுக்கணக்கான, இரண்டு மூன்று ஸ்தோத்திரங்களே காணப்படுகின்றன. அவை **ஆர்யாத்விசதி** யென்னும் ஸ்ரீ லலிதாஸ்தவரத்தினமும் இதுவுமேயாகும்..

**பரசம்புமஹிம்ந** ஸ்தோத்திரமென்னும் ஒரு சிறந்த நூல் இவரால் இயற்றப்பட்டதாக எழுதியிருக்கின்றது. இதில் சிலருக்கு அபிப்பிராய பேத முண்டனத் தெரிகின்றது. காஶ்மீர சைவத்திற்குச் சம்பந்தப்பட்ட ஒரு துர்வாஸருண்டு. பரசம்புமஹிம்ந ஸ்தோத்திரம் அத்தூர்வாஸரால் இயற்றப் பட்டிருக்க வேண்டு மென்பது பலரது அபிப்பிராயமாகும்.

அன்றியும், அநஸூயா கர்ப்பஸம்பூதரும் குரோதபட்டாரகருமாகிய ஸ்ரீ துர்வாஸர் ஸ்ரீ காஞ்சீ க்ஷேத்திரத்தின் அதிஷ்டாத்ரியாகும் **ஸ்ரீ காமாக்ஷி** யாலயத்திற்குச் சம்பந்தப்பட்டவராக ஏற்படுகின்றது. அது வருமாறு: -

ஸ்ரீ காமாக்ஷி விலாசம் 12ம் அத்தியாயம்.

**ततः शम्भुमहादेवो नत्वा स्तुत्वा परात्पराम् ।**
**प्रीतिमाश्रित्य भक्तेभ्यो ददौ वरमनुत्तमम् ।।**

परािविर्भावदिवसे काञ्च्यामान्तरमार्गतः :|
योऽर्चयेदत्र कामाक्षी कोटियज्ञफलं लभेत् ।।

इति दत्वा वरं शम्भुः देव्याः पीठे तिरोदधे ।
दुर्वाससः स्वरूपेण स शिवः पुनरालयम् ।।

बाह्यादागत्य शिष्यैश्च सहितः स महामुनिः ।
कौशिकाख्यऋषेः पुत्रं तथा गौतमनन्दनम् ।।

काश्यपस्य सुतं चैव तथात्रेस्तनुसंभवम् ।
भरद्वाजकुमारं च कुण्डिनीपुत्रकं तथा ।।

क्रमादाकाशभूम्यन्तं ब्रह्मकल्पान्तमेव च ।
पूजार्थं तु महादेव्याः प्रतिष्ठाप्य क्रमेण तु ॥

प्रवालमेरुसंयुक्तां हेमरुद्राक्षमालिकाम् ।
सौभाग्यकुंकुमं चैव गोपीमृच्चन्दनेऽपि च ॥

देव्यास्तु शासनादेवं दत्वालंकारकाम्यया ।
गोभूवस्त्रहिरण्यानि दत्वा दीक्षां यथाक्रमात् ।।

कृत्वा चिन्तामणिं तन्त्रं दत्वा देव्यर्चनाविधिम् ।
अहमद्य तु दुर्वासास्त्रेतायां रेणुकासुतः ।।

धौम्योऽहं द्वापरयुगे कलौ मूकाह्वयः क्रमात् ॥

युगे युगे संभवामि कृते साहस्रयुग्मकम् ।
तस्मिन् पादविहीनेन त्रेतायां द्वापरे द्विजः ।।

**पुनः पादविहीनेन कलौ पादयुगेन च ।**
**कृतिं करोमि कामाक्षीस्तवमित्यभिधानतः ॥**

**ततो ज्ञात्वा च मां यूयं दूर्वासा इति भावतः ।**
**मां गुरुत्वेन संपूज्य यात मच्छिष्यभावकम् ॥ इति ।**

மேற் கூறப்பட்ட பிரமாணங்களால், ஸ்ரீ துர்வாஸர் பரமேஶ்வர ஸ்வரூபரென்பதும், காஞ்சீ க்ஷேத்திரத்தில் ஸ்ரீ காமாக்ஷிதேவியைப் பிரதிஷ்டை செய்தவரென்பதும், **"ஸ்ரீ ஸௌபாக்கிய சிந்தாமணி"** யென்னும் ஒரு சிறந்த பூஜாகல்ப பத்ததியையியற்றி யருளியவரென்பதும், கிருதாதி நான்கு யுகங்களிலும் ஸ்ரீ காமாக்ஷி ஸ்தோத்திராசாரியர்களாய் அவதரித்தவ ரென்பதும் நன்கு புலப்படு கின்றன.

## இந்த ஸ்தோத்திரத்தின் அமைப்பு.

சக்திமஹிம்ந ஸ்தோத்திரமாகும் இந்நூல் அறுபத்தொரு சுலோகங்கள் சுலோகங்கள் கொண்டதாய் விளங்குகின்றது. யுகாந்தரங்களாய் விளங்கி வருகின்ற கிரந்தமாதலின் இது தேசத்துக்குத் தேசம், இடத்திற்கு இடம் ஏற்றக் குரைச்சலான ஶ்லோக ஸங்கியை யோடும், பற்பல விதமான பாடபேதங்களோடும் கூடி இலங்குகின்றது. இதில் உள்ள அறுபத்தொரு சுலோகங்களிலும், நுண்ணறிவோடு ஆராய்ந்து பார்க்கு மிடத்து மிடத்து இரண்டாவது இரண்டாவது ஶ்லோகம் முதல் ஐம்பத்திரண்டாவது ஶ்லோகம் வரையுள்ள ஐம்பத்தொரு சுலோகங்கள் தாம் இந்நூலின் பிரதான பாகமாக ஏற்படுகின்றது. முதல் சுலோகம் மங்களாசரணம். 53ல் மானஸ பூஜை பூஜையும் 54 முதல் 61 வரை எட்டு சுலோகங்களில், பலசுருதியும், உபாஸகர்களின் மஹிமையும் கூறப்பட்டுள்ளன. ஆதலின், இந்த ஸ்தோத்திரம் மாத்ருகாக்ஷமாலையின் ஸங்கியையாகும் ஐம்பத்தொரு சுலோகங்களால் இயற்றப் பட்டுள்ளதென கருதத்தக்கதாயிருக்கின்றது.

இதில் வேத சிரோ பாகங்களாகிய உபநிஷத் பிரதி பாத்யமான பல பரம ரஹஸ்யங்களும், சாக்த தந்த்ர ஶித்தமான பல சிறந்த உண்மைகளும், மந்திர சாஸ்திர நுட்பங்களும், மந்த்ரோத்தாரங்களும் அடங்கியுள்ளன.

பொதுவாய் ஸ்தோத்திரக் கிரந்தங்கள் அறுவகைப்படும். அவை **நமஸ்காரம், ஆசீர்வாதம், ஸ்வருபஸித்தாந்தம், பராக்கிரமவர்ணனம், மஹிமை, பிரார்த்தனை** யென்பனவாம். இவற்றுள், இந்த ஸ்தோத்திரமானது மஹிமை, பராக்கிரமம், ஸ்வருப ஸித்தாந்த்தம், பிரார்த்தனை யென்னும் பலபகுதிகளை யடக்கிக் கொண்டு விளங்குகின்றதெனக் கூறலாம். பிரதானமான பாகத்தில்

பதினெட்டு ஶ்லோகங்கள் மந்த்ரோத்தார வடிவமாயும், ஒன்பது ஶ்லோகங்கள் பரதேவதையின் பாதாதிகேசாந்த வர்ணனையாயும், மற்றவை பரதேவதையின் மஹிமை, உபாஸனையின் மஹிமை, ஆயுதங்களின் பிரபாவம், உபாஸகர்களின் சிறப்பு முதலியவைகளைக் கூறுவனவாயுமிருக்கின்றன.

## வடமொழி வியாக்கியானம்.

இதற்கு வடமொழியில் ஒரு சிறந்த வியாக்கியானம் இருக்கின்றது. இந்த மஹிம்ந ஸ்தோத்திரத்தின் மஹிமை இவ்வியாக்கியனத்தால் நன்கு விளங்கும். இதையியற்றியவர் ஸ்ரீநித்தியாநந்தநாத ரென்னும் ஓரொப்பற்ற வித்யோபாஸக துரந்தரராவர். இவர் இன்னகாலத்தில் இன்னதேசத்தில் இருந்தார் என்று கூறுதற்கு யாதொரு பிரமாணமும் கிடைக்கவில்லை. இவ்வியாக்கியானம் காவ்வியமாலா கிரந்த பிரசுராவளியில் 11வது பிரசுரத்தில் வெளியிடப்பட்டுள்ளது.. இவ்வருமையான வியாக்கியானமானது மந்த்ர சாஸ்திரத்திலும், ஸ்ரீ வித்யா தந்த்ரங்களிலும் அத்வைத வேதாந்த சாஸ்திரத்திலும் நல்ல பயிற்சி யுடையவர்க்கு மாத்திரம் விளங்குவதாய் இருக்கின்றதேயன்றி ஸம்ஸ்க்ருத பாஷாக்ஞானம் நன்குள்ளவர்க்குங் கூட விளங்குவதாயில்லை.

இத்தகைய அருமை பெருமைகள் வாய்ந்த இந்த மஹிம்ந ஸ்தோத்திரத்தை, வியாக்கியானத்தோடு தமிழில் மொழிபெயர்க்க வேண்டுமென்னும் நல்லுணர்வு சென்னை, புரசவாக்கம் N. ராஜம் அண்ட் கோ சொந்தக்காரரும், ஸ்ரீபரதேவதா பக்தருமாகிய ஒருவருக்கு ஏற்பட்டு, அவரது தூண்டுதலின்மேல் அடியேனால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

இந்நூலில் மூலஶ்லோகம், அதற்கு அவதாரிகை, தாத்பர்யம், விசேஷவுரை இவைகள் அடங்கியுள்ளன. வடமொழி வியாக்கியானத்தைத் தழுவியும், அதிலுள்ள சில ரஹஸ்ய விஷயங்களை இதர பிரமாண சாஸ்திரங்களின் உதவியைக்கொண்டு நன்குவிளக்கியும் இது இயற்றப்பட்டுள்ளது.

இந்நூல் ஸ்ரீ வித்தியோபாஸகர்களுக்கு மிகவும் அவசியமாயிருக்கு மென்பதற்கு விஷய ஸூசிகையைப் பார்த்தலே சான்றாகும்.

இப்பதிப்பு மேற்படி ராஜம் அண்ட் கோ சொந்தக்காரரின் திரவிய ஸஹாயத்தால் வெளியிடப்பட்டுள்ளதால் இம்முதற் பதிப்பு மாத்திரம் அவருக்கு உரிமையாக்கப் பட்டுள்ளது.

இவ்வரிய பெரிய நற்காரியத்தை யியற்றிய மேற்படி கம்பெனியாருக்குப் பரதேவதை பிறழாத பக்தியும், சரீர ஆரோக்கியமும், பொருட் செல்வத்தோடு அருட் செல்வமும் அருள்வாளாக.

இதை யெல்லாச் சிறப்புக்களும் நன்கமைய அச்சிட்டுத் தந்தவரும், அடியேனது ஆத்ம நண்பரும், சென்னை, மயிலை, பாலமனோரமா அச்சியந்திரசாலையின் சொந்தக்காரருமாகிய பிரஹ்மஸ்ரீ C. சங்கரராம சாஸ்திரிகள் M. A., B. L., அவர்களுக்கு எனது மனமார்ந்த வந்தனங்கள் அளிக்கின்றேன்.

இதில், அடியேனது பிரமாதாதி தோஷங்களாலும், ஆராய்ச்சிக் குறைவினாலும் பலபிழைகள் ஏற்பட்டிருக்கலாம்; அவற்றை நுண்ணறிவுடைய பெரியோர் அடியேன்பால் அருள் புரிந்து தெரிவிப்பாரேயாயின் மறுபதிப்பில் அவற்றைத் திருத்தி வெளியிடச் சித்தமாயிருக்கின்றேன்.

எந்த ஸத்குரு சரணார விந்தங்களின் அநுக்கிரஹ வலிமை யொன்றி னாலேயே இந்நூல் வெளியாயிற்றோ **அவரது பாதுகைகளுக்கே அர்ப்பணம் செய்யப் பட்டது.**

ஸ்ரீ குஹாநந்த மண்டலி
கிரந்த பிரசுராலயம்,
சென்னை,
30-11.1943.

இங்ஙனம், விதேயன்,
ந. சுப்பிரமணிய அய்யர்.

# விஷய ஸூசிகை

உ

**ஸ்ரீதுர்வாஸ மஹர்ஷியால் அருளிச் செய்யப்பட்ட**

# சக்திமஹிம்ந ஸ்தோத்திரம்

(மூலமும்)

**ரஹஸ்யார்த்த விமர்சினியென்னும் விருத்தியுரையும்,**

## மங்களாசரணம்

**(அவதாரிகை)** ஸகல ஆகமங்களின் ஆசார்யர்களுக்குச் சக்கிரவர்த்தியும், ஸ்ரீ அநஸூயையின் கர்ப்பத்தில் அவதரித்த ஸாக்ஷாத் பரசிவஸ்வரூபரும் குரோதப் பட்டாரகரென்னும் திருநாமமுடையவருமான ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷியானவர், தமது ஆத்மாபின்ன ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுர ஸுந்தரீ ஸ்வரூபத்தை, ஸந்தேஹ விபரீதங்களற அபரோக்ஷமாய் நன்குணர்ந்து, அவ்வநுபவ மஹிமையை முமுக்ஷக்களினிடத்துள்ள பெருங் கருணையால் ஸ்தோத்திரம் செய்ய நினைத்துப் பெரியோர்களின் ஸம்பிரதாயத்தின்படி, ஆரம்பத்தில் இஷ்டதேவதாஸ்மரணரூப மங்கலம் இயற்றுகின்றனர்.

**मातस्ते महिमा वक्तुं शिवेनापि न शक्यते ।**
**भक्त्याहं स्तोतुमिच्छामि प्रसीद मम सर्वदा ॥ १ ॥**

**மாதஸ்தே மஹிமா வக்தும் சிவேனாபி ந சக்யதே** ।
**பக்தியாஹம் ஸ்தோது - மிச்சாமி ப்ரஸீத மம ஸர்வதா** ॥ 1

**(பதவுரை)** (**மாத**:) = தாயே!; (**தே**) = உங்களுடைய; (**மஹிமா**) = பெருமை; (**சிவேன அபி**) = பரமசிவனாலுங் கூட; (வக்தும்) = எடுத்துக் கூறுவதற்கு; (**ந சக்யதே**) = இயலாது - என்றாலும்; (**பக்த்யா**) = பக்தியால்; (**அஹம்**) = நான்; (**ஸ்தோதும்**) = ஸ்தோத்திரம் செய்ய; (**இச்சாமி**) = விரும்புகிறேன்; (**மம**) = எனக்கு; (**ஸர்வதா**) = எப்பொழுதும்; (**ப்ரஸீது**) = அருள்புரிய வேண்டும்.

**பக்தியா** - தேவியின் பெருமை எடுத்துக்கூற இயலாது எனினும் பக்திக்கு வசப்பட்ட அவளுடைய அருளால் அது கை கூடும்.

**(தாத்பரியம்)** ஹே தாயே! உமது மஹிமையானது பரமசிவனாலும் சொல்லத்தக்கதல்ல; அப்படியிருந்தும், அடியேன் அன்பாகிய பக்தியால் உமது ஸ்வரூபமாகும் மஹிமையை ஸ்தோத்திரம் செய்ய விரும்புகின்றேன், ஆதலின் அடியேனால் செய்யமுடியாத காரியத்தை நீயே பரி பூர்த்திசெய்து என்னை அநுக்கிரஹிப்பாயாக.

**(விசேஷவுரை)**

**नमस्कारस्तथाशीश्च सिद्धान्ता क्तः पराक्रमः ।**
**विभूतिः प्रार्थना चेति पडि स्तोत्रलक्षणम् ।।**

என்னும் பிரமாணத்தின்படி ஸ்தோத்திரமென்பது, நமஸ்காரம், ஆசீர்வாதம், ஸ்வரூப ஸித்தாந்தம், பராக்கிரம வர்ணனை, மஹிமையின் வர்ணனை. பிரார்த்தனை யென அறுவகைப்படும்.

இங்கே கூறப்பட்ட மங்கலமானது ஸ்வரூப ஸித்தாந்தம், மஹிமாவர்ணனம், பிரார்த்தனை யென்னும் மூன்று பகுதிகளையும் உடையதாகும்.

மனோ வாக்குக்களுக்கெட்டாத பரதேவதையின் மஹிமையை எங்ஙனம் வர்ணிக்க முடியமெனின், பக்தியினால் ஒருகால் முடியலாம். ஏனெனின், **ஸ்வஸ்வரூபாநு ஸந்தானமே** பக்தியெனப்படும். பக்தி மாத்திரம் போதாது; அஹம்பத லக்ஷயார்த்த ஆத்மாபின்ன பரதேவதையின் கடாக்ஷமும் வேண்டும். இது ஸத்குருவின் அநுக்கிரஹத்தால் மட்டுமே ஸித்திப்பதாகும். (1)

**(அவதாரிகை)** தமது ஆத்மமந்த்ர அதிஷ்டான தேவதையாகிய ஸ்ரீமஹாத்ரிபுர ஸுந்தரியின் வித்யாஸ்வரூப ஸூக்ஷ்மரூபமானது தமது ஹ்ருதயத்தில் நன்கு ஸ்புரிக்க வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றனர்.

## மஹாஷோடசீ மந்த்ரோத்தாரம்.

**श्रीमातस्त्रिपुरे पगत्परतरे देवि त्रिलोकीमहा**
**सौन्दर्यार्णवमन्थनोद्भवसुधाप्राचुर्यवर्णोज्ज्वलम् ।**
**उद्यद्भानुसहस्रनूतनजपापुष्पप्रभं ते वपुः**
**स्वान्ते मे स्फुरतु त्रिकोणनिलयं ज्योतिर्मयं वाङ्मयम् ।।२ ।।**

**ஸ்ரீமாதஸ்-த்ரிபுரே பராத்பரதரே தேவி த்ரிலோகீமஹா-**
**ஸௌந்தர்யார்ணவ-மந்த்தனோத்பவஸுதா-ப்ராகர்ய-வாணோஜ்ஜ்வலம்**
**உத்யத்பானு-ஸஹஸ்ர-நூதன-ஜபாபுஷ்பப்ரபம் தேவபு:**
**ஸ்வாந்தே மே ஸ்ப்புரது த்ரிகோணநிலயம் ஜ்யோதிர் மயம் வாங்மயம்**
**|| 2 ||**

**(பதவுரை)** (**ஸ்ரீமாத**:) = தாயே!; (**த்ரிபுரே**) = ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமென்று மூன்று உடல்களாகிய புரங்களிலும் உறைபவளே!; (**பராத்பரதரே**) = மேலானதற் கெல்லாம் மேலானவளே!; (**தேவி**) = பிரகாசிப்பவளே! (**த்ரிலோகீ-**

**மஹாஸௌந்தர்ய-அர்ணவ-மந்தன-உத்பவ-ஸுதா-ப்ராசுர்ய-வர்ண-உஜ்ஜ்வலம்**) = முவ்வுலகிலுமுள்ள அழகின் பெருமைக் கடலைக் கடைந்ததில் உதித்த அமுதத்தைப் போன்ற வண்ணத்துடன் பிரகாசிப்பதும்; (**உத்யத்-பானு-ஸஹஸ்ர-நூதன-ஜபா-புஷ்பப்ரபம்**) = ஆயிரம் உதய சூரியர்களைப் போலும் புதிய செம்பருத்திப் பூவைப் போலும் பிரபை உடையதும்; (**த்ரிகோண நிலயம்**) = முக்கோணத்தில் இருப்பிடத்தை உடையதும்; (**ஜ்யோதிர்மயம்**) = ஒளி வடிவானதும்; (**வாங்மயம்**) = வாக்கு வடிவானதுமான; (**தே**) = **உமது**; (**வபு:**) = ஸ்வரூபம்; (**மே**) = எனது; (**ஸ்வாந்தே**) = உள்ளத்தில்; (**ஸ்ப்புரது**) = தெளிவாய் விளங்கட்டும்.

**இதில் மஹாஷோடசீ மந்தரோத்தாரம்: - ஸ்ரீ** = ஸ்ரீம் | **மா** = ஹ்ரீம் | (**அத:** = பிறகு) **த்ரிபுரா** = க்லீம், ஐம், ஸௌ: | (**ஏ** = ஆ + ஈ) ஈ = ஓம் | **பராத்** = ஹ்ரீம் | **பரதரா** = ஸ்ரீம் | (**தேவி** = தேவியே) **த்ரிலோகீ** = க5, ஹ6 ஸ4 | **மஹாஸௌந்தர்ய** = ஸௌ: | **அர்ணவமந்தனோத்பவ-ஸுதா-ப்ராசுர்ய-வர்ணோஜ்ஜ்வலம்** = ஐம்) **உத்யத்பானு ஸஹஸ்ர நூதன-ஜபாபுஷ்பப்ரபும்** = க்லீம் | **தே வபு:** = ஹ்ரீம் | (**ஸ்வாந்தே** = இதன் இறுதியில்) **மே** = மா + ஈ = ஸ்ரீம் || **ஈ** = காமகலை; மும்மூன்றாயுள்ளதெல்லாம் லயிக்கும் துரீயஸ்தானம் 'த்ரிகோண நிலயம் ஜ்யோதிர் மயம் வாங்மயம்', மஹாஷோடசியும் காமகலையில் ஒடுங்கும்.

**(தாத்பரியம்)** ஒ லோகமாதாவே! ஸ்தூல ஸூக்ஷ்ம காரண மென்னும் மூன்று சரீரங்களிலும் அதிஷ்டானமாய் விளங்குபவளே!! ஸர்வோத்க்ருஷ்டமாய்ப் பிரகாசிப்பவளே!! முவ்வுலகங்களிலுமுள்ள அளவுகடந்த ஸௌந்தர்பமாகும் ஸமுத்திரத்தைக் கடைய, அதினின்றுண்டான பரம ஸாரமான அம்ருதம் போல் வெண்மை நிறமுள்ளதும், ஏக காலத்திலுதித்த பல்லாயிரம் ஸூர்யர்களைப் போலவும், புதிதாக மலர்ந்த செம்பருத்தி மலரைப் போலவும் சிவந்த நிறமுள்ளதும், மூன்று லோகங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமாயுள்ளதும், ஸூர்ய சந்திர அக்கினிமய தேஜோரூபமாக விளங்குவதும், சப்த ஸ்வரூபமாயிருப்பதுவுமான உமது வித்யா (மந்த்ரா) த்மக ஸூக்ஷ்மரூபமானது எனது ஹ்ருதயத்தில் நன்கு ஸ்புரிக்கட்டும்.

**(விசேஷவுரை)** இந்த ஶ்லோகத்தினால், மஹர்ஷி துர்வாஸர் ஸ்ரீ வித்தை யாகும் மஹா ஷோடசியையும், காமகலா ஸ்வரூபத்தையும் உத்தாரம் செய்கின்றனர். அதன் விமர்ஶமாவது: -

**त्रिकोणनिलयं ज्योतिर्मयं वाङ्मयम् ।**

ஸ்வர்க்க மர்த்திய பாதாளமென்னும் மூன்று லோகங்களும் அல்லது ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமென்னும் மூன்று சரீரங்களும் நிஶ்ஶேஷமாய் லயிக்கும் இடம் துரீய ஸ்வரூப காமகலையேயாகும். அது **ஜ்யோதிர்மயம்** = ஸோம ஸூர்யாக்னி ஸ்வரூபமானது; **வாண்மயம்** = பஶ்யந்தீ, மத்யமா, வைகரீ என்னும் வாக்குக்களுக்குக் காரணமானது. **த்ரிகோணநிலயம்** = த்ரிகோணம் பீஜத்திரய வடிவமானது. அது ஒடுங்கும் ஸ்தானம் மஹாபிந்து; மஹாபிந்துவே காமகலை.

ஆகவே இந்த ஶ்லோகத்தால் மஹா ஷோடசீ வித்தையும், காமகலா வித்தையும் உத்தாரம் செய்யப்பட்டது அறியத்தக்கது. (2)

**(அவதாரிகை)** இந்த ஶ்லோகத்தில், மூலாதார சக்கிரத்திலுள்ளவளும், ஸகலமான வித்தைகள், மந்த்ரங்கள் சக்கிரங்கள் முதலியவற்றிற்குக் காரண ஸ்வரூபமானவளும், ஆதாராதி ஷட் சக்ரங்களைப் பேதித்துக்கொண்டு மேலே போய், ஸஹஸ்ரார கமல கர்ணிகையிலுள்ள திரிகோண ஶிம்ஹாஸனத்தில் பிரகாசிக்கும் சித்ரூபிணியுமான குண்டலினீ சக்தி ஸ்துதிக்கப்படுகின்றனள்.

## குண்டலினீ தியானம்

**आदिक्षान्तसमस्तवर्णसुमणिपोते वितानप्रभे**
**ब्रह्मादिप्रतिमाभिकीलितषडाधाराब्जकक्षोन्नते ।**
**ब्रह्माण्डाजमहासने जननि ते मूर्तिं भजे चिन्मयीं**
**सौषुम्नायतपीतपङ्कजमहामध्यत्रिकोणस्थिताम् ॥ ३ ॥**

**ஆதிக்ஷாந்த-ஸமஸ்த-வர்ண-ஸுமணி-ப்ரோதே விதாநப்ரமே**
**ப்ரஹ்மாதி-ப்ரதிமாபிகீலித-ஷடாதாராப்ஜ-கக்ஷோத்நதே ।**
**ப்ரஹ்மாண்டாப்ஜ-மஹாஸனே ஜனனி தே மூர்த்திம் பஜே சின்மயீம்**
**ஸௌஷும்னாயத-பீதபங்கஜ-மஹாமத்த்ய-திரிகோண-ஸ்த்திதாம்** ॥ 3 ॥

**(பதவுரை)** (**ஜனனி**) = தாயே!; (**ஆதிக்ஷாந்த**-) = அ முதல் க்ஷ வரை உள்ள; (**ஸமஸ்தவர்ண**-) = எல்லா எழுத்துக்களாகிற; (**ஸுமணி ப்ரோதே**) = நல்முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்ற; (**விதான-ப்ரபே**) = மேல் விரிப்புடன் கூடியதும்; (**ப்ரஹ்மாதி-ப்ரதிமாபிகீலித**-) = பிரம்மா முதலியவர்களின் உருவங்கள் விளங்கும்; (**ஷபதாராப்ஜ-கக்ஷ-உந்நதே**) = ஆறு ஆதார சக்கரங்களின் வரிசைக் கெல்லாம் மேலே விளங்குவதுமான; (**ப்ரஹ்மாண்டாப்ஜ-மஹாஸனே**) = பிரம்மரந்திரத் தாமரையாகிற சிறந்த ஆஸனத்தில்; (**ஸௌஷும்னாயத-பீதபங்கஜ-மஹாமத்த்ய**) = ஸுஷும்னா நாடியில் விரிந்த சிறந்த மஞ்சள் தாமரையின் மத்தியில்; (**த்ரிகோணஸ்த்திதாம்**) = முக்கோணத்தில் இருந்து எழுந்த; (**சின்மயீம்**) = ஞானமயமான; (**தே**) = உமது; (**மூர்த்திம்**) = வடிவத்தை; (**பஜே**) = தியானம் செய்கிறேன்.

**மஹா ஆஸனே** - அகுல ஸஹஸ்ராரமாகிற சிறந்த ஆஸனத்தில், **பீதபங்கஜ- மஹாமத்தய** - மஞ்சள் நிறமான ஸஹஸ்ரதளகமலம் மூலாதாரத் திற்குக் கீழே உள்ள குல ஸஹஸ்ராரம். இதன். நடுவில் உள்ள முக்கோணத்திற்கு அ - க - த (अ - क - थ) ஆஸனம் என்று பெயர். இங்கிருந்து குண்டலினீ சக்தியை

எழுப்பிச் சிரசின் உச்சியில் உள்ள அகுல ஸஹஸ்ராரத்திற்கு அழைத்து வந்து தியானம் செய்வது **சிவயோகம்** எனப்படும்.

**ஷடாதார** - மூலாதாரம், ஸ்வாதிஷ்ட்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதார சக்கரங்கள்.

**(தாத்பரியம்)** ஹே ஜனனீ! அ முதல் க்ஷ வரையிலுள்ள ஐம்பத்தோர க்ஷரங்களாகிற நல்ல முத்துக்களாலலங்கரிக்ப்பட்ட மேல் தட்டோடு கூடி விளங்குவதும், மூலாதாராதி ஷட் சக்கிரங்களின் நடுவில் பிரஹ்மா விஷ்ணு முத'லிய தேவர்கள் அமர்ந்து விளங்க அவற்றிற்கெல்லாம். உயர விளங்குவதும் ஆகிய பிரஹ்மரந்திர ஸ்தானத்திலுள்ள ஸஹஸ்ரதள கமல கர்ணிகையில், மஹாத் திரிகோணாகாரமாயுள்ள பெரிய ஆஸனத்தில், ஸுஷும்நா நாடிக்குச் சம்பந்தப் பட்டதும், மஞ்சள் நிறமுள்ளதுமான பெரிய தாமரைப் புஷ்பத்தின் கர்ணிகையிலுள்ள த்ரிகோணத்தில் (பிந்து ரூபமான ஸ்வயம்பு லிங்கத்தைச் சுற்றிக்கொண்டு) இருக்கிறதும், சித்ஸ்வரூபமானதுமான **குண்டலினீ** யென்னும் உமது ஸ்வரூபத்தைத் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை)** ஸுஷும்நா நாடியானது பிரஹ்மரந்த்ரத்திலுள்ள ஸஹஸ்ரதள கமலத்தின் நாளமா (தண்டா)க விளங்குகின்றது. மூலாதாரம் முதல் ஆக்ஞாந்தமான சக்கிரங்களில் அகாராதி க்ஷகாராந்தமான மாத்ருகைகள் விளங்குகின்றன. (இம்மாத்ருகைகளை மணிகளாகவும், ஸுஷும்நா நாடியை நூலாகவும், இரண்டையும் சேர்த்து அக்ஷமாலையாகவும் பாவித்து ஜபம் செய்பவர் வித்தியா பாரங்கதராவர்.)

மஹா ஆஸனமென்பது ஸஹஸ்ராரம்.

மஞ்சள் நிறமான ஸஹஸ்ரதள கமலம் மூலாதாரத்திற்குக் கீழுள்ள குளஸஹஸ்ராரமாகும். இது தான் குண்டலினீ ஸ்தானம். இதன் நடுவிலுள்ள முக்கோணத்திற்கு அ - க - த (अ - क - थ) ஸன மென்று பெயர். இக் குளஸஹஸ்ரா ரத்திலிருந்து குண்டலினி சக்தியை எழுப்பி மூலாதாரம் முதலிய ஷட்சக்கிரங்களின் மூலமாய்ச் செலுத்திப் பிரஹ்மரந்த்ரத்திலுள்ள அகுள ஸஹஸ்ராரத்தில் சித் கலாஸ்வரூபமாய்த்தியானம் செய்தல் மிகச்சிறப்பானது.

இதற்குத்தான் **சிவயோக** மென்று பெயர். ஜீவப்பிரஹ்மைக்கிய மென்பதுவு மிதுவேயாகும். இத்தகைய குலங்குல ஐக்கியத்தினால் சித்சந்திர மண்டலமாகும் பிரஹ்மாண்டத்திலிருந்து சைதன்யாம்ருதமானது அகண்டமாய்ப் பிரஸரித்து ஒவ்வொரு சக்கிரத்திலுமுள்ள தேவதையை அபிஷேகம் செய்வித்து, அந்த அந்த ஆதாரங்களில் பிந்துக்களாக அமைகின்றது. இந்த சைதன்யாம்ருதபிந்துக்களே அகாராதி க்ஷகாராந்தமான அக்ஷரங்களாகும். இவைகளே நல்ல முத்துக்களெனக்

கூறப்பட்டது. இம்முத்துக்கள் ஸுஷும்நையாகும் பிரஹ்ம நாடிஸூத்திரத்தில் கோக்கப் பட்டிருக்கின்றன.

இதன் சிகரத்தில் விளங்குவது பிரஹ்மாண்ட கமலம். இக்கமலத்தின் மத்தியில் பிரஹ்ம சக்தியாகும் சித்கலையைத் தியானித்தலே **ஸமயமத ரஹஸ்யமாகும்**. விஶ்வ ரூபிணியாயுள்ள குண்டலினீ சக்தியை விஶ்வ ஸாக்ஷிணியாயும் விஶ்வாதிஷ்டாத்திரியாயுமுள்ள சிதாநந்தஸ்வரூபமாய்த் தியானிக்கும் நிதித்தியாசனம் இந்த ஶ்லோகத்தில் ஸூசிக்கப் பட்டுள்ளது உணரத்தக்கது.

அன்றியும், அந்தர்மாத்ருகா யோகினீ நியாசங்களும் இதனால் குறிப்பிடப் படுகின்றன. (3)

## ஷடாதார விளக்கம்

| 1 | மூலாதாரம் | நான்கு தளம் | क முதல் स வரை | 4 | மஹாகணபதி |
|---|---|---|---|---|---|
| 2 | ஸ்வாதிஷ்டானம் | ஆறு தளம் | ब முதல் ल வரை | 6 | பிரஹ்மா |
| 3 | மணிபூரகம் | பத்து தளம் | ड முதல் फ வரை | 10 | விஷ்ணு |
| 4 | அநாஹதம் | துவாதச தளம் | क முதல் ठ வரை | 12 | ருத்ரன் |
| 5 | விசுத்தி | ஷோடச தளம் | अ முதல் अः வரை | 16 | மஹேஸ்வரன் |
| 6 | ஆக்ஞை | இரண்டு தளம் | ह् முதல் क्ष வரை | 2 | ஸதாசிவன் |

**குறிப்பு:** - மாத்ருகைகள் अ முதல் क्ष வரையில் ஐம்பத்தொன்றாகும். மூலாதாரம். முதல் ஆக்ஞைவரை ஆறு ஆதாரங்களிலும் ஐம்பது மாத்ருகைகளே விளங்குகின்றன. ल காரம் ल காரத்தில் அந்தர்ப்பூதமாய் இருக்கின்றதென்பது உணரத்தக்கது.

**(அவதாரிகை)** ஆசிரியர் இந்த ஶ்லோகத்தினால் குண்டலினீ சக்தியை ஸஹஸ்ரதள கமலத்தில் தியானம் செய்யும் விதத்தைக் கூறுகின்றனர்.

## குண்டலினீ தியானம்

**या बालेन्दुदिवाकराक्षिमधुरा या रक्तपद्मासना**
**रत्नाकल्पविराजिताङ्गलतिका पूर्णेन्दुवक्त्रोज्ज्वला ।**
**अक्षरक्सृणिपाशपुस्तककरा या बालभानुप्रभा**
**तां देवीं त्रिपुरां शिवां हृदि भजेऽभीष्टार्थसिद्ध्यै सदा ॥४ ॥**

**யா பாலேந்து-திவாகராக்ஷிமதுரா யா ரக்தபத்மபாஸனா**
**ரத்னாகல்ப-விராஜிதாங்க-லதிகா பூர்ணேந்து-வக்த்ரோஜ்ஜ்வலா ।**
**அக்ஷஸ்ரக்-ஸ்ருணி-பாச புஸ்தக-கரா யா பாலபானுப்ரபா**
**தாம் தேவீம் த்ரிபுராம் சிவாம் ஹ்ருதி பஜேபீஷ்டாரித்த-ஸித்த்யை ஸதா ॥ 4 ॥**

**(பதவுரை)** (**யா**) = எவள்; (**பால-இந்து**-) = இளம் பிறைச்சந்திரனையும்; (**திவாகர**-) = சூரியனையும்; (**அக்ஷி-மதுரா**) = கண்களாய்க் கொண்டு இனிமையுடன் விளங்குபவளோ; (**யா**) = எவன்; (**ரக்த பத்மாஸனா**) = செந்தாமரையில் வீற்றிருப்பவளோ; (**ரத்னாகல்ப-விராஜித-அங்கலதிகா**) = இரத்தினாபரணங்களால் பிரகாசிக்கும் கொடி போன்ற அங்கங்களை உடையவளோ; (**பூர்ண-இந்து-வக்த்ர-உஜ்ஜ்வலா**) = பூரண சந்திரனை யொத்த முகத்துடன் பிரகாசிப்பவளோ (**அக்ஷஸ்ரக்**) = அக்ஷமாலை; (**ஸ்ருணி**) = அங்குசம் (**பாச**-) = பாசம்; (**புஸ்தக**-) = புஸ்தகம் ஆகியவற்றை; (**கரா**-) = கைகளில் உடையவளோ; (**யா**) = எவள்; (**பால-பானு-ப்ரபா**) = இளஞ்சூரியனைப் போன்ற பிரகாசமுடையவளோ; (**தாம் தேவீம் த்ரிபுராம் சிவாம்**) = அந்தப் பரமமங்களஸ்வரூபிணியான திரிபுராதேவியை (**அபீஷ்டார்த்த-ஸிந்த்யை**) விரும்பிய பொருள் கைகூடுதற்கு; (**ஸ்தா**) = எப்பொழுதும்; (**ஹ்ருதி**) = இருதயத்தில்; (**பஜே**) போற்றுகின்றேன்.

இந்த சுலோகம் சில பாடங்களில் இல்லை.

**ரக்தபத்மாஸன** - மூலதாரத்திற்குக் கீழுள்ள குலஸஹஸ்ராரம் சிவப்புத் தாமரையாக இங்கு கூறப்படுகிறது. 3 வது சுலோகத்தில் இதுவே மஞ்சள் எனக் கூறப்பட்டது. குண்டலினீ உறங்கும் போது இது மஞ்சள் நிறம்; விழிக்கும் போது அதுவே சிவப்பாக மாறுகிறது.

**(தாத்பரியம்)** எந்த தேவியானவள் பாலசந்திரனையும் பால ஸூர்யனையும் நேத்திரங்களாக வுடைத்தாய் விளங்குகின்றனளோ, எந்த தேவியானவள் செந்தாமரை மலரில் அமர்ந்து, தனது அங்கங்களில் நவரத்தினகசிதமான ஆபரணங்களை அணிந்துள்ளவளோ, எந்த தேவியானவள் பூர்ண சந்திரனை யொத்த முகமண்டலத்தோடு பிரகாசிக்கின்றனளோ, எவள் தனது கரங்களில் அக்ஷமாலை, அங்குசம், பாசம், புஸ்தகம் என்னும் இவைகளைத் தரித்துள்ளவளோ, எவள் பாலசூரியனை யொத்த அருண நிறத்தோடு கூடியவளோ, எவள் ஸர்வ மங்களங்களையும் அருள்பவளோ அத்தகைய திரிபுரசுந்தரியை எனது அபீஷ்ட ஸித்தியின் பொருட்டு ஸதா எனது ஹ்ருதயத்தில் பஜிக்கின்றேன்.

**(விசேஷவுரை)** இந்த ஶ்லோகம் சில பிரதிகளில் கிடையாது. **ரக்தபத்மாஸனை:** மூலாதாரத்திற்குக் கீழுள்ள **அத⁴ஸ்ஸஹஸ்ராரம்** ரக்தவர்ணம். இது குளபத்மம். இதில் வஸிப்பவள் குண்டலினீ சக்தியாகும். முன் ஶ்லோகத்தில்

குளபத்மத்தை மஞ்சள் நிறமாகக் கூறப்பட்டுள்ளதே; அது ஸரியா? இதுஸரியா என்னும் சங்கை யாருக்கு முண்டாதல் ஸஹஜம். குண்டலினீ சக்தி தூங்கும் போது குலஸஹஸ்ராரம் மஞ்சள் நிறமாகவும், விழிக்கும் போது ரஜோ குணத்தினால் அதுவே சிவப்பாகவும் மாறுகின்றது.

இடை, பிங்களை யென்னும் சந்திரசூர்ய நாடிகளே கண்களாம்.
ஷடாதாரங்களே அங்கங்களாகும்.
ஆதாரங்களிலுள்ள அக்ஷரங்களே இரத்தினங்களாலான ஆபரணங்களாம்.
அந்தக்கரணமே ஆயுதங்களாகும்.
அக்ஷமாலை = சித்தம்.
அங்குசம் = அஹங்காரம்.
பாசம் = மனம்.
புஸ்தகம் = புத்தி.
இளஞ்சூரியனை யொத்த சிவப்பு நிறம் ஞானம் அல்லது விமர்சமாம். (4)

(**அவதாரிகை**) பகவான் துர்வாஸ மஹர்ஷியானவர், ஸகல சப்த ஜாலங்களையும் பிரகாசிக்கச் செய்யும் ஞான பானுவை யொத்ததும், **ஸங்கேதஸார** மென்னும் மஹா வித்தையின் முதலாவது பீஜமானதுமான **வாக்பவ** பீஜத்தை இந்த ஶ்லோகத்தில் ஸ்தோத்திரம் செய்கின்றனர்.

## வாக்பவ பீஜம்

**वन्दे वाग्भवमैन्दवात्मसदृशं वेदादिविद्यागिरो**
**भाषा देशसमुद्भवाः पशुगताश्छन्दांसि सप्त स्वरान् ।**
**तालान्पञ्च महाध्वनीन्प्रकटयत्यात्मप्रकाशेन य**
**नदीजं पदवाक्यमानजनकं श्रीमानके ते परम् ।। ५ ।।**

**வந்தே வாக்பவ-மைந்தவாத்ம-ஸத்ருசம் வேதாதி-வித்யா-கிரோ**
**பாஷா தேசஸமுத்பவா: பசுகதாச்-சந்தாம்ஸி ஸப்த்ஸ்வரான் ।**
**தாளான் பஞ்ச-மஹாத்த்வனீன் ப்ரகடயத்-யாத்ம ப்ரகாசேன யத்**
**தத்பீஜம் பதவாக்ய-மான-ஜனகம் ஶ்ரீமாத்ருகே தே பரம் ॥ 5 ॥**

(**பதவுரை**) (**மாத்ருகே**!) = ஶ்ரீமாத்ருகா வடிவான தேவியே!; (**ஐந்தவாத்ம-ஸத்ருசம்**) = சந்திரனிடமிருந்து பெருகும் அமுதத்திற்கொப்பானதும்; (**வேதாதி**) = வேதம் முதலிய; (**வித்யா**) = வித்தைகள்; (**கிர**:) = வார்த்தைகள்; (**பாஷா**:) = பாஷைகள்; (**தேசஸமுத் பவா**:) = வெவ்வேறு தேசங்களில் உதித்தவை; (**பசுகதா**:) = பிராணிகளிடம் வழங்குபவை; (**ச்சந்தரம்ஸி**) = சந்தங்கள்; (**ஸப்தஸ்வரான்**) = ஸரிகமபத எனும் ஏழு ஸ்வரங்கள்; (**தாளான்**) = தாளங்கள்; (**பஞ்ச-மஹா-நவனீன்**)

= பேரீ முதலிய ஐந்து வாத்தியங்களின் தொனிகள் ஆகியவற்றை; (**ஆத்மப்ரகாசேன**) = தனது பிரகாசத்தால்; (**யத்**) = எது; (**ப்ரகடயதி**) = விளங்க வைக்கிறதோ; (**பத-வாக்ய-மான-ஜனகம்**) = பதங்கள், வாக்கியங்கள், பிரமாணங்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும்; (**ததி**) = அந்த; (**தே**) = உம்முடைய; (**பரம்**) = மேலான; (**வாக்பவம் பிஜம்**) = வாக்பவபீஜத்தை; (**வந்தே**) = வணங்குகிறேன்.

**வாக்பவபீஜம்** - இது வேதங்தளுக்குப் பிறப்பிடமாகிய விதை போன்றது. ருக்வேதம் 'அக்னிமீளே' என்றும், யஜுர் வேதம் 'இஷேத்வா' என்றும் ஸாமவேதம் 'அக்ன ஆயாஹி' என்றும் தொடங்குகின்றன. மூன்று வேதங்களின் முதல் எழுத்துக்கள் அ. இ, அ இலக்கணப்படி அ + இ = ஏ; ஏ + அ = ஐ. ஆகையால் 'ஐம்' எனும் வாக்பவ பீஜ்ம் சதுர்வேத-ஸங்கேதஸாரம் எனப்படும். அனுஸ்வாரம் (ம்) அதர்வ வேதத்தைக் குறிக்கும்.

**வாக்பவபீஜம்** - ஐம்; காமராஜபீஜம் - க்லீம்; சக்திபீஜம் - ஸௌ: இவற்றிலுள்ள மெய்யெழுத்துக்களை நீக்கினால் மிஞ்சும் சுத்தமான உயிரெழுத்துக்கள் ஐம்-ஈம்-ஔ: இது ஸங்கேத ஸார வித்யா எனப்படும்.

**பஞ்ச-மஹாத்வனீன்** - ஓ. சங்கு, பேரி, பணவம், ஆனகம், கோமுகம் - அல்லது நாதம், பிந்து, கலை முதலிய ஸுக்ஷ்ம த்வனிகள்.

**(தாத்பரியம்)** ஹே மாத்ருகா ஸ்வரூபிணியே! எந்த பீஜாக்ஷரமானது, ஸகல வேத, சாஸ்திர, ஸ்ம்ருதி, புராணாதிகளையும், ஸகல சப்தங்களையும், ஸம்ஸ்க்ருதம், பிராக்ருதம் முதலிய ஸகல பாஷைகளையும், பசு பக்ஷியாதிகளின் விவகாரங்களுக்கு யோக்கியமான சப்தங்களையும், ஸகலமான சந்தஸ்ஸுக ளையும், நிஷாதம் முதலிய ஸர்வ ஸ்வரங்களையும், த்ருவம் முதலிய ஸகல தாளங்களையும், பேரீ முதலிய பஞ்சவாத்தியங்களின் துவனிகளையும் (தனது) ஸ்வப் பிரகாசத்தால் விளக்கமுறச் செய்கின்றதோ, எது சந்திர மண்டலத்தின் அம்ருதத்திற்கு ஒப்பாயிருக்கின்றதோ, எது ஸகலமான பதங்கள், பதங்களாலாகிய வாக்கியங்கள், பிரத்தியக்ஷாதி பிரமாணங்கள் இவைகளுக்குங்காரண மாயிருக் கின்றதோ அத்தகைய மேலான வாக்பவ பீஜமாகும் உமது ஸ்வரூபத்தை நமஸ்கரிக்கின்றேன்.

**(விசேஷவுரை)** வாக்பவ பீஜம் அம்ருதஸ்வரூபமானதென்பது ஸம்பிரதாய ரஹஸ்யமாகும்.

வேதங்களுக்குப் பிறப்பிடமாயுள்ளது வாக்பவ மெனப்படும். ஆகவே சதுர்வேதங்களுக்கும் இது விதை போன்றது. இந்த பீஜத்தில் இரண்டு அகாரங்களும், ஒரு இகாரமும், ஒரு அநுஸ்வாரமும் அடங்கியிருக்கின்றன.

ஒரு அகாரம் ருக் வேதத்கையும், இகாரம் யஜுர் வேதத்தையும், மற்றொரு அகாரம். ஸாமவேதத்தையும், அநுஸ்வாரம் அதர்வண வேதத்தையும் குறிப்பிடு கின்றன. ஆதலின் இந்த பீஜம் **சதுர்வேத ஸங்கேத ஸார** மெனப்படும்

ஸங்கேதம் என்பது குறியாகும். லிங்கமென்பது மிதுவேயாம். உபநிஷத் பிரதியாத்தியமாயுள்ள பிரஹ்ம வித்தை (ஸ்ரீ வித்யா பஞ்சதக்ஷக்ஷரி) யானது மூன்று கூடங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இம்மூன்று கூடங்களுக்கும் ஸங்கேதமாய் ஏற்பட்டவை **ந்யக்ஷரி** யென்னும் மூன்று பீஜங்கள். இவை **வாக்பவ**, **காமராஜ**, **சக்தி** பீஜங்களெனப்படும். இவற்றிலுள்ள மெய்யெழுத்துக்களை நீக்கிய போது மிஞ்சும் சுத்தமான ஸ்வரங் (உயிரெழுத்துக்) களுக்கு **ஸங்கேதஸார** வித்தையென்று பெயர். அது ऐ ई औः என்பதாம். இவற்றுள் முதலாவது வாக்பவ பீஜமென்பது இதில் வர்ணிக்கப்பட்டுள்ளது. (5)

**(அவதாரிகை)** முன் ஶ்லோகத்தில் ஸங்கேதஸாரவித்தையின் முதலாவது பீஜமான வாக்பவத்தைத் தியானித்து அதே ஸ்வரூபமான பாலா பரமேஶ்வரி வித்தையின் ஆத்ய பீஜத்தை இதில் ஸ்துதிக்கின்றார்.

## வாக்பவ பீஜம்

**त्रैलोक्यस्फुटमन्त्रतन्त्रमहिमा स्वात्मोक्तिरूपं विना**
**यद्बीजं व्यवहारजालमखिलं नास्त्येव मातस्तव ।**
**तजाप्यसरणप्रसक्तसुमतिः सर्वज्ञतां प्राप्य कः**
**शब्दब्रह्मनिवासभूतवदनो नेन्द्रादिभिः स्पर्धते ॥ ६ ॥**

**த்ரைலோக்ய-ஸ்ப்புட-மந்த்ர-தந்த்ர-மஹிமா ஸ்வாத்மோக்தி ரூபம் விநா**
**யத்பீஜம் வ்யவஹாரஜால-மகிலம் நாஸ்த்யேவ மாதஸ்தவ ।**
**தஜ்ஜாப்ய-ஸ்மரண-ப்ரஸக்த-ஸுமதி: ஸர்வஜ்ஞுதாம் ப்ராப்ய க:**
**சப்தப்ரஹ்ம-நிவாஸபூத-வதனோ நேந்த்ராதிபி: ஸ்பர்த்ததே ॥ 6 ॥**

**(பதவுரை)** (**மாத:**) = தாயே!; (**தவ**) = உம்முடைய; (**ஸ்வாத்மோக்தி ரூபம்**) = ஸ்வரூபத்தை விளக்கும் வடிவினதான; (**யத்பீஜம் விநா**) = எந்த வாக்பவம் எனும் பீஜாக்ஷர மந்திரமில்லாமல்; (**த்ரைலோக்யஸ்ப்புட-மந்த்ர-தந்த்ர-மஹிமா**) = முவ்வுலகிலும் விளங்கும் மந்திரதந்திர மகிமைகளும்; (**வ்யவஹார-ஜாலம் அகிலம்**) = உலக வியாபாரக் கூட்டமனைத்தும்; (**நாஸ்தி ஏவ**) = இருக்கவே இயலாதோ; (**தத்**) = அதை; (**ஜாப்ய-ஸ்மரண-ப்ரஸக்த-ஸுமதி:**) = ஜபிப்பதிலும் தியானிப்பதிலும் ஆழ்ந்த பற்றுக் கொண்ட புத்திமான்; (**க:**) = எவன் தான்; (**ஸர்வஜ்ஞு தாம் ப்ராப்ய**) = அனைத்தையும் அறியும் திறமை படைத்து; (**சப்தப்ரஹ்ம-நிவாஸ்-**

**பூத-வதன:**) = சப்தப் பிரம்மத்திற்கு வாசஸ்தானமாய் விளங்கக் கூடிய முகத்தையும் படைத்து; (**இந்தரா திபி:**) = தேவேந்திரன் முதலியவர்களால்; (**ந ஸ்பர்த்ததே**) = பொறாமைப்படக் கூடியவனாயில்லாமல் போவான்?

**ஜபம்** - ரிஷி சந்தஸ் தேவதை முதலிய நியாஸங்களோடு உட்கார்ந்தோ நின்றுகொண்டோ செய்யும் மந்திர ஆவிருத்தி.

**ஸ்மரணம்** - நடக்கும்போதும் உட்கார்ந்திருக்கும் போதும் படுத்திருக்கும் போதும் எப்போதும் மனதில் செய்யும் மந்திர ஆவிருத்தி.

ஸங்கேதஸார வித்தையின் முதல் பீஜமும், பாலா மந்திரத்தின் முதல் பீஜமுமாகிய வாக்பவ பீஜம் இந்த சுலோகத்திலும் போற்றப்படுகிறது.

**(தாத்பரியம்)** ஓ மாதாவே! உம்முடைய ஸ்வரூபமான வித்தையின் முதலாவதாகிய வாக்பவமென்னும் பீஜமன்றி ஒருவனாவது முவ்வுலகங்களிலுள்ள தேவாஸுர மனுஷ்யர்களை ஸந்தோஷப்படுத்தக்கூடியதும், பிரமிக்கச் செய்யக் கூடியதுமான மந்த்ர தந்த்ர ஸாமர்த்தியங்களையடைய முடியாது. உமது வாக்பவ பீஜ ஸாதனமன்றி ஒருவிதமான காரியத்தையும் செய்யமுடியாது. இத்தகைய பெருமை வாய்ந்த பீஜாக்ஷரத்தை ஸர்வகால ஸர்வ அவஸ்தைகளிலும் ஸ்மரிப்பதால், ஸாதகர்கள். ஸர்வ சாஸ்திரங்களிலும் பற்றுதலையும் பரிசயத்தையும் பெற்று ஸர்வக்ஞராய் விளங்குவார்கள். அவர்களின் முகங்கள் சித் சக்தியின் நிவாஸஸ்தலமாக விளங்கும். இத்தகைய உபாஸகர்களைப் பார்த்து இந்திராதி தேவதைகளும் ஈர்ஷை (பொறாமை) யுடையவராவார்கள்.

**(விசேஷவுரை)** வாக்பவ பீஜோபாஸனையால் ஸர்வசாஸ்திர பாண்டித்தியமும், மஹா காவ்யங்களையியற்றும் ஸாமர்த்தியமும் ஏற்படுவது சாஸ்திர ஸித்தாந்தமும் அநுபவமுமாகும். மந்த்ர ஸாமர்த்தியம் = சாபாநுக்கிரஹம் முதலியன; தந்த்ரஸாமர்த்தியம் = வியாக்கியானம் செய்தல். சாஸ்திரங்களில் விதித்துள்ளபடி தக்க காலத்தில் ரிஷி, சந்தஸ் முதலிய அங்கங்களோடு செய்யும் மந்த்ராவர்த்திக்கு ஜபமென்று பெயர்; நடக்கும் போதும், படுத்துள்ள போதும், உட்கார்ந்திருக்கும் போதும். செய்யும் மந்த்ரா வர்த்திக்கு **ஸ்மரண**மென்று பெயர். இது மானஸிகமாகவே இருத்தல் வேண்டும். வாசிகம், உபாம்சு, மானஸிகம் என ஜபம் மூன்று வகைப்படும். இவற்றுள் மானஸீகமே மிகச் சிறந்தது. ஸ்மரண ரூபமான இந்த மானஸிக ஜபத்தால் உபாஸகனது சித்தத்தில் தேவியின் ஸாந்நித்தியம் எற்படுகின்றது. வாகிஸ்வரியின் ஸாந்நித்தியத்தால் ஸகல வித்தைகளும் அவனுக்கு எளிதில் ஸ்பரிக்கின்றன. (6)

**(அவதாரிகை)** முன் ஶ்லோகத்தில் வாக்பவ பீஜத்தின் அதிதேவதையாகும் வாகீஶ்வரியைத் துதித்து. இதில் வாக்பவ பீஜத்தின் மூலகாரணமாகும். மூல குலகுண்ட த்ரிகோணாதிஷ்டாத்ரியாகும் ஸமஷ்டி குண்டலினீசக்தியைத் துதிக்கின்றனர்.

## வாக்பவ பீஜம்

**मात्रा यात्र विराजतेऽतिविशदा तामष्टधा मातृका**
**शक्तिं कुण्डलिनी चतुर्विधतनुं यस्तत्वविन्मन्यते ।**
**सोऽविद्याखिलजन्मकर्मदुरितारण्यं प्रबोधाग्निना**
**भस्मीकृत्य विकल्पजालरहितो मातः पदं तद्व्रजेत् ॥७॥**

**மாத்ரா யாத்ர விராஜதேऽதிவிசதா தாமஷ்டதா மாத்ருகாம்**
**சக்திம் குண்டலினீம் சதுர்வித-தனும் யஸ்-தத்வவின்-மன்யதே ।**
**ஸோऽவித்யாகில ஜன்ம-கர்ம-துரிதாரண்யம் ப்ரபோ-தாக்னினா**
**பஸ்மீக்ருத்ய விகல்பஜால-ரஹிதோ மாத: பதம் தத் வ்ரஜேத் ॥ 7 ॥**

**(பதவுரை)** (**மாத:**) = தாயே!; (**அத்ர**) = இந்த வாக்பவ பீஜத்தில் அடங்கியுள்ள; (**யா**) = எந்த; (**மாத்ரா**) = ‘அ' எனும் மாத்ருகையானது; (**அதிவிசதா**) = மிகவும் தெளிவான ஐம்பத்தொரு அக்ஷரமாய்; (**அஷ்டதாமாத்ருகாம்**) = வசினீ முதலிய வாக் தேவதைகளின் எட்டுவர்க்கமாகவும்; (**சதுர்விததனும்**) = நான்கு விதமான ஸ்வரூபமுடைய; (**சக்திம் குண்டலினீம்**) = குண்டலினி சக்தியாகவும் உளதோ; (**தாம்**) = அதை; (**ய:**) = எந்த; (**தத்வவித்**) = தத்துவ ஞானி; (**மன்யதே**) = தியானிக்கிறானோ; (**ஸ:**) = அவன்; (**அவித்யா அகில ஜன்ம-கர்ம-துரித-அரண்யம்**) = எல்லாப்பிறவிகளிலும் செய்த கருமமும் பாவமும் ஆகிய அரண்யம் போன்ற அஞ்ஞானத்தை; (**ப்ரபோத-அக்னினா**) = ஞானமாகிற அக்னியால்; (**பஸ்மீ க்ருத்ய**) = சாம்பலாக்கி; (**விகல்ப-ஜால-ரஹித:**) = விகல்பக் கூட்டங்களற்றவனாய்; (**தத்பதம்**) = தத் எனும் நித்யானந்தப்பதவியை; (**வ்ரஜேத்**) = அடைகிறான்.

(ஐம் எனும்) வாக்பவ பீஜத்தின் முதல் பாகம் அகாரம். (ஐம் = அ + இ + அ) இது சுத்த குண்டலினீ எனப்படும். குண்டலினீ சக்திக்கு **நான்கு வடிவம்** - அக்னி குண்டலினீ, ஸூர்ய குண்டலினீ. ஸோமகுண்டலினீ, ஸமஷ்டி குண்டலினீ. இவை முறையே மூலாதாரம், இருதயம், புருவமத்தி, மூலாதாரத்திற்குக் கீழே உள்ள முக்கோணவடிவமான முக்கோணவடிவமான குல குண்டம் ஆகிய ஸ்தானங்களில் விளங்குவனவாம்.

**எட்டுவர்க்கம்:** -

| | | | |
|---|---|---|---|
| (1) | அஆ...... அம் அ: | - | வசினீவாக் தேவதை |
| (2) | க........................ ங | - | காமேச்வரீ தேவதை |
| (3) | ச....................... ஞ | - | மோதினீ தேவதை |
| (4) | ட....................... ண | - | விமலா தேவதை |
| (5) | த........................ ந | - | அருணா தேவதை |
| (6) | ப........................ ம | - | ஜயினீ தேவதை |
| (7) | ய...................... வ | - | ஸர்வேச்வரீ தேவதை |
| (8) | ஶ ................. க்ஷ | - | கௌலினீ தேவதை |

**(தாத்பரியம்)** வாக்பவ பீஜத்தில் ஸகல பிரபஞ்சத்திற்கும் மாத்ருபூதமான ஸாமவேதாதியான என்னும் "அ" என்னும் மாத்ருகையானது, மிகவும் ஸ்பஷ்டமான ஐம்பத்தோரக்ஷரமாகவும், வசினீ முதலிய வாக்தேவதைகளின் வர்க் காஷ்டக மாகவும், சிருஷ்டி, ஸம்ஹாரங்களைச் செய்யும் ஸாமர்த்தியமுடைய சக்தியாகவும், நான்குவகையான சரீரங்களோடுள்ள ஸர்வப் பிராணிகளின் பிராணிகளின் மூலாதாரத்தில் வஸிப்பதாயுமுள்ள குண்டலினீசக்தியை எவன் குருபதேசத்தின் மூலமாய் நன்குணருகின்றானோ அவன் அவித்தையையும், அதனாலேற்பட்ட பலகோடி ஜன்மங்களையும், சகல கர்மங்களையும், ஸமஸ்தமான பாபங்களையும், அக்னியால் பெருங்காட்டை யெரிப்பதுபோல், ஞானாக்னியால் பஸ்மம் செய்து ஸர்வவிகல்ப ரஹிதனாய் நித்தியாநந்தப் பெருவாழ்வை யடைகின்றான்.

**(விசேஷவுரை)** வாக்பவ பீஜத்தின் அக்ர பாகம் அகாரம். இது சுத்த குண்டலினீ ஸ்வரூபமெனப்படும். குண்டலினீ சக்திக்கு நான்கு சரீரங்கள் உண்டு. அவை அக்கினி குண்டலினீ, ஸூர்யகுண்டலினீ, ஸோமகுண்டலினீ, ஸமஷ்டி குண்டலினீ யென்பனவாம். இவை முறையே, மூலாதாரம், ஹ்ருதயம், ப்ரூமத்தியம், மூலாதார த்திற்குக்கீழுள்ள த்ரிகோணாகார குலகுண்டம் இவைகளில் விளங்குவனவாகும்.

**அஷ்டவர்க்கம்:** - **अ, क, च, ट, त, प, य, श** என்பனவாம். இவற்றிற்கு முறையே வஶிநீ, காமேஸ்வரீ, மோதனீ, விமலா, அருனா, ஜயினீ, ஸர்வேஶ்வரீ, கௌளினீ என்னும் எண்மரும் தேவதைகளாவர். இவர்கள் வாக்தேவதைகளெனப்படுவர்.

**ய: தத்வவித்** = ஸம்ப்ரதாயக் கிரமத்தில் வந்து குருமுகமாய் ஸகல பாரமார்த்திக தத்துவத்தை யறிந்தவன் எவபே னா அவன். **தத்** = அநிர்வசனீயமான.

(7)

**(அவதாரிகை)** இதில் ஸங்கேத ஸாரவித்தையின் இரண்டாவது அக்ஷரத்தைக் காமராஜ பீஜமாய் ஸ்துதிக்கின்றார்.

### காமராஜ பீஜம்

**तत्ते मध्यमवीजमम्ब कलयाम्यादित्यवर्णं क्रिया**
**ज्ञानेच्छादिमनन्तशक्तिविभवव्यक्तिं व्यनक्ति स्फुटम् ।**
**उत्पत्तिस्थितिकल्पकल्पिततनु वात्मप्रभावेन य**
**रकाम्यं ब्रह्महरीश्वरादिविबुधैः कामं क्रियायोजितैः ॥ ८ ॥**

**தத்தே மத்த்யம-பீஜ-மம்ப கலயாம்-யாதித்ய-வர்ணம் க்ரியா-**
**ஜ்ஞானேச்சாதி-மனந்தசக்தி-விபவ-வ்யக்திம் வ்யநக்தி ஸ்ப்புடம் ।**
**உத்பத்தி-ஸ்த்திதி-கல்ப-கல்பித-தனு-ஸ்வாதம-ப்ரபாவேன யத்**
**காம்யம் ப்ரஹ்மஹரீச்வராதி-விபுதை: காமம் க்ரியா-யோஜிதை:**
**॥ 8 ॥**

**(பதவுரை)** (**அம்ப**) = தாயே!; (**ஆதித்யவர்ணம்**) = சூரியனைப் போன்ற வண்ணமுடையதாயும்; (**க்ரியா-ஜ்ஞான-இச்சாதிம்**) = கிரியை ஞானம் இச்சை ஆகியவற்றிற்குக் காரணமாயும்; (**அனந்தசக்தி-விபவ-வ்யக்திம்**) = அளவற்ற சக்தியின் பெருமையின் வெளிப்பாட்டை; (**ஸ்ப்புடம்**) = தெளிவாக; (**வ்யநக்தி**) = விளக்குவதாயும்; (**உத்பத்தி-ஸ்த்திதி-கல்ப-கல்பித-தனு**) = சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரத்திற்காகக் கற்பிக்கப்பட்ட சரீர வடிவான; (**ஸ்வாமத்ப்ரபாவேன**) = தனது சொந்த மகிமையால்; (**காமம் க்ரியா-யோஜிதை:**) = விரும்பிய வண்ணம் அந்தந்தக் கருமங்களில் ஏவப்பட்ட; (**ப்ரஹ்ம-ஹரி-ஈச்வராதி-விபுதை:**) = பிரம்மா விஷ்ணு ஈசுவரன் முதலிய தேவர்களால்; (**காம்யம்**) = விரும்பிப் பூஜிக்கப்பட்டதாயும் உள்ள; (**தத்**) = அந்த; (**தே**) = உம்முடைய; (**மத்த்யம-ஜம்**); = நடு பீஜத்தை; (**கலயாமி**) = போற்றுகின்றேன்.

**மத்தியம் பீஜம்: -** (ஜம்-ஈம்-ஔ: எனும்) ஸங்கேத ஸாரவித்தையின் நடுபீஜம் ஈங்காரமாம். இதற்குக் காமகலா பீஜம் என்று பெயர். இது மூன்று பிந்துக்களின் ஸமஷ்டிவடிவானது. ई ஈம் என்ற எழுத்துக்களிலும் மூன்று பிந்துக்கள் இருக்கின்றன. மூன்று பிந்துக்களினின்று தோன்றியவை:- (i) இச்சை ஞானம் கிரியை (ii) வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ (iii) பிரம்மா விஷ்ணு ருத்ரர் (iv) அக்னி ஸூர்யன் ஸோமன் (v) அகார உகார மகாரம் (vi) ஸ்வர்க்க மத்ய பாதாளம் (vii) காமகிரி பூர்ணகிரி ஜாலந்தரம் (viii) இறந்தகாலம் நிகழ்காலம் எதிர் காலம் (ix) ருக் யஜுஸ் ஸாமம். எல்லா காமனைகளையும் பூர்த்தி செய்வதால் இது காமராஜம் எனப்படுகிறது. ஒ. 'தாம் பத்மினீம் ஈம் சரணமஹம் ப்ரபத்யே' '- ஸ்ரீஸூக்தம்..

**(தாத்பரியம்)** ஹே அம்ப! உமது வித்தையின் மத்திய பீஜத்தைத் தியானிக்கின்றேன். எத்தகையதெனின், ஆதித்தியவர்ணமானதாயும், இச்சாக்ஞானக் கிரியா சக்திகளுக்குக் காரணமானதாயும், பலகோடி சக்திகளை நன்றாய் அறியும் ஆற்றலைத் தருவதாயும் இருக்கின்றது; அன்றியும், அக் காமராஜ பீஜமானது தனது ஸ்தூலாதி மூன்று சரீரங்களிலிருந்தும் வாமாதிசக்திகளை யுண்டாக்கி, சதுர்முகப்பிரஹ்மாதி த்ரிமூர்த்திகளால் சிருஷ்டியாதிகளை யியற்றுகின்றது. ஆதலின் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய தேவர்களால் உபாஸிக்கப் பட்டுள்ளதா யிருக்கின்றது. திரிமூர்த்திகள் காமராஜ பீஜத்தை யுபாஸித்துத்தான் சிருஷ்டியாதி தொழில்களில் சமர்த்தராயினரென்பது கருத்து.

**(விசேஷவுரை)** ஸங்கேதஸாரவித்தையின் இரண்டாவது பீஜம் நான்காவது ஸ்வரமாகும் ஈங்காரமாம். இதற்குக் **காமகலா** பீஜமென்று பெயர். இது மூன்று பிந்துக்களின் ஸமஷ்டி. வடிவானது. இதன் பிரஸரணத்தினாலேயே ஸர்வப் பிரபஞ்சமும் ஏற்பட்டது. * இச்சா ஞானக்கிரியைகள், வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ, பிரஹ்ம விஷ்ணு ருத்திரர், ஸூர்ய ஸோமாக்கினிகள், அகார உகார மகாரங்கள், ஸ்வர்க்க மர்த்திய பாதாளங்கள், காமகிரி பூர்ணகிரி ஜாலந்தர பீடங்கள், ஸ்வயம்புவாதி லிங்கத்ரயங்கள், பூத பவிஷ்யத் வர்த்தமானமென்னும் காலத்திரயங்கள், வேதத்திரயங்கள், அக்கினித்திரயங்கள் முதலிய யாவும் காமகலையின் ஆத்மபிரஸரணத்தினால் தோன்றியனவேயாகும். ஸர்வகாமனை களையும் தருதலால் இதற்குக் **காமராஜ**மென்னும் பெயர் ஏற்பட்டது. இதனால் இது யாவராலும் உபாஸிக்கப்படுவதாயிற்று.

---

* இதைப்பற்றி விளக்கமாய் அறிய விரும்புவோர் சென்னை ஸ்ரீ குஹாநந்தமண்டலியின் பிரசுரமாகிய காமகலாவிலாஸம் என்னும் நூலைப் பார்க்கவும்.

---

**கலயாமி** = "ககாரலகாரங்களைக் காமகலாக்ஷரத்தோடு பொருத்துகின்றேன்" என்னும் அர்த்தமும் ஏற்படும். இதனால் ஸ்பஷ்டமான காமராஜ பீஜம் ஏற்படுகின்றது. (8)

**(அவதாரிகை)** இதில் காமராஜ பீஜத்தின் ஸாமர்த்தியம் வர்ணிக்கப்படும் மூலமாய் ஸ்துதிக்கப்படுகின்றது.

### காமராஜ பீஜம்

**कामान्कारणतां गतानगणितान्कायरनन्तैर्मही**
**मुख्यैः सर्वमनोगतैरधिगतान्मानैरनेकैः स्फुटम् ।**
**कामक्रोधसलोभमोहमदमात्सर्यादिषटकं च यत्**
**बीज भ्राजयति प्रणौमि तदहं ते साधु कामेश्वरि ॥९ ॥**

**காமான் காரணதாம் கதா-னகணிதான் காயை ரனந்தைர்-மஹீ-**
**முக்க்யை: ஸர்வ-மனோகதை-ரதிகதான் மானை-ரனேகை: ஸ்ப்புடம் |**
**காமக்ரோத-ஸலோபமோஹ-மத-மாத்ஸர்யாதி-ஷட்கஞ்ச யதி**
**பீஜம் ப்ராஜயதி ப்ரணௌமி ததஹம் தே ஸாது காமேச்வரி** || 9 ||

**(பதவுரை)** (**காமேச்வரி**) = காமேச்வரீ தேவியே!; (**அனந்தை:**) = எண்ணற்ற; (**காயை:**) = பிரம்மா முதலிய தேவர்களானும்; (**மஹீ-முக்க்யை:**) = பிருதிவீ முதலிய பூதங்களாலும்; (**ஸர்வமனோகதை:**) = எல்லோருடைய மனப் போக்காலும்; (**மானை: அநேகை:**) = சுருதி ஸ்மிருதி முதலிய பலவிதமான பிரமாணங்களாலும்; (**ஸ்ப்புடம்**) = தெளிவாக; (**அதிந்தான்**) = அறியப்படும்; (**அகணிதான்**) = கணக்கிலடங்காததும்; (**காரணதாம் கதான்**) = உலகவியாபாரத்திற்குக் காரணமாயிருப்பதும் ஆகிய; (**காமான்) =** காமங்களையும்; (**காம-க்ரோத-ஸலோப-மோஹ-மத-மாத்ஸர்யாதி-ஷட்கம் ச**) = ஆசை கோபம் லோபம் மதிமயக்கம் கொழுப்பு பொறாமை முதலிய அறுவகையான இழிவுபட்ட காமங்களையும் கூட; (**யத்**) = எந்த; (**தே**) = உமது; (**ஸாது**) = சிறந்த; (**பீஜம்**) = காமராஜம் எனும் பீஜமானது; (**ப்ராஜயதி**) = பிரகாசப்படுத்துகின்றதோ; (**தத்**) = அதை; (**அஹம்**) = நான்; (**ப்ரணௌமி**) = நன்கு நமஸ்கரிக்கிறேன்.

**காமனைகள்: -** இவை ஐஹிகம் (இவ்வுலகைப் பற்றியவை). ஆமுஷ்மிகம் (ஸ்வர்க்கம் முதலிய பிற உலகைப் பற்றியவை) பாரமார்த்திகம் (மோக்ஷ இச்சை) என மூன்று வகைப்படும். *'**தர்மாவிருந்தோ பூதேஷு காமோ** (அ)**ஸ்மி பரதர்ஷப**' என்று கீதையில் கூறியபடி தர்மத்திற்கு மாறுபடாத காமனைகள் பிரவிருத்தி மார்க்கத்தில் இகழப்படுவதில்லை. தவறான காமம், குரோதம், லோபம் முதலியவையே அகச்சத்ருதுக்கள், அவற்றால் விளையும் தீமையை உணர்ந்து தேவியின் அருளால் அவற்றை வெல்லவேண்டும்.

**(தாத்பரியம்)** ஹே காமேஸ்வரி! ஜகத்காரணத் தன்மையை யடைந்த சதுர்முகப்பிரஹ்மாதிகளின் காமனைகளையும், பிரிதிவி முதலிய பூதகாரியங்களா லேற்படும் எண்ணிறந்த காமனைகளையும், ஸர்வமனோரதங்களையும், ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணாதி அநேக பிரமாணங்களால் அறியப்பட்ட காமனைகளையும், காமாதி அரிஷட்வர்க்கங்களையும் எந்த பீஜமானது நன்கு பிரகாசப்படுத்துகின்றதோ அந்த, உம்முடைய பெருமை தங்கிய, பீஜத்தை நான் நமஸ்கரிக்கின்றேன்.

**(விசேஷவுரை)** ஸர்வ காமனைகளையும் பரிபூர்த்தி செய்யும் ஸாமர்த்தியம் ஸங்கேத ஸாரவித்தையின் மத்திய பீஜத்திற்குள்ளதால் அதற்குக் **காமராஜபீஜ** மெனப் பெயர் வந்ததென்று முன்னர் கூறப்பட்டது. காமனைகள் முவ்வகைப்படும். அவை ஐஹிகம், ஆமுஷ்மிகம், பாரமார்த்திகம் என்பனவாம். வைஷயிக ஸுகேச்சை ஐஹிகமென்றும், ஸ்வர்க்காதி லோகாந்தரேச்ச ஆமுஷ்மிகமென்றும்,

மோக்ஷேச்சை பாரமார்த்திகமென்றும் கூறப்படும். இவை யாவும் தார்மிகமாம். ஆதலின் விதியுக்தமானவை, அதர்மமான காமனைக்குக் **காம**மென்று பெயர். இதனால் ஏற்படும் காரியங்கள் குரோதம், லோபம் முதலியன. இவை தர்ம மார்க்கத்திலுள்ள முமுக்ஷுக்களுக்கு ஆந்தர சத்துருக்களாம். இவற்றையும் பிரகாசப்படுத்தும் சக்தி காமராஜ பீஜத்திற்குள்ளதென்று கூறியதால் பக்தர்களுக்கு அவற்றாலுண்டாகுந் தீமையை யுணர்த்தி அவர்களிடத்தில் அவையணுகாவாறு செய்யும் ஸாமர்த்தியம் அதற்குளதென அறிதல் வேண்டும்.

ச காரத்தினால் தர்மாதர்ம காமனைகள் ஸூசிப்பிக்கப்பட்டன. (9)

(**அவதாரிகை**) முன் ஶ்லோகத்தில் காமபீஜத்திற்கு ஸகல காமனைகளையும் பரிபூர்த்தி செய்யும் ஸாமர்த்தியம் வர்ணிக்கப்பட்டது. அந்த ஸாமர்த்தியம் அந்த பீஜத்திற்குள்ள காரணத்தால், அதற்குச் சிறந்த தத்துவ ஞானத்தைப் பிரகாசப்படுத்துந் தன்மையும், பிரணவஸ்வரூபமான தன்மையும் உள்ளதென்று இதில் பிரதிபாதிக்கப் படுகின்றது.

## காமராஜ பீஜம்

**यद्भक्ताखिलकामपूरणचणस्वात्मप्रभावं महा**
**जाड्यध्वान्तविदारणैकतरणिज्योतिः प्रबोधप्रदम् ।**
**यद्वेदेषु च गीयते श्रुतिमुखं मात्रात्रयेणोमिति**
**श्रीविद्ये तव सर्वराजवशकृत्तत्कामराजं भजे ॥१०॥**

**யத்பக்தாகில-காமபூரணசண-ஸ்வாத்ம-ப்ரபாவம் மஹா-**
**ஜாட்யத்த்வாந்த-விதாரணைக தரணிஜ்யோதி: ப்ரபோதப்ரதம் ।**
**யத்வேதேஷு ச கீயதே ச்ருதிமுகம் மாத்ராத்ரயே ணோமிதி**
**ஸ்ரீவித்யே தவ ஸர்வராஜ-வசக்ருத் தத் காமராஜம் பஜே ॥ 10 ॥**

(**பதவுரை**) (**ஸ்ரீவித்யே**) = ஸ்ரீ வித்யா ஸ்வரூபிணியே!; (**யத்**) = எது; (**பக்தாகில-காமபூரண-சண-**) = எல்லா பக்தர்களுடைய ஆசைகளையும் பூர்த்தி செய்விக்க வல்லதான; (**ஸ்வாத்மப்ரபாவம்**) = சொந்த மகிமை உடையதோ; (**மஹா- ஜாட்ய-த்வாந்த-**) = மிகவும் அடர்ந்த அஞ்ஞான இருளை; (**தாரண-ஏக-தரணி- ஜ்யோதி:**) = போக்கக்கூடிய ஒரே சூரியப் பிரகாசம் போன்றதான; (**ப்ரபோதப்ரதம்**) = ஞான விழிப்பைத்தரக் கூடியதோ; (**யத்**) = எது; (**வேதேஷு**) = வேதங்களில்; (**மாத்ரா-த்ரயேண**) = மூன்று மாத்திரைகளுடன்; (**ஓம் இதி**) = ஓம் என்று; (**ச்ருதிமுகம்**) = வேதாரம்பத்தில்; (**கீயதே**) = கானம் பண்ணப்படுகிறதோ; (**ஸர்வ ராஜ வரக்ருத்**) = அரசர்கள் முதலிய அனைவரையும் வசப்படுத்தக் கூடியதோ; (**தத்**) = அந்த; (**தவ**) = உம்முடைய; (**காமராஜம்**) = காமராஜ பீஜத்தை; (**பஜே**) = தியானிக்கின்றேன்.

**காமராஜரும் காமகலையும்:** - 'க்லீம்' என்பது காமராஜ பீஜம். அதிலுள்ள 'க' காரம் தர்மத்தையும் 'ல' காரம் அர்த்தத்தையும் 'ஈ' காமத்தையும் அளிக்கும். பிந்து மோக்ஷத்தை யளிக்கும். 'ஈம்' என்பது காமகலை எனப்படும். தர்மார்த்த காமம் உபாதி நீங்கியபொழுது மோக்ஷமாகும். 'ஈம்' என்பதும் 'ஓம்' என்பதும் ஒன்றே.

ஒ. துரீயஸ்வர: ஸாக்ஷாத் துரீயமேவ । 'ய ஈம் ச்ருணோத்யலகம் ச்ருணோதி|' - ஆருணம்.

**(தாத்பரியம்)** ஸங்கேதஸார ஸ்ரீ வித்தியாஸ்வரூபிணியே! தனது ஸ்வபாவமான மஹிமையால் ஸாதாரணமாய் ஸர்வ ஜீவராசிகளையும், விசேஷமாய் ஸர்வராஜாக்களையும், பக்தர்களின் வசப்படுத்தி, அவர்களின் ஸகலமனோர தங்களையும், பரிபூர்த்திசெய்யும் ஸாமர்த்தியம் எந்த பீஜத்கிற்கு ள்ளதோ அந்த உன்னுடைய காமராஜ பீஜமானது வேதத்தின் ஆரம்பத்தில் மூன்று மாத்திரைகளோடு கூடிய "ஓம்" என்னும் பிரணவஸ்வரூபமாய்க் கானம் பண்ணப் படுகின்றது; அன்றியும், அது ஜடஸ்வரூப மூலாக்ஞானமாகும் மஹா அந்தகாரத்தை யொழிக்கவல்ல ஞானஸூர்ய்ப்பிரகாச ஸ்வரூப தத்வக்ஞானத்தையும் தரக்கூடிய தாயுமிருக்கின்றது. அத்தகைய காமகலா பீஜத்தைப் பஜிக்கின்றேன்.

**(விசேஷவுரை)** பிரணவமும் காமகலையும் ஒரே ஸ்வரூபமான பிரணவத்திற்கு மூன்று மாத்திரைகளுண்டு; அங்ஙனமே காமகலையும் த்ரிபிந்து ஸ்வரூபமானது.

**तुरीयस्वरः साक्षात् तुरीयमेव । य ई शृणोत्यलक शृणोति ।**
**नहि प्रवेद सुकृतस्य पन्थाम् ।। इति श्रुतेः ।**

**க்லீம்** இதில் "ககார லகாரங்களின்றி பிந்துவோடு கூடிய துரீயஸ்வரவடிவ ई காமகலா சிரவணத்தினால் ஸத்கர்மாக்களால் கிடைக்கும் உத்தமலோகங்கள் அடையப்படுவதில்லை; மற்றோ இங்கேயே நிர்க்குண ஞானம் ஏற்பட்டு பிரஹ்ம ஸ்வரூப மோக்ஷம் ஸித்திக்கின்றது" என்னும் பிரமாணத்தால் காமகலைக்குப் பிரணவஸ்வரூபமும், நிர்க்குணக்ஞானப் பிரகாசத்துவமும் உண்டென்று ஏற்படு கின்றது.

காமராஜ பீஜத்தினால் திரிவர்க்கங்களும், காமகலையால் அபவர்க்கவடிவ மோக்ஷமும் ஸித்திக்கு மென்பது பரம ஸித்தாந்தமாம். **க்லீம்** என்னும் காமராஜ பீஜத்திலுள்ள क காரமானது தர்மபுருஷார்த்தத்தையும், ल காரமானது அர்த்த மென்னும் புருஷார்த்தத்தையும், ई என்னும் உயிரெழுத்தானது காமபுருஷார்த் தத்தையும், பிந்து நித்திய திருப்தியையும் உண்டாக்குகின்றன வென்பது பரம ரஹஸ்யமாம். தர்மார்த்தகாமங்களென்று கூறப்படும் திரிவர்கங்களுள் அடங்கிய காமபுருஷார்த்தமே உபாதிராஹித்தியத்தினால் மோக்ஷமாக ஆய்விடுகின்றது.

**यतस्तृतीयं विदुषां तुरीयं त्रैपुरं महः ।**

என்னும் பிரமாணம் இதை வலிவுறுத்துகின்றது. (10)

**(அவதாரிகை)** ஸ்ரீ துர்வாஸ பகவான் இந்த ஶ்லோகத்தில் ஸங்கேத ஸாரவித்தையின் மூன்றாவது பீஜத்தைக் காமகலைக்கு ஸமானமாயும், சித்ரூபமாயும், பிரஹ்மஸ்வரூபமாயும் பிரதிபாதிக்கின்றனர்.

## சக்தி பீஜம்

**यत्ते देवि तृतीयबीजमनलज्वालावलीसंनिभं**
**सर्वाधारतुरीयबीजमपरब्रह्माभिधाशब्दितम् ।**
**मूर्धन्यान्तविसर्गभूषितमहौकारात्मकं तत्परं**
**संविद्रूपमनन्यतुल्यमहिम स्वान्ते मम द्योतताम् ॥ ११ ॥**

**யத்தே தேவி தருதீயபிஜ-மனலஜ்வாலாவலீ-ஸந்நிபம்**
**ஸர்வாதார-துரீயபீஜ-மபர-ப்ரஹ்மாபிதா-சப் திதம் ।**
**மூர்த்தன்யாந்த-விஸர்க்க-பூஷிதமஹௌகாராத் மகம் தத்பரம்**
**ஸம்வித்ரூப-மனன்ய-துல்ய-மஹிம ஸ்வாந்தே மம த்யோததாம்**
**|| 11 ||**

**(பதவுரை)** (**தேவி**) = தேவியே!; (**ஸர்வாதார-துரீய பீஜம்**) = எல்லா வற்றிற்கும் ஆதாரபீஜம் எனப்படும் ஏகாரத்திற்கு நான்காவதான பீஜமாய்; (**அபரப்ரஹ்ம-அபிதாசப்திதம்**) = அபரப்ரஹ்மம் எனும் பெயரால் கூறப்படுவதாய்; (**மூர்த்தன்ய-அந்த-விஸர்க்க-பூவித**) = மூர்த்தன்யமெனும் ஷகாரத்தின் அந்தமான ஸகாரத்தினாலும் விஸர்க்கத்தினாலும் அலங்கரிக்கப் பெற்றதாய் விளங்கும்; (**மஹா ஔகாராத்மகம்**) = சிறந்த ஔகார ஸ்வரூபமான; (**தத்பரம் ஸம்வித்ரூபம்**) = அந்தச் சிறந்த ஞான ரூபம்; (**அனன்ய-துல்ய மஹிம**) = ஒப்புயர்வற்ற மகிமையுடையதும்; (**அனல ஜ்வாலாவலீ-ஸந்நிபம்**) = அக்னிஜ்வாலைகளின் கூட்டத்தைப் போன்ற பிரகாசமுடையதுமான; (**தே**) = உமது; (**த்ருதீயபீஜம்**) = ஸங்கேத ஸார வித்தையின் மூன்றாவது பீஜம்; (**யத்**) = அப்படிப்பட்டது எதுவோ அது; (**மம**) = என்னுடைய; (**ஸ்வாந்தே**) = இருதயத்தில்; (**த்யோததாம்**) = நன்கு விளங்கட்டும்.

இங்கு ஸங்கேத ஸாரவித்தையின் மூன்றாவது பீஜமான "ஔ:' துதிக்கப்படுகிறது. இது சக்தி பீஜம். ஸகாரத்துடனும் விஸர்க்கத்துடனும் கூடினால் இது "ஸௌ:" என்று ஆகிறது.

**தத்பரம் ஸம்வித்தபம்** - 'ஸௌ :'என்பதிலுள்ள உபாதியாகும் ஸகாரம் நீங்கியுள்ள காரணத்தால் இது நிருபாதிக ஸம்வித் ரூபமாகும்.

**(தாத்பரியம்)** ஸ்வயம் பிரகாசமாய் விளங்கும் பரதேவதையே! முன்னால் स காரத்தினானும் பின்னால் விஸர்க்கத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட औ காரத்தின் ஸ்வரூபம் सौ : என்பதாகும். இந்த பீஜத்திற்கு ஆஸ்பதமாயும், விஸர்க்கத்தைப் பரமாயுடைத்தானதாயுமுள்ளது ஸர்வாதார பீஜமாகும் பதினோராவது ஸ்வரமான ஏகாரத்திற்கு நான்காவதான औ என்பதாகும்; என்றால் औ**:** என்று ஏற்படுகின்றது. இது உன்னுடைய ஸங்கேதஸார வித்தையின் மூன்றாவது பீஜமாகும். இது அக்கினி ஜ்வாலைகளின் கூட்டத்தைப் போன்ற பிரகாசமுடையதும், உவமையற்ற ஸம்வித் ரூபமாகவும், அபரப்பிரஹ்ம மென்னும் நாமத்தினால் உரைக்கப்படுவதாயும் இருக்கின்றது. இத்தகையது எந்த பீஜமோ அது எனது ஹ்ருதயத்தில் நன்கு விளங்கட்டும்.

**(விசேஷவுரை)** ஸங்கேத ஸாரவித்தையின் மூன்றாவது பீஜம் இதில் ஸ்துதிக்கப்படுகின்றது. இதற்குச் சக்தி பீஜமென்று பெயர். இது औ**:** என்னும் ஸ்வரூபமாய் விளங்குவதாகும். இதன் உத்தாரம் **ஸர்வதா4ரதுரீயபீஜம்** என்பதனாலும் **மூர்த4ன்யாந்தவிஸர்க3பீஷிதமஹௌகாராத்மகம்** என்பதனாலும் ஏற்படுகின்றது.

**யதே3காத3ஷமாதா4ரம் பீ3ஜம் கோணத்ரயோப்4த்வம்** என்னும் பிரமாணத்தால் ஆதார பீஜமானது பதினோராவது ஸ்வரமான ஏகாரமாகும். இதற்கு நான்காவதான ஸ்வரம் औ காரமாம்.

**மூர்த4ந்யாந்தவிஸர்க3 பூ4ஷிதம் மூர்த4ன்ய** பதம் **ஷ** காரம்; அதன் அந்தம் स காரம். அதனாலும் விஸர்க்கத்தினாலும் அலங்கரிக்கப்பட்ட औ காரம் सौ**:;** அதற்கு ஆஸ்பதமாயிருப்பது औ**:** ஆனால் **மூர்த4ந்யாந்தவிஸர்க3 பூ4ஷிதம் மூர்த4ன்ய** பதம் பிந்து வாசகம்; அதன் பின் விஸர்க்கம் என்னும் இரண்டு பிந்துக்கள்; பிந்து விஸர்க்கங்களோடு சேர்ந்த औ காரம் औ**:** என்றேற் படுகின்றதென்று வடமொழி வியாக்கியாதா ஸ்ரீ நித்தியானந்தநாதர் வியாக்கியானம் செய்துள்ளார். ஆனால், ஸங்கேத ஸார வித்தையின் மூன்றாவது பீஜம் औ**:** என்பது மாத்திரமேயாகும். औ**:** என்பது பிராஸாதபராவின் ஸங்கேதமென்று பெரியோர் கூறுவர். ஆதலின் **மூர்த4ந்யாந்த** மென்பதற்கு स காரம் என்று பொருள் செய்ய வேண்டியிருக்கிறது. அதன் விமர்சமாவது: -

**ஷகார: ஷ்சேத் ஆக்2யாதோ மூர்த4ன்யோ விருஷ ஸங்யக:** என்னும் மாத்ருகா நிகண்டுவின் பிரமாணத்தின்படி, **மூர்த4ன்ய** பீஜம் **ஷ** காரம். இதற்கு

அந்தத்தில் அதாவது இறுதியில் விளங்குவது स காரமாகும்; இதனோடு விஸர்க்கம் சேர்ந்தால் सः என்று ஏற்படுகிறது. இதனோடு **ஸர்வாதா⁴ரதுரீயபீஜ** மாகிற औ காரமும் சேரவே **सौः** என்று ஏற்படுகிறது.

ஸ்ரீ நித்தியாநந்தநாதர் **औः** என்று வியாக்கியானம் செய்ய நினைத்து அவதாரிகையில் இந்த மூன்றாவது பீஜத்திற்குக் காமகலா ஸாம்யம் கூறினார். பிந்து வில்லாமலே **औः** என்பதற்கே காமகலா ஸாம்யம் ஏற்படுகின்றது. விஸர்க்கம் என்னும் இரண்டு பிந்துக்கள் கலாஸ்வரூபமாகும். औ என்பது **ஸாமரஸ்ய பீஜ**மென்பது சாஸ்திரப்பிரஸித்தம். இரண்டு வஸ்துக்களுக்கு ஸாமரஸ்யம் கூறுதலே தகுதி. ஆதலின் औ என்னும் ஸாமரஸ்ய பீஜவலிமையால், உப காமஸ்வரூபமும் இருப்பதாகப் பாவித்தல் தகுதியாம். ஆதலின் औः என்பதும் காமகலாஸ்வரூபமாய் இருக்கின்றது. கலாஸ்வரூபமாகும் விஸர்க்கம் எங்கே யுண்டோ அங்கு விளக்கமாகவோ அல்லது மறைவாகவோ காமஸ்வரூபமாகும் பிரகாசபிந்து இருப்பதாக அறிவது சாஸ்திர ஸித்தாந்தமாம். சக்தி பீஜமாகிற **सौः** என்பதிலுள்ள உபாதியாகும் ஸகாரம் நீங்கியுள்ள காரணத்தால் औः என்பது (நிருபாதிக) ஸம்வித் ரூபமென்று கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது. **தத்பரம்** இதில் **தத்** என்பது விஸர்க்கத்தைக் கிரஹிக்கிறது. (11)

**(அவதாரிகை)** இதில் பாலா மந்த்ரத்தின் மூன்றாவது பீஜமாகிய **பராபீஜம்** ஸ்துதிக்கப்படுகின்றது.

### பரா பீஜம்

**सर्वं सर्वत एव सर्गसमये कार्येन्द्रियाण्यन्तरा**
**तत्तद्दिव्यहृषीककर्मभिरियं संव्यश्नुवाना परा ।**
**वागर्थव्यवहारकारणतनुः शक्तिर्जगद्रूपिणी**
**यद्बीजात्मकतां गता तव शिवे तन्नौमि बीजं परम् ॥१२ ॥**

**ஸர்வம் ஸர்வத ஏவ ஸர்க்கஸமயே கார்யேந்த்ரியாண்யந்தரா**
**தத்தத்திவ்ய-ஹ்ருஷீக-கர்மபிரியம் ஸம்வ்யச்ரு வானா பரா |**
**வாகர்த்த-வ்யவஹார-காரணதனு: சக்திர்-ஜகத்ரூபிணி**
**யத்பீஜாத்மகதாம் கதா தவ சிவே தந்நௌமி பீஜம் பரம் || 12 ||**

**(பதவுரை)** (**சிவே**) = மங்களவடிவினளே! (**ஸர்க்கஸமயே**) = சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில்; (**ஸர்வம்**) = அனைத்தையும்; (**ஸர்வத:**) = எல்லாவகையிலும்; (**ஸம்வ்யச்ருவானா**) = சிருஷ்டித்து; (கார்யேத் த்ரியாணி அந்தரா) = இடையில் கருமேந்திரியங்களையும்; (**தத்தத்திவ்ய-ஹ்ருஷீக-**) = அந்தந்த தெய்வீக

சக்திவாய்ந்த ஞானேந்திரியங்களையும்; (**கர்மரி:**) = அவற்றின் கருமங்களுடன் சிருஷ்டித்து; (**வாக்-அர்த்த-வ்யவஹார-காரண-தனு:**) = சொல்லும் பொருளுமான விவகார காரண வடிவான; (**இயம் ஜகத் ரூபிணீ பராசக்தி:**) = இந்த உலக ரூப பராசக்தியாய்; (**யத்**) = எது; (**பீஜாத்மகதாம்**) = உலகிற்கு வித்துப்போல்; (**கதா**) = உளதோ; (**தத்**) = அந்த; (**தவ**) = உமது; (**பரம்பீஜம்**) = பராபீஜத்தை; (**நௌமி**) = வணங்குகிறேன்.

பாலா மந்திரத்தின் மூன்றாவது பீஜமாகிய பராபீஜம் (**ஸௌ:**) இங்கு துதிக்கப்படுகிறது. அதுவே சக்திபீஜம் எனவும் கூறப்படும். உலகை சிருஷ்டிக்கும் சக்தியும் அழிக்கும் சக்தியும் அதற்குண்டு. அதுவே சிருஷ்டிகாலத்தில் காமகலையாகவும் ஸ்திதிகாலத்தில் பிரபஞ்சவடிவமாகவும் லய காலத்தில் பராபீஜமாகவும் விளங்குவது.

**(தாத்பரியம்)** ஹே சிவையே! உத்க்ருஷ்டமான உமது சக்தியானது, சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில், ஸகலத்திலிருந்தும் ஸகல வஸ்துக்களையும் சிருஷ்டி செய்து, இடையில் கர்மேந்திரியங்களையும், ஞானேந்திரியங்களையும், அந்த அந்த இந்திரியங்களுக்கு விஷயங்களான சப்தாதிகளையும், காரியமான வசனாதிகளையும் கற்பித்து, ஸகலமான சப்தங்களினுடையவும் அர்த்தங்களினுடையவும் ஆன விவஹாரங்களுக்குக் காரணமா யிருந்து கொண்டு, உலகத்தில் எங்கும் வியாபித்து, உலக வடிவமாகவே இருக்கின்றது. இத்தகைய பராசக்தி எந்த பீஜாக்ஷரமாக ஆவிர்ப்பவித்தி ருக்கின்றனளோ, அதை அதாவது அந்த சக்தி பீஜத்தை வணங்குகின்றேன்.

**(விசேஷவுரை)** பாலாவித்தையின் த்ருதீய த்ருதீய பீஜத்திற்குச் சக்தி பீஜமென்றே பெயர். ஜகத்தைச் சிருஷ்டிக்கும் சக்தியும், அதை ஸம்ஹரிக்கும் சக்தியும் இதற்குண்டு. ஆதலின் பராசக்தி யெனப்படும். இந்தப் பராசக்தியானது சிருஷ்டி காலத்தில், காமகலையாக ஆவிர்ப்பவித்து ஸகல ஸ்தாவர ஜங்கமாத் மகப்பிரபஞ்சத்தை எப்படி எப்படியிருக்க வேண்டுமோ அப்படி அப்படியே சிருஷ்டித்துப் பிறகு அதற்குரிய அதிஷ்டான தேவதைகளோடு ஞான கர்மேந்திரி யங்களை யேற்படுத்தி, காரிய, காரண, கர்த்ருவடிவமாயும், ஞேய, ஞான, ஞாத்ருவடிவமாயும், வாச்சிய, வசன, வக்த்ரு வடிவமாயுமுள்ள ஸகல வியவ ஹாரங்களுக்குக்காரணமான பிரபஞ்ச வடிவ சரீரமாய் விளங்கிப் பின்னர் பராபீஜவடிவமாகவே நிற்கின்றனள்.

ஆகவே, பராசக்தி பிரபஞ்ச சிருஷ்டி காலத்தில் காமகலையாகவும். வயகாலத்தில் பராபீஜமாகவும் விளங்குவது உணரத்தக்கது. (12)

(**அவதாரிகை**) பராபீஜ ஸ்மரணத்தினால் பரதேவதையின் ஸாக்ஷாத்கார முண்டாகு மென்பதை இதில் கூறுகின்றனர்.

### பராபீஜத்தால் தேவியின் பிரத்யக்ஷம்

**अग्नीन्दुधुमणिप्रभञ्जनधरानीरान्तरस्थायिनी**
**शक्तिब्रह्महरीशवासवमुखामासुरात्मस्थिता ।**
**सृष्टस्थावरजङ्गमस्थितमहाचैतन्यरूपा च या**
**यदीजस्मरणेन सैव भवती प्रादुर्भवत्यम्बिके ।। १३ ।।**

**அக்னீந்து-த்யுமணி-ப்ரபஞ்ஜன-தரா-நீராந்தர-ஸ்த்தாயினீ**
**சக்திர்-ப்ரஹ்ம-ஹரீச-வாஸவ-முகாமர்த்யா-ஸுராத்ம-ஸ்த்திதா ।**
**ஸ்ருஷ்ட-ஸ்த்தாவர ஜங்கம-ஸ்த்தித-மஹாசைதன்ய ரூபா ச யா**
**யாத்-பீஜஸ்மரணேன ஸைவ பவதீ ப்ராதுர்ப்பவத்-யம்பிகே ॥ 13 ॥**

**(பதவுரை)** (**அம்பிகே**) = அம்பிகையே!; (**அக்னி-இந்துத்யுமணி**) = அக்னி சந்திரன் சூரியன்; (**ப்ரபஞ்ஜன-**) = வாயு; (**தரா-**) = பூமி; (**நீர-**) = ஜலம்; (**அந்தர-**) = ஆகாயம் இவைகளில்; (**ஸ்த்தாயினி**) = நிலைபெற்று விளங்கும்; (**சக்தி:**) = சக்தியும்; (**ப்ரஹ்ம-ஹரி-ஈச-வாஸவ-முக-**) = பிரம்மா, விஷ்ணு. ருத்திரன், இந்திரன் முதலிய; (**அமர்த்யாஸுராத்மஸ்த்திதா**) = தேவ வடிவிலும் அசுரர்கள் வடிவிலும் உள்ளவளும்; (**ஸ்ருஷ்ட-**) - சிருஷ்டிக்கப்பட்ட; (**ஸ்த்தாவர-ஜங்கம-ஸ்த்தித-**) = அசையும் உயிர்களிலும் அசையாப் பொருள்களிலும் உள்ள; (**மஹாசைதன்ய ரூபாச**) = மஹத்தான சைதன்ய வடிவினளும்; (**யத் பீஜஸ்மரணேன**) = மேற்கூறிய பரா பீஜதியானத்தால்; (**ப்ராதுர்ப்பவதி**) = பிரத்தியக்ஷமாய் விளங்குபவளும்; (**யா**) = எவளோ; (**ஸா ஏவ**) = அவளே; (**பவதீ**) = நீயாகின்றாய்.

தேவியின் ஸத்ஸ்வரூபம் அனைத்திலும் அந்தர்யாமியாகவும், சித்ஸ்வரூபம் அறிவாகவும், ஆனந்தஸ்வரூபம் சக்தியாகவும் விளங்குகின்றன என்பதை நேரில் காண்பதே ஸாக்ஷாத்காரம்,

**(தாத்பரியம்)** ஹே அம்பிகே! முன் ஶ்லோகத்தில் பிரதி பாதனம் செய்யப்பட்ட பராபீஜஸ்வரூபிணியாயுள்ளவள் எவளோ, எவள் ஸூர்யன், சந்திரன், அக்கினி, பூமி, ஜலம், வாயு, ஆகாசம் என்னும் இவற்றில் விளங்கும் ஸத் ஸ்வரூபமாகவும், பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன் முதலிய தேவர்கள், அஸுரர்கள் இவர்களிடத்துள்ள ஸாமர்த்திய வடிவமாகவும், சிருஷ்டிக்கப்பட்ட ஸ்தாவர ஜங்கமங்களாகவும், ஸர்வ வஸ்துக்களிலும் விளங்கும் சைதன்ய வடிவமாகவும்

விளங்குபவளோ அவளே நீ. ஆதலின் பராபீஜ ஸ்மரணத்தினால் நீ எனக்குப் பிரத்திய க்ஷமாகின்றாய்.

**(விசேஷவுரை)** இந்த ஸ்லோகத்தில் பரதேவதையின் ஸாக்ஷாத்காரம் கூறப்படுகின்றது. அம்பாள் அந்தர்யாமி ஸ்வரூபமாகவும், ஸாமர்த்திய வடிவமாகவும், ஞாநாகார மாகவும் அபரோக்ஷமாகுந்தன்மை இதில் கூறப்பட்டு ள்ளது கூர்ந்து அறியத்தக்கது. ஸத் ஸ்வரூபம் அந்தர்யாமி யாகவும், ஆநந்தம் சக்தியாகவும், சித்ரூபம் ஞானமாகவும் விளங்குகின்றன. **ஸச்சிதாநந்த அநுபவமே** அபரோக்ஷமாமென்பது சிதையாத சித்தாந்தமாம். (13)

**(அவதாரிகை)** ஸகலவித்தியாப்பிரதமாயும், ஸ்ரீப்பிரதமாயும், மோக்ஷப்பிரத மாயுமுள்ள பராபீஜத்தினைத் தியானம் செய்கின்றனர்.

## பராபீஜ தியானம்

**खात्मश्रीविजिताजविष्णुमघवश्रीपूरणैकव्रतं**
**सद्विद्याकविताविलासलहरीकल्लोलिनीदीपकम् ।**
**बीजं यत्त्रिगुणप्रवृत्तिजनकं ब्रह्मेति यद्योगिनः**
**शान्ताः सत्यमुपासते तदिह ते चित्ते दधे श्रीपरे ॥१४॥**

**ஸ்வாத்மஸ்ரீ-விஜிதாஜ-விஷ்ணு-மகவ-ஸ்ரீபூரணை கவ்ரதம்**
**ஸத்வித்யா-கவிதா-விலாஸலஹரீ-கல்லோலினீ-தீபகம்**
**பீஜம் யத் த்ரிகுணப்ரவ்ருத்தி-ஜனகம் ப்ரஹ்மேதி யத்யோகின**
**சாந்தா: ஸத்ய-முபாஸதே ததிஹ தே சித்தே ததே ஸ்ரீபரே** || 14 ||

**(பதவுரை)** (**ஸ்ரீபரோ**) = ஸ்ரீவித்யா வடிவினளான பரதேவதையே! (**ஸ்வாத்மஸ்ரீ-விஜித-அஜ-விஷ்ணு-மகவ-ஸ்ரீ**) = பிரம்மா விஷ்ணு இந்திரன் ஆகியோரின் ஐசுவரியத்தையும் வெல்லதான தனது ஆத்மச் செல்வத்தால்; (**பூரண ஏக வ்ரதம்**) = அடியார்களை நிரப்புவதையே விரதமாய்க் கொண்டதும்; (**ஸத் வித்யா**-) = உத்தமமான வித்தை; (**கவிதா-விலாஸலஹரீ**) = கவி பாடும் திறமையின் வெள்ளம் ஆகியவற்றின்; (**கல்லோலினீ-தீபகம்**) = ஸந்தோஷத்தைப் பிரகாசப்படுத்துபவதும்; (**த்ரிகுண-ப்ரவ்ருத்தி-ஜனகம்**) = முக்குணங்களின் இயக்கத்தைத் தோற்றுவிப்பதும்; (**யத்**) = எந்த; (**பீஜம்**) = பீஜாக்ஷரமோ; (**யத்**) = எதை; (**யோகின: சாந்தா:**) = சாந்தஸ்வரூபிகளான யோகிகள்; (**ஸத்யம் ப்ரஹ்ம இதி**) = ஸத்யஸ்வரூபமான பிரம்மம் என்று; (**உபாஸதே**) = உபாசிக்கின்றார்களோ; (**தத் தே**) = அந்த உம்முடைய 'ஸௌ:' எனும் பராபீஜத்தை; (**இஹ**) = இங்கு; (**சித்தே**) = மனதில்; (**ததே**) = நான் இருத்திக் கொள்கிறேன்.

ஐசுவரியம், தர்மம், கீர்த்தி, செல்வம். ஞானம், வைராக்கியம் என்ற ஆறும் '**பக:**' எனும் சொல்லில் அடங்கும். அவற்றிற்குறைவிடமான **பக**வதியை அவளுடைய மந்திரங்களால் உபாசிப்பவர்களுக்கு அந்த ஆறு விதமான பெருமைகளையும் அவள் அளிக்கின்றாள்.

**(தாத்பரியம்)** ஸ்ரீ வித்யாஸ்வரூபிணியான ஹே பரதேவதே! எந்தப்பீஜமானது, தனது ஆத்மப்பிரபாவத்தால் ஜயிக்கப்பட்ட பிரஹ்ம விஷ்ணு இந்திரர்களின் ஐஸ்வரியங் களைப்பூரணம் செய்வதிலேயே தத்பரமானதோ, எது உத்தமமான ஸகல வித்தைகளின் ஞானத்தையும், உத்தம காவ்வியங்களின் ரசனா (இயற்றும்) ஸாமர்த்தியத்தையும் பிரகாசப்படுத்துவதோ, எது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் திரிகுணாத்மகப் பிரவ்ருத்தியை யுண்டுபண்ணுவதோ, எது, மஹாயோகிகளாலும், பரமசாந்தர்களான ஞானிகளாலும் ஸத்ய ஸ்வரூபமாகவும், பிரஹ்ம ஸ்வரூப மோக்ஷப்பிரதமாகவும் கருதப்பட்டு உபாஸிக்கப்படுகின்றதோ, அத்தகைய உமது பராபீஜத்தை இந்த ஜன்மத்திலேயே எனது சித்தத்தில் பாவிக்கின்றேன்.

**(விசேஷவுரை)** பராசக்திக்குப் பகவதி யென்றொரு பெயருண்டு. பகத்தை யுடையவள் பகவதி. ஐஸ்வரியம், தர்மம், கீர்த்தி, ஸ்ரீ, ஞானம், வைராக்கியமென்னும் இவை ஆறும் பகஸ்வரூபங்களாகும். இவை யாவும் பரா பீஜோ பாஸனையால் ஏற்படுவனவாம். (14)

**(அவதாரிகை) வந்தே வாக்ப⁴வம்** என்னும் ஶ்லோகம் முதல், **ஸ்வாத்மஸ்ரீ** என்னும் ஶ்லோகம் வரையிலுள்ள பத்து ஶ்லோகங்களாலும் ஸங்கேதஸார, பாலாவித்தைகளின் ஸ்வரூபமும் மஹிமையும் நிரூபிக்கப்பட்டன. இதில் அவற்றுள் ஏதாவதொரு பீஜத்தை யுபாஸிப்பதனால் உண்டாகும் அபீஷ்ட பலப்பிராப்தி அதாவது விரும்பியவற்றின் அடைவு இந்த சுலோகத்தில் பிரதிபாதிக்கப்படுகின்றது.

## ஒவ்வொரு பீஜமும் உத்தம பலனை அளிக்கும்

**एकैकं तव मातृके परतरं संयोगि वाऽयोगि वा**
**विद्यादिप्रकटप्रभावजनकं जाड्यान्धकारापहम् ।**
**यन्निष्ठाश्च महोत्पलासनमहाविष्णुप्रह्लादयो**
**देवाः स्वेषु विधिष्वनन्तमहिमस्फूर्तिं दधत्येव तत् ॥१५ ॥**

**ஏகைகம் தவ மாதருகே பரதரம் ஸம்யோகி வா஽யோகி வா**
**வித்யாதி ப்ரகட-ப்ரபாவ-ஜனகம் ஜாட்யாந்த்த காராபஹம் ।**
**யந்நிஷ்ட்டாச்ச மஹோத்பலாஸன-மஹாவிஷ்ணு-பரஹாத்ராதயோ**
**தேவா: ஸ்வேஷு விதிஷ்வனந்த-மஹிம-ஸ்ப்பூர்த்திம் ததத்யேவ தத்** ||15||

**(பதவுரை)** (**மாத்ருகே**) = மாத்ருகாஸ்வரூபிணியான தாயே!; (**தவ**) = உம்முடைய; (**பரதரம்**) = சிறந்த மந்திரம்; (**ஏகைகம்**) = ஒவ்வொன்றுமே; (**ஸம்யோகி வா**) = மெய்யெழுத்துக்களுடன் கூடிய மூன்று அக்ஷர பாலா மந்திரமானாலும்; (**அயோகி வா**) = மெய்யெழுத்துக்கள் சேராத ஸங்கேதஸாரவித்தை எனும் மூன்று பீஜங்களானாலும்; (**வித்யாதி**-) = வித்தை முதலிய; (**ப்ரகட-ப்ரபாவ-ஜனகம்**) = வெளிப்படையான மகிமையை உற்பத்தி செய்யக்கூடியதாயும்; (**ஜாட்ய-அந்தகாராபஹம்**) = அஞ்ஞானமாகிற ஆழ்ந்த இருளைப் போக்கக் கூடியதாயும் உளது.; (**யத் நிஷ்ட்டா: ச**) = எதில் நிஷ்டை கூடியவர்களான; (**மஹோத்பலாஸன**-) = சிறந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மா; (**மஹாவிஷ்ணு**-) = மகாவிஷ்ணு; (**ப்ரஹர்த்ராதய:**) = ஸம்ஹார மூர்த்தியான ருத்ரன் முதலிய; (**தேவா:**) = தேவர்கள் உண்டோ அவர்களுக்கு; (**ஸ்வேஷு விஷு**) = தங்கள் தங்களுக்குரிய செயல்களில்; (**அனந்த மஹிம-ஸ்பூர்த்திம்**) = அளவுகடந்த பேராற்றலையும்; (**தத்**) = அதுவே; (**தததி ஏவ**) = நிச்சயமாய்க் கொடுத்தருளுகிறது.

**ஸம்யோகி வா அயோகி வா** - மேற்கூறிய வித்தைகளில் உள்ள ஆறு பீஜங்களில் ஏதாவதொன்றைத் தனியே உபாசிப்பதாலேயே கூட எல்லா நலன்களும் சித்திக்கின்றன.

**(தாத்பரியம்)** ஹே மாத்ருகாஸ்வரூபிணியே! வியஞ்ஜன ஸஹிதமான பாலாத்ரியக்ஷரியிலும், த்ரியக்ஷரியிலும், வியஞ்ஜன ரஹிதமான ஸங்கேத ஸாரத்ரி பீஜங்களிலும் ஏதாவதொன்றே வித்தை முதலிய ஸ்வேஷ்ட பிரவ்ருத்தியில் அலௌகிக ஸாமர்த்தியத்தை யருளுவதாயும், ஜடஸ்வபாவ அஞ்ஞானத்தை யொழிப்பதாயும், ஹரிஹரப்ரஹ்மாதிகளுக்கும் இதர தேவதைகளுக்கும், தத்பரமான உபாஸகர்களுக்கும் அவரவர்க்குக் கர்த்தவ்வியமான காரியங்களை முடித்துக் கொள்ளும் பேராற்றலை யருளுவதாயும் இருக்கின்றது.

**(விசேஷவுரை) பாலா**வித்தையானது வாக்பவம், காமராஜம், சக்தி யென்னும் மூன்று பீஜங்களையுடையது. இது ஸம்யோக (வியஞ்ஜன ஸஹித) வித்தையாகும். **ஸங்கேத ஸார** வித்தையானது ஸ்ரீ வித்தியா கூடத்திரயங்களின் பீஜரூபமான பாலா மந்த்ரத்தின் பரம ஸாரமாய் ஏற்பட்டுள்ளது. இது அயோக (வியஞ்ஜன ரஹித) வித்தையெனப்படும். மேற்கூறிய இரண்டு வித்தைகளில் உள்ள ஆறுபீஜங்களில் ஏதாவதொன்றை யுபாஸிப்பதனாலேயே பதினான்கு வித்தைகளையும், மூலாக்ஞானத்தை யொழிக்கவல்ல ஜீவப் பிரஹ்மைக்கிய ஞானத்தையும், ஸகலவிதமான விபூதிகளையும் ஸாமர்த்தியத்தையும் உபாஸகர்கள் அடைகிறார்கள். (15)

(**அவதாரிகை**) இதுகாறும் விமர்சிக்கப்பட்ட இருவிதமான வித்தைகளின் பீஜத்திரயங்களையும், மஹாவித்தையாகும் ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரியின் த்ரிகூடங்களையும் நன்கறிந்த மஹா புருஷனுடைய ஸாமர்த்தியம் இத்தகைய தென்று இதில் பிரதிபாதிக்கின்றனர்.

## உபாஸகனுடைய பெருமை

**इत्थं त्रीण्यपि मूलवाग्भवमहाश्रीकामराजस्फुर**
**च्छक्त्याख्यानि चतु : श्रुतिप्रकटितान्युत्कृष्टकूटानि ते ।**
**भूतर्तुश्रुतिसंख्यवर्णविदितान्यारक्तकान्ते शिवे**
**यो जानाति स एव सर्वजगतां सृष्टिस्थितिध्वंसकृत् ॥१६ ॥**

**இத்தம் த்ரீண்யபி மூல-வாக்பவ-மஹா ஸ்ரீகாமராஜ ஸ்ப்புரச்**
**சக்தியாக்க்யானி சது: ச்ருதிப்ரகடிதான் யுத்க்ருஷ்ட கூடானி தே ।**
**பூத-ருது-ச்ருதி-ஸங்க்ய-வர்ண-விதிதான்-யாரக்த-காந்தே சிவே**
**யோ ஜானாதி ஸ ஏவ ஸர்வஜகதாம் ஸ்ருஷ்டி-ஸ்த்திதி-த்வம்ஸக்ருத் ॥16॥**

(**பதவுரை**) (**சிவே**) = சிவே!; (**ஆரக்தகாந்தே**) = அருணவடிவ விமர்ச ரூபிணியே!; (**இத்தம்**) = இதுவரை கூறப்பட்ட; (**த்ரீணி அபி**) = மூன்று பீஜங்களும்; (**மூல-வாக்பவ-மஹா ஸ்ரீகாமராஜஸ்ப்புரத்-சக்தி-ஆக்க்யானி**) மூலமந்திரமான வாக்பவம், மஹா காமராஜம் நன்கு விளங்கும் சக்தி எனப்பட்டதாய்; (**சது: ச்ருதிப்ரகடிதானி**) = நான்கு வேதங்களிலும் வெளியிடப்பட்டதாய் உள்ள; (**தே**) = உம்முடைய; (**உத்க்குஷ்ட**) = உத்தமமான; (**கூடானி**) = மூன்று கூட வடிவான ஸ்ரீவித்தையாய்; (**பூத-**) = ஐந்து; (**ருது-**) = ஆறு; (**ச்ருதி**) = நான்கு என்ற; (**ஸங்க்ய**) = எண்ணிக்கையுள்ள; (**வர்ண-**) = அக்ஷரங்களுடன் கூடியவையாய்; (**விநிதானி**) = அறியப்படுவன; (**ய:**) = எவன்; (**ஜானாதி**) = இதை அறிகிறானோ; (**ஸ: ஏவ**) = அவனே; (**ஸர்வஜகதாம்**) = உலகிற்கெல்லாம்; (**ஸ்ருஷ்டி-ஸ்த்திதி-தவம்ஸக்ருத்**) = சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரத்தைச் செய்யும். ஈசுவரனைப் போன்றவனாவான்.

**நான்கு வேதங்களிலும்** -

1. 'இந்த்ரோ மாயாபி:' - ருக்வேதம்
2. 'சத்வார ஈம் பிப்ரதி க்ஷேமயந்த:' - யஜுர்வேதம்
3. 'ய ஈம் சகார ந ஸோ அஸ்ய வேத' - ஸாமவேதம்.
4. 'காமோ யோனி:' - அதர்வவேதம்.

இதுவரை கூறப்பட்ட பீஜ மந்திரங்களையும் பஞ்சதாக்ஷரி மந்திரத்தின் மூன்று கூடங்களையும் நன்கறிந்தவன் ஈகவரனுக்கு ஒப்பாவான்.

**(தாத்பரியம்)** ஹே சிவே! அருணவடிவ விமர்ஶ ஸ்வரூபிணியே!! இதுகாறும் பிரதிபாதித்து விமர்சம் செய்யப்பட்ட இரண்டு வகையான வித்தைகளிலுமுள்ள மூன்று பீஜங்களே, நான்கு வேதங்களாலும் பிரகடனம் செய்யப்பட்டனவாயும், மிகச்சிறந்தனவாயும் விளங்கும் வாக்பவம், ஸ்ரீ காமராஜம், சக்தியென்னும் மூன்று கூடங்களையுடைய **மஹாவித்தை**யாக விளங்குகின்றன. ஐந்தக்ஷரங்களோடு கூடியது வாக்பவ கூடம்; ஆறக்ஷரங்களோடு கூடியது காமராஜகூடம்; நான்கக்ஷரங்களோடு கூடியது சக்திகூடம். ஆகவே பதினைந்து அக்ஷரங்களோடு கூடியது மூலவித்தை யாகும். இதையும், முற்கூறிய த்ரிபீஜாத்மக இரண்டு விதமான வித்தைகளையும் எந்தவொரு மஹா புருஷன் அபேதமாக அறிகின்றானோ அவனே ஸர்வப் பிரபஞ்சங்களின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங் களைச் செய்யும் பரமேஶ்வரனுக்குச் சமானமாவன். என்றால் ஈஶ்வர துல்யமான ஸாமர்த்தியத்தைப் பெறுவனென்பது கருத்து.

**(விசேஷவுரை)**

வாக்பவ கூடம் ஸகல வித்தியாப்பிரதம்.
காமராஜ கூடம் ஸ்ரீ ஸௌந்தர்யப்பிரதம்.
சக்தி கூடம் சமத்கார ஸாமர்த்தியப்பிரதம்.

**ஷ்ருதி ப்ரகடிதம்** வேதப்பிரதிபாத்தியம்.
**காமோ யோனி:** என்று அதர்வ வேதத்திலும்,
**இந்த்ரோ மாயாபி:** என்று ருக்வேதத்திலும்,
**சத்வார ஈம் பிப்ரதி க்ஷேமயந்த:**என்று யஜுர் வேதத்திலும்,
**ய ஈம் சகார ந ஸோ அஸ்ய வேத - ஸ ஈம் பாஹி யஜஜி தருந:** என்று ஸாமவேதத்திலும் ஸ்ரீ வித்தையைப் புகழ்ந்துள்ளது அறியத்தக்கது.

**யோ ஜானாதி** - எவன் ஸத் ஸம்பிரதாயத்தில் வந்த ஸத்குருவை ஆஶ்ரயித்து, அவரது அநுக்கிரஹத்தினால் கிரமமாய் தீக்ஷையைப்பெற்று, உபாஸக தர்மத்தினின்றும் சிறிதும் வழுவாது நடக்கின்றானோ அவனாலே தான் **ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ, பாலா, ஸங்கேதஸார** வித்தைகளின் ஏகத்துவத்தை அறிய முடியும். அவனே பரமேஶ்வரனாவன். (16)

**(அவதாரிகை)** ஸ்ரீ வித்தியா பஞ்சதசாக்ஷரீ இந்த ஶ்லோகத்தில் உத்தாரம் செய்யப்படுகின்றது: -

## காதி வித்யா பஞ்சதசாக்ஷரீ உத்தாரம்

**ब्रह्मायोनिरमासुरेश्वरसुहल्लेखाभिरुक्तैस्तथा**
**मार्ताण्डेन्दुमनोजहंसवसुधामायाभिरुसितैः ।**
**सोमाम्बुक्षितिशक्तिभिः प्रकटितैर्वाणाङ्गवेदैः क्रमा**
**द्वणः श्रीशिवदेशिकेन विदितां विद्यां तवाम्बाश्रये ॥१७ ॥**

**ப்ரஹ்மா-யோனி-ரமா- ஸுரேச்வர-ஸுஹ்ருல்லேகாபி-ருக்தைஸ்ததா**
**மார்த்தாண்டேந்து-மனோஜ-ஹம்ஸ-வஸுதா-மாயாபி-ருத்தம்விதை: |**
**ஸோமாம்பு-க்ஷிதி-சக்திபி: ப்ரகடிதைர்-பாணாங்க-வேதை: க்ரமாத்**
**வர்ணை: ஸ்ரீசிவதேசிகேன விதிதாம் வித்யாம் தவாம்பாச்ரயே || 17 ||**

**(பதவுரை)** (**அம்ப!**) = தாயே!; (**ப்ரஹ்மா**) = க; (**யோனி:**) = ஏ; (**ரமா**) ஈ (**ஸுரேச்வர**); ல (**ஸுஹ்ருல்லேகா:**) = ஹ்ரீம் என்ற இவற்றால்; (**உக்தை:**) = கூறப்பட்டதும்; (**ததா**) = அவ்வாறே; (**மார்த்தாண்ட**) = ஹ; (**இந்து**) = ஸ; (**மனோஜ**) = க; (**ஹம்ஸ**) = ஹ; (**வஸுத:**) = ல்; (**மாயாபி:**) = ஹ்ரீம் என்ற இவற்றால்; (**உத்தம்ஸிதை:**) = சிறப்பாய்க் கூறப்பட்டதும்; (**ஸோம**) = ஸ; (**அம்பு**) = க (**க்ஷிதி**) = ல; (**சக்திபி:**) = ஹ்ரீம் என்றவற்றால்; (**ப்ரகடிதை:**) = வெளியிடப்பட்டதும்; (**பாண-**) = ஐந்து; (**அங்க-**) = ஆறு; (**வேதை:**) = நான்கு என்ற; (**க்ரமாத்**) = வரிசையில்; (**வர்ணை:**) = எழுத்துக்களுடன் கூடியதும்; (**ஸ்ரீசிவதேரிகேன**) = உலக குருவான ஸ்ரீசிவனால்; (**விதிதாம்**) = அறியப்பட்டதுமான; (**தவ**) = உம்முடைய; (**வித்யாம்**) = வித்தையை; (**ஆச்ரயே**) = நான் சரணடைகிறேன்.

ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ (காதி வித்யா) இந்த சுலோகத்தில் உத்தாரம் செய்யப்படுகிறது. இது சில பாடங்களில் இல்லை.

## ஸௌபாக்ய வித்யா ஜபம்

**नित्यं यस्ता मातृकाक्षर - सखीं सौभाग्यविद्या जपेद**
**संपूज्याखिल - चक्रराजनिलयो सायंतनामि - प्रमाम् ।**
**कामाख्यं शिवनाम- तचमुमयं व्यापात्मना सर्वतो**
**दीव्यन्ती - मिह तस्य सिद्धि - रचिरात् स्यात् त्वत्स्वरूपैकता ॥१८ ॥**

**நித்யம் யஸ்தவ மாத்ருகாக்ஷர-ஸ்கீம் ஸௌபாக்ய-வித்யாம் ஜபேத்**
**மைபூஜ்யாகில-சக்ரராஜநிலயாம் ஸாயந்தனாக்னி-ப்ரபாம் |**
**காமாக்க்யம் சிவநாம-தத்வமுபயம் வ்யாப்யாதீமனா ஸர்வதோ**
**தீவ்யந்தீ-மிஹ தஸ்ய ஸித்தி-ரசிராத் ஸ்யாத் த்வத்ஸ்வரூபைகதா || 18 ||**

**(பதவுரை)** (**ய:**) = எவன்; (**அகில-சக்ரராஜ-நிலயாம்**) = உலக வடிவமான ஸ்ரீசக்ர ராஜத்தில் நிலை பெற்று விளங்குபவளும்; (**ஸாயந்தன-அக்னிப்ரபாம்**) = ஸாயங்காலத்தில் பிரகாசிக்கும் அக்கினியைப் போன்ற நிறமுடையவளும்; (**காமாக்ய்யம்**) = காமன் எனப் பெயர் பெற்ற ஈசுவரனையும்; (**சிவநாம-தத்வம்**) = சிவம் எனப் பெயர் பெற்ற தத்துவத்தையும்; (**உபயம்**) = இரண்டையும்; (**ஆத்மனா**) = தன் ஸ்வரூபத்தால்; (**ஸர்வத:**) = முழுதும்; (**வ்யாப்ய**) = வியாபித்து; (**தீவ்யந்தீம்**) = பிரகாசிப்பவளும் ஆகிய உம்மை; (**ஸம்பூஜ்ய**) = நன்கு பூஜித்து; (**நித்யம்**) = எப்பொழுதும்; (**மாத்ருகா-அக்ஷர-ஸகீம்**) = மாத்ருகா **அக்ஷ** மாலையின் ஸஹாயத் துடன்; (**தவ**) =உம்முடைய; (**ஸௌபாக்ய-வித்யாம்**) = ஸௌபாக்கிய வித்தையை; (**ஜபேத்**) = ஜபம் செய்கின்றானோ; (**தஸ்ய**) = அவனுக்கு; (**இஹ**) = இங்கு; (**அசிராத்**) = விரைவில்; (**த்வத்ஸ்வரூப-ஏகதா-ஸித்தி:**) = உன் ஸ்வரூபத்துடன் ஒன்றுபட்ட ஸித்தியானது; (**ஸ்யாத்**) = ஏற்படும்.

**ஸ்ரீசக்ரம்** - பிந்து, முக்கோணம், எட்டுக்கோணம். இரண்டு பத்துக்கோணங்கள், பதினாலு கோணம், எட்டு தளம், பதினாறு தளம், மூன்று வட்டம், மூன்று கோட்டுச் சதுரம் என்றவை களாலாகியது பரதேவதையின் ஸ்ரீசக்ர நிலயம்.

**தன் ஸ்வரூபத்தால் வியாபித்து** - ஓ. சம்புவினுடைய இடது பாகம் உன்னால் எடுத்துக் கொள்ளப்பட்ட பின்பும் முழுத் திருப்தி இல்லாத மனதால் சரீரத்தின் மற்றொரு பாதியும் கவர்ந்து கொள்ளப்பட்டதென்று ஊகிக்கிறேன். - ஸௌ.ல. 23

**மாத்ருகா-அக்ஷமாலை** - ஜபமாலையில் உள்ள 51 மணிகளில் நடுமணி 'க்ஷ' எனும் அக்ஷரத்தைக் குறிக்கும். அதற்கு மேரு என்று பெயர். ஜபம் செய்யும்போது அதை தாண்டாமல் திருப்பி எண்ண வேண்டும். மற்ற மணிகள் 'அ' (अ) முதல் 'ள' (ळ) வரை உள்ள 50 அக்ஷரங்களைக் குறிக்கும். அதனால் ஜபமாலைக்கு அக்ஷமாலை என்று பெயர்.

**ஸௌபாக்ய வித்யா** - எல்லா ஸௌபாக்கியங்களும் அருள்வதால் ஸ்ரீவித்தைக்குப் பொதுவாக ஸௌபாக்ய வித்தை எனப் பெயர் பொருந்துமானாலும் பாலா பீஜங்களை ஒவ்வொரு கூடத்தின் முன்பும் கூட்டி ஜபிப்பது 'ஸௌபாக்ய வித்யா' எனச் சிறப்பாகக் கூறப்படும். (ஐம்- கஏஈலஹ்ரீம், க்லீம் ஹஸகஹலஹ்ரீம், ஸௌ: - ஸகலஹ்ரீம்.)

**ஸம்பூஜ்ய** - பூதசுத்தி. நியாஸங்கள். முதலியவற்றுடன் ஸாங்கோபாங்க மாகச் செய்யப்படும் நவாவரண பூஜை.

**சிவநாம தத்வம்** - பஞ்சப்ரஹ்மம் எனும் மஞ்சத்தையும் பிருதிவி முதல் சிவன் வரை உள்ள 36 தத்துவங்களையும் தேவி வியாபிக்கின்றாள்.

ஓ. '[கதாஸ்தே மஞ்சத்வம் - ஸௌ. ல. 92.

**ஏகதாஸித்தி:** - ஓ. ஸ ஏவ லலிதாரூபஸ்-தத் ரூபா லலிதா ஸ்வயம் । ந தயோர் வித்யதே பேதோ பேதக்ருத் பாபக்ருத் ஜவேத் ॥ லலிதா ஸஹஸ்ரநாம - பலச்ருதி. - 56. (18)

**(அவதாரிகை)** ஸ்ரீ பரதேவதையை நன்கு ஆராதிக்காமல் ஒருவன் எவ்வளவு காலம் எத்தனை சாஸ்திரங்களைக் கற்கினும் அவை பயன்படுவதில்லை யென்பது இந்த ஶ்லோகத்தில் வற்புறுத்தப்படுகின்றது.

## தேவி உபாஸனை இல்லாத வித்தை பயனில்லை

**काव्यैर्वा पठितैः किमल्पविदुषां जोघुष्यमाणैः पुनः**
**किं तैर्व्याकरणैर्विबोबुधिषया किं वाभिधानश्रिया ।**
**एतैरम्ब न बोभवीति सुकविस्तावत्तब श्रीमतो**
**विनानुसरीसरीति सरणिं पादाब्जयोः पावनीम् ॥१ ९ ॥**

**காவ்யைர்வா படிதை: கிமல்பவிதுஷாம் ஜோகுஷ்ய-மாணை: புன:-**
**கிம் தைர்-வ்யாகரணைர்-விபோபுதிஷயா கிம் வாபிதானச்ரியா ।**
**ஏதைரம்ப நபோபவீதி ஸுகவிஸ்-தாவத்தவ ஶ்ரீமதோர்-**
**யாவந்நானுஸரீஸரீதி ஸரணிம் பாதாப்ஜயோ: பாவனீம்** ॥ 19 ॥

**(பதவுரை)** (**அம்ப**) = தாயே!; (**படிதை:**) = படிக்கப்பட்ட; (காவ்யை: வா) = காவியங்களால் தான்; (**கிம்**) = என்ன பயன்?; (**அல்ப விதுஷாம்**) = அல்ப ஞானம் படைத்தவர்களுக்கு; (**புன:**) = மேலும்; (**ஜோருஷ்யமாணை:**) = கோஷம் செய்யப்பட்ட; (**தை: வ்யாகரணை:**) = அந்த வியாகரணங்களால் தான்; (**கிம்**) = என்ன பயன்?; (**அபிதானச்ரியா**) = பேச்சுவன்மையுடன்; (**விபோபுதிஷயா**) = வாதம் செய்வதால் தான்; (**கிம்**) = என்ன பயன்?; (**யாவத்**) = எதுவரை; (**தவ**) = உம்முடைய; (**ஶ்ரீமதோ:**) = எல்லாச் சிறப்புக்களும் பொருந்திய; (**பாதாப்ஜயோ:**) = திருவடித்தாமரைகளின்; (**பாவனீம்**) = பரிசுத்தமான; (**ஸரணிம்**) = மார்க்கத்தை; (**ந அனுஸரீ ஸரீதி**) = பின்பற்றவில்லையோ; (**தாவத்**) = அதுவரை; (**ஸுகவி:**) = உண்மையான கவித்திறன் உடையவனாக; (**நபோபவீதி**) = ஒருவன் ஆய்விடுவதில்லை.

**(தாத்பரியம்)** ஹே அம்ப! உத்தமமான வித்யாஸம்பத்து முதலிய சிறப்புக்களைத் தரும் உனது சரண கமலங்களினுடைய பரிசுத்தமான மார்க்கத்தை எவ்வளவு காலம் ஒருவன் நன்றாக அநுசரிக்கவில்லையோ, அவ்வளவு காலம் வரை, அற்பமதியையுடைய அவன், மஹா கவிகளியற்றிய மஹா

காவ்வியங்களைப் படித்ததனால் என்ன பயனுண்டாகும்? நன்றாக அப்பியாஸம் செய்யப்பட்டு வாதத்தில் ஆவஹாரம் செய்யப்படுகின்ற வியாகரணம் தர்க்கம் முதலியவற்றால் தான் என்ன பிரயோஜனம்? கற்றதைப் பிறர் வியக்கும்படி சமத்காரமாய்ப் பேசுவதால்தான் என்ன பயன்? விசேஷமான அறிவைப் பெற வேண்டு மென்னும் விருப்ப முடைமையால் தான் என்ன பயன்? இவற்றால் அவன், ஞானிகளாகிற வித்வான்களைச் சந்தோஷப்படுத்தக்கூடிய கவிதா சக்தியுள்ளவனாக ஆவதேயில்லை; அது உனது உபாஸனையால் தான் ஏற்படும். (19)

**(அவதாரிகை)** ஸ்ரீ வித்யோபாஸகர்களுக்குப் பிறரால் அநிஷ்டமாய்ப் பாவிக்கப்படும் வஸ்துக்கள் கூட இஷ்டமானவையாய்ப் பவிக்குமென்பது இதில் நிர்த்தேசம் செய்யப்படுகின்றது.

## தேவியை வழிபடுபவனுக்குத் தீயதும் நல்லதாகிவிடும்.

**गेहं नाकति गर्वितः प्रवणति स्त्रीसंगमो मोक्षति**
**द्वेषी मित्रंति पातकं सुकृतति क्ष्मावल्लभो दासति ।**
**प्रत्युवैद्यति दूषणं सुगुणति त्वत्पादसंसेवनात्**
**त्वां वन्दे भवभीतिभञ्जनकरीं गौरीं गिरीशप्रियाम् ॥२० ॥**

**கேஹம் நாகதி கர்வித: ப்ரவணதி ஸ்திரீஸங்கமோ மோக்ஷதி**
**த்வேஷீ மித்ரதி பாதகம் ஸுக்ருத்தி க்ஷமாவல்லபோ தாஸதி ।**
**ம்ருத் -வைத்யதி தூஷணம் ஸுகுணதி த்வத்பாத-ஸம்ஸேவனாத்**
**த்வாம் வந்தே பவபீதி-பஞ்ஜனகரீம் கௌரீம் கிரீசப்ரியாம் ॥ 20 ॥**

**(பதவுரை)** (**த்வத்பாத-ஸம்ஸேவனாத்**) = உம்முடைய பாதஸேவையால்; (**கேஹம்**) = வீடு; (**நாகதி**) = ஸ்வர்க்கத்திற்கொப்பாகும்; (**கர்வித:**) = கர்வங் கொண்டவன்; (**ப்ரவணதி**) = வணங்குவான்; (**ஸ்த்ரீஸங்கம:**) = ஸ்திரீயுடன் புணர்தல்; (**மோக்ஷதி**) = மோக்ஷமளிக்கும்; (**த்வேஷீ**) = பகைவன்; (**மித்ரதி**) = நண்பனாவான்; (**பாதகம்**) = கொடிய பாவம்; (**ஸுக்ருததி**) = புண்ணியமாகும்; (**க்ஷமாவல்லப:**) = லக்ஷ்மீபதியும்; (**தாஸதி**) = அடிமையாவான்; (**ம்ருத்யு:**) = யமன்; (**வைத்யதி**) = வைத்தியனாவான்; (**நுஷணம்**) = நிந்தையும்; (**ஸுருணதி**) = புகழ்ச்சியாகும்; (**பவாதி-பஞ்ஜனகரீம்**) = பிறவியிலுள்ள பயத்தையொழிப்பவளும்; (**கிரீச்ப்ரியாம்**) = கிரீசனுடைய பத்னியும்; (**கௌரீம்**) = கௌரியுமான; (**த்வாம்**) = உம்மை; (**வந்தே**) = நான் வணங்குகிறேன்.

நல்ல வைத்திய முறையில் விஷமும் மருந்தாவது போல் ஸ்ரீவித்யா உபாஸனையால் தீயவைகளும் நன்மையைத் தருபவைகளாக மாறிவிடுகின்றன.

**(தாத்பரியம்)** பிறப்பாகும் மஹாபயத்தை யொழித்தருளும் அபயஸ்வரூபியே! உனது சரணங்களைச் சேவிப்பதனால், கிருஹமானது துன்பத்தைத் தருவதாயினும் அது இன்பத்தைத் தரும் ஸ்வர்க்கத்துக்கு ஸமானமாகின்றது; அஹங்காரத்தினால் கர்வங்கொண்டவன் வணங்குகின்றான்; சிற்றின்பம் பேரின்பமாகின்றது; சத்துரு மித்திரனாகின்றனன்; பாபகிருத்தியங்களெல்லாம் தர்மமாக மாறுகின்றன; அரசனும் அடிமையாகின்றான்; பிராணனை யபகரிக்க வரும் மிருத்யுவும் பிராணனைக் காப்பாற்ற வழிதேடும் வைத்தியனாகின்றான்; பிறர் செய்யும் தூஷணையாவும் அவனுக்குப் பூஷணமாகின்றன. ஆதலின் பரமசிவத்தின் மஹிஷியாயும், கௌரியாயுமுள்ள உனது ஸ்வரூபத்தை நமஸ்கரிக்கின்றேன். (20)

**(அவதாரிகை)** ஸாதகனுக்குக் கிருதகிருத்யத்துவஸித்தியின் பொருட்டு, காமகலாஸ்வரூப பிந்துத்திரயங்களின் விலாஸமான பாஹ்யாந்தர மும்மைகளின் விமர்ஶன பூர்வகமாய்த் திரிபுராசப்தத்தின் அர்த்தத்தைப் பிரதிபாதனம் செய்கின்றனர்.

## த்ரிபுரா ப்ரபாவம்

**आद्यैरग्निरवीन्दुविम्बनिलयैरम्ब त्रिलिङ्गात्मभि**
**मिश्रारक्तसितप्रभैरनुपमैयुष्मत्पदैस्तैत्रिभिः**
**खात्मोत्पादितकाललोकनिगमावस्थामरादित्रय**
**रुद्भूतं त्रिपुरेति नाम कलयेद्यस्ते स धन्यो बुधः ॥२१ ॥**

**ஆத்யை-ரக்னி-ரவீந்து-பிம்ப-நிலயை ரம்ப த்ரிலிங்காத்மபிரீ-**
**மிச்ராரக்தஸித-ப்ரபை-ரனுபமைர்-யுஷ்மத்பதை-ஸ்தை.ஸ்த்ரிபி: |**
**ஸ்வாத்மோத்பாதித-கால.லோக-நிகமாவஸ்த்தாமராதி-த்ரயை-**
**ருத்பூதம் த்ரிபுரேதி நாம கலயேத் யஸ்தே ஸ தன்யோ புத: || 21 ||**

**(பதவுரை)** (**அம்ப**|) = தாயே!; (**ஆத்யை:**) = அ முதலிய அக்ஷரங்களால் ஆன மாத்ருகா மணி பீடங்களாலும்; (**அக்னி-ரவி-இந்து-ரம்ப நிலயை:**) = அக்னி மண்டலம் சூரிய மண்டலம் ஸோம மண்டலம் ஆகியவற்றாலும்; (**த்ரிலிங்காத்மபி:**) = மூலாதாரம் இருதயம் புருவமத்திகளில் விளங்கும் ஸ்வயம்பு, பாணம், இதரம் எனும் - மூன்று லிங்கங்களாலும்; (**மிச்ர-ஆரக்த-ஸித-ப்ரபை:**) = கலப்பு, சிவப்பு, வெள்ளை என்றும் ஒளியுடன் கூடிய; (**அனுபமை:**) = ஒப்பற்ற; (**யுஷ்மத்பதை:**) = உமது பதங்களாகிற; (**தை: த்ரிபி:**) = அம் மூன்றாலும்; (**ஸ்வாத்ம-உத்பாநித-**) = உம்மிடமிருந்து தோற்றுவிக்கப்பட்ட; (**கால-**) = காலம்; (**லோக-**) = லோகம்; (**நிதம-**) = வேதம்; (**அவஸ்த்தா-**) = அவஸ்தை; (**அமராதி**) = தேவர் முதலிய; (**த்ரயை:**) = மும் மூன்றாகியவற்றாலும்; (**உத்பூதம்**) = ஏற்பட்ட; (**த்ரிபுரா இதி**) = த்ரிபுரா எனும்; (**தே**) = உமது; (**நாம**) = நாமத்தை; (**ய:**) = எவன்; (**கலயேத்**) = உண்மை உணர்வுடன்

சொல்லுகிறானோ; (**ஸ:**) = அவன்; (**தன்ய:**) = உண்மைச் செல்வம் படைத்தவன்; (**புத:**) = அறிவு படைத்தவன்.

**அ முதலிய அக்ஷரங்களால் ஆகிய மணிபீடம்: -** அ முதல் 16, க முதல் பதினாறு, த (த) முதல் பதினாறு ஆகியவற்றுடன் ஹ, ள. க்ஷ, என்ற 3 எழுத்துக்களையும் கொண்ட மாத்ருகா த்ரிகோணபீடம்.

**சிவப்பு, வெள்ளை, கலப்பு என்னும் பதங்கள்: -** மாயையில் பிரதி பலித்த சைதன்யம் மகாபிந்து எனப்படும். அது மூன்றாகப் பிரிகிறது. (1) சுக்லபிந்து அல்லது சித்பிந்து (2) ரக்த பிந்து அல்லது அசித்பிந்து (3) மிச்ர (கலப்பு) சித்-அசித்பிந்து.

**காலம்** - இறந்தகாலம், நிகழ்காலம். எதிர்காலம்.

**லோகம்** - ஸ்வர்க்கம், மத்தியம். பாதாளம் அல்லது பூலோகம், புவர்லோகம், ஸுவர் லோகம்.

**வேதம்** - ரிக், யஜுஸ். ஸாமம்.

**அவஸ்தை** - ஜாக்ரம் (விழிப்பு). ஸ்வப்னம் (கனவு), ஸுஷுப்தி (உறக்கம்).

**தேவர்** - பிரம்மா. விஷ்ணு, ருத்திரர்.

இவ்வாறு மும் மூன்றாக உள்ளனவற்றிற்கெல்லாம் அதிஷ்டானமா யிருப்பதால் பரதேவதைக்கு **த்ரிபுரா** எனப்பெயர்.

**(தாத்பரியம்)** ஹே மாதா! உமக்குத் **திரிபுரா** வென்னும் திருநாமமானது, உமது பராஸ்வரூபமாயும், த்ரிபிந்து ஸ்வரூபமாயுமுள்ள காமகலையா லேற்பட்ட மும்மைகளினால் வந்ததென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவைகள் எவையெனின், **अ, क, य, ह, ल,** क्ष என்னும் மாத்ருகாத்ரி கோணமணிபீடம்; அக்கினி, ஸூர்ய ஸோம மண்டலத்திரயம்; மூலாதாரம், ஹ்ருதயம், புருவமத்திகளில் விளங்கும் ஸ்வயம்பு, பாண, இதரங்களென்னும் லிங்கத்திரயங்கள்; சுக்கிலம், ரக்தம், மிஸ்ரமென்னும் சரணத்திரயங்கள்; காலை, உச்சிப்போது, மாலையென்னும் காலத்திரயங்கள், ஸ்வர்க்கம், மர்த்தியம், பாதாளமென்னும் லோகத்திரயங்கள்; ருக், யஜுஸ், ஸாமமென்னும் நிகமத்திரயங்கள்; ஜாக்கிரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி யென்னும் அவஸ்தாத்திரயங்கள்; பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரரென்னும் தேவதா (மூர்த்தி) த்திரயங்கள்; இங்ஙனம் மும்மூன்றாய் ஏற்பட்டுள்ள பொருள்களுக் கெல்லாம் நீயே அதிஷ்டானமாய் விளங்குகின்றனை யென்னும் உண்மையை எவன்

நிச்சயமாய் அறிகின்றானோ அவனே தன்னியன், ஞானி; கிருத கிருத்தியனும் அவனே யாவன்.

**(விசேஷவுரை)** आदि சப்தத்தினால் காமகிரி, பூர்ணகிரி, ஜாலந்தர மென்னும் பீடத்திரயங்கள், கார்ஹபத்தியம், ஆஹவநீயம், தக்ஷிணாக்கினி என்னும் வஹ்நித்திரயங்கள் இச்சா, ஞானம், கிரியைகளென்னும் சக்தித்திரயங்கள், முதலியனவும் கொள்ளத்தக்கன. இங்ஙனம் மும்மூன்றாய் உள்ளனவற்றிற் கெல்லாம் அதிஷ்டானமாய் பரதேவதை விளங்குவதால் அவளுக்குத் **திரிபுரை** யென்னும் பெயரேற்பட்ட தென்னும் தத்துவத்தைச் சற்குருபால் விதிப்படி யறிந்த உபாஸகன் ஸ்வஸ்வரூப ஆத்ம ஞானத்தைப்பெற்றுத் தன்னியனாகின்றனன். (21)

**(அவதாரிகை)** மும்மைகளுக்குக் காரணமாயும், காமகலா ஸ்வரூபிணி யாயுமுள்ள பரதேவதையின் பஞ்சதசாக்ஷரீ வித்தையின் கூடத்திரயங்கள் வாச்சிய, வாசக, வக்தாஸ்வ ரூப அக்ஷரத்திரயவடிவ பிரணவஸ்வரூபமா யிருக்கின்ற தென்பது கூறப்படுகின்றது.

## பிரணவமும் ஸ்ரீவித்தையே

**आद्यो जाप्यतमार्थवाचकतया रूढः स्वरः पञ्चम :**
**सर्वोत्कृष्टतमार्थवाचकतया वर्ण : पवर्गान्तकः ।**
**वक्तृत्वेन महाविभूतिसरणिस्त्वाधारगो हृद्गतो**
**भ्रूमध्ये स्थित इत्यतः प्रणवता ते गीयतेऽम्बागमैः ॥२२ ॥**

**ஆத்யோ ஜாப்யதமார்த்த-வாசகதயா ரூட: ஸ்வர: பஞ்சம:**
**ஸர்வோத்க்குஷ்டதமார்த்த-வாசகதயா வர்ண: பவர்க்காந்தக: |**
**வக்த்ருத்வேன மஹாவிபூதி-ஸரணி-ஸ்த்வாதாரகோ ஹ்ருத்கதோ**
**ப்ருமத்த்யே ஸ்த்தித இத்யத: ப்ரணவதா தே கீயதேடம்பாகமை: ||23||**

**(பதவுரை)** (**அம்ப**) = தாயே! (**ஆத்ய:**) = பிரணவத்தில் முதல் எழுத்தான அகாரமானது; (**ஜாப்யதம-அர்த்த-வாசகதயா**) = ஜபிக்கக் கூடியதில் உத்தமமான அர்த்தத்தைக் கூறுவதாலும்; (**ரூட: ஸ்வர: பஞ்சம:**) = அதன்மேல் ஏறின ஐந்தாவது உயிரெழுத்தான உகாரமானது; (**ஸர்வோத்க்ருஷ்டதம-**) = அனைத்திலும் சிறந்த; (**அர்த்தவாசகதயா**) = அர்த்தத்தைக் கூறுவதாலும்; (**வர்ண: பவர்க்காந்தக:**) = ப வர்க்கத்தின் முடிவிலுள்ள எழுத்தான மகாரமானது; (**வக்த்ருத்வேன**) = வக்தா அல்லது ஜீவ வடிவில்; (**மஹாவிபூதிஸரணி:**) = மகத்தான ஐசுவரியத்திற்கு வழியா யிருப்பதாலும்; (**ஆதாரக:**) = மூலாதாரத்திலும்; (**ஹ்ருத்தத:**) = இருதயத்திலும்; (**ப்ருமத்யே**) = புருவ மத்தியிலும்; (**ஸ்தித:**) = இருக்கிறது; (**இதி அத:**) = என்று

கூறப்படுங்காரணத்தாலும்; (**தே**) = உமக்கு; (**ப்ரணவதா**) = ப்ரணவத்தன்மை; (**ஆகமை:**) = ஆகமங்களால்; (**கீயதே**) = கூறப்படுகிறது.

**ப்ரணவம்** என்பது **ஓம்**. அது அ, உ, ம என்ற எழுத்துக்களை உட்கொண்டது. அகாரம் மூலாதாரத்திலும், உகாரம் இருதயத்திலும், மகாரம் புருவமத்தியிலும் விளங்குபவை. அகாரம் வாக்பவகூடம், உகாரம் மத்யகூடம், மகாரம் சக்தி கூடம். பஞ்சதசாக்ஷரீ மந்திரம் ப்ரணவஸ்ரூபம், அதுவே தேவியின் மந்திரவடிவம்.

**(தாத்பரியம்)** ஹே அம்பிகே! பிரணவமானது மூன்று அக்ஷரங்களோடுகூடி விளங்குகின்றது. அவற்றுள் முதலாவதான அகாரமானது, ஜபிக்கக்கூடிய மந்த்ரங்களுக்கெல்லாம் உத்க்ருஷ்டமான ஸ்ரீ வித்தையின் அர்த்த பூதமான உம்மையே பிரதிபாதிக்கின்றது; அதன் இரண்டாவது வர்ணமாகிய உகாரமானது சிறந்த வஸ்துக்களிலெல்லாம் சிறந்த உம்மையே தெரிவிக்கின்றது; அதன் மூன்றாவது வர்ணமாகும் மகாரம் மஹா விபூதியாகும் பரமைஸ்வர்யத்தை யளிக்கின்றதென்னுங் காரணத்தால் மஹாஸௌபாக்கிய வடிவ உம்மையே குறிக்கின்றது. மேற் கூறிய அகார, உகார, மகாரங்கள் முறையே மூலாதாரம், ஹ்ருதயம், புருவமத்திகளில் விளங்குகின்றன வென்றும், வாசகம், வாச்சியம், வக்தாஸ்வரூபமாய் இருக்கின்றன வென்றும், ஆதலின் உமக்குப் பிரணவ ஸ்வரூப முண்டென்றும் வேதாகமங்கள் கோஷிக்கின்றன.

**(விசேஷவுரை) आघः (ஆத்$^4$ய:)** = மாத்ருகா வர்ணமாலையில் முதலாவது அகாரம்; ஐந்தாவது ஸ்வரம் உகாரம்; பவர்க்கத்தில் கடைசி யெழுத்து மகாரம், **अकारः सर्ववर्णाय्यः प्रकाशः परमः शिवः** (**அகார: ஸர்வவர்ணாய்ய: ப்ரகாஷ: பரம ஷிவ:**) என்னும் ஸங்கேத பத்ததியின் பிரமாணத்தின்படி, அகாரம் பரப்பிரஹ்ம வாசகம். உகாரம் விஷ்ணு வாசகம். **ருதா$^3$சிதா$^3$த்4ய லலிதா பும்ரூபா க்ருஷ்ணவிக்$^3$ரஹ:** என்னும் தந்த்ரராஜங்கனத்தின்படி சித்சக்தியின் புருஷ வடிவமே விஷ்ணுவாதலின் விஷ்ணு சக்திகளுக்குப் பேதமின்மையின் உகாரம் சக்திவாசகமு மாகும்.

மகாரம் ஜீவ வாசகம்; வக்தா. அகாரம் வாசகம் சப்தரூபம்; உகாரம் வாச்சியம் சித்சக்தி ரூபம். ஆதலின் வாசக, வாச்சிய, வக்த்ருவடிவ திரிபுடி ஸ்வரூபமே அகார, உகார, மகாரங்களாகும். ஆதலின் திரிபிந்து ஸ்வரூப காமகலா வடிவமாகும்.

அகாரம் அக்கினிமண்டலம், மூலாதாரம்.
உகாரம் ஸூர்யமண்டலம், ஹ்ருதயம்.
மகாரம் ஸோம மண்டலம், புருவமத்தி.
இவற்றின் ஸமஷ்டி ஓம் என்னும் பிரணவம்.
ஓம் என்பதன் நாதமே அர்த்தமாத்திரை யாகும்.

**उमेति परमा शक्तिः पूर्वभावमुपेयुषी ।**
**अध्युष्टवलयाकारा प्रणवत्वमुपागता ॥**

அத்யுஷ்ட வலயம் = மூன்றரைச்சுற்று வளைவு அகார, உகார, மகாரங்கள் மூன்று சுற்றுகள். அர்த்த மாத்திரை = பாதி வளையம். ஆக மூன்றரைச் சுற்றுகள். ஆதலின் பிரணவ ஸ்வரூபமே அத்யுஷ்ட வலய மென்பதன் ரஹஸ்யார்த்தமாம். ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்தையின் வாக்பவகூடம் அகாரம், காமராஜ கூடம் உகாரம், சக்தி கூடம் மகாரம். அந்திய கூடத்தின் நாதமே அர்த்த மாத்திரை. ஆதலின் பஞ்சதசாக்ஷரீ வித்தை பிரணவ வடிவமே யாகும். (22)

**(அவதாரிகை)** ஸ்ரீ பரதேவதைத் துரீய பாதத்தோடும் சிரஸோடுங்கூடிய காயத்ரீ ஸவரூபமாகவும், ஸர்வ தரஸனங்களுக்கும் அதிதேவதையாகவும், ஸர்வமதங்களுக்கும் அதிஷ்டான ஸ்வரூபமாகவும் வர்ணிக்கப்படுகின்றனள்.

## ஸ்ரீவித்தையில் அனைத்தும் அடக்கம்

**गायत्री सशिरास्तुरीय - सहिता सन्ध्यामयीत्यागमै**
**राख्याता त्रिपुरे त्वमेव महता शर्मदा कर्मणाम् ।**
**तत्त्वदर्शन - मुख्यशक्तिरपि च त्वं ब्रह्म - कर्मेश्वरी**
**कर्हिन पुरुषो हरिश्च सविता बुद्धः शिवस्त्वं गुरुः । २३**

**காயத்ரீ ஸசிராஸ்துரீய-ஸஹிதா ஸந்த்தயா-மயீத்யாகமை-**
**ராக்க்யாதா த்ரிபுரே த்வமேவ மஹதாம் சர்மப்ரதா கர்மணாம் ।**
**தத்தத்தர்சன-முக்க்ய சக்திரபிச த்வம் ப்ரஹ்ம கர்மேச்வரீ**
**கர்த்தார்ஹன் புருஷோ ஹரிச்ச ஸவிதா புத்த: சிவஸ்த்வம் குரு: ॥ 23 ॥**

**(பதவுரை)** (**த்ரிபுரே**) = த்ரிபுரசுந்தரியே!; (**ஆகமை:**) = ஆகமங்களால்; (**ஸசிராஸ்துரீய ஸஹிதா**) = சிரோமந்திரத்துடனும் நான்காவது பாதத்துடனும் கூடியதும்; (**ஸந்த்யாமயீ**) = ஸந்தியா வடிவானதுமாகிய; (**காயத்ரீ**) = காயத்ரீ; (**த்வம் ஏவ**) = நீயே; (**இதி**) = என்று; (**ஆக்யாதா**) = கூறப்படுகிறாய்; (**மஹதாம்**) = சிறப்பான; (**கர்மணாம்**) = கருமங்களுக்கு; (**சர்மப்ரதா**) = இன்பமாகிய பயனை அளிப்பவள் ஆகவும்; (**தத்தத்**) = அந்தந்த; (**தர்சன**) = சாஸ்திரத்தின்; (**முக்க்ய சக்தி: அபிச**) = முக்கிய சக்தியாகவும்; (**த்வம்**) = நீயே விளங்குகின்றாய்; (**ப்ரஹ்ம-**) = பிரம்மம்; (**கர்ம-**) = கர்மம்; (**ஈச்வரி**) = பரதேவதை; (**கர்த்தா-**) = கர்த்தா; (**அர்ஹன்**) = அர்ஹன்; (**புருஷ:**) = புருஷன்; (**ஹரிச்ச**) = ஹரியும்; (**ஸவிதா**) = சூரியன்; (**புத்த:**) = புத்தன்; (**சிவ:**) = சிவன்; (**குரு:**) = குருவும்-என்பதெல்லாம்-; (**த்வம்**) = நீயே.

**காயத்ரீசிரஸ்** - ஓம் ஆபோஜ்யோதீரஸோ அம்ருதம் ப்ரஹம பூர்ப்புவஸ்ஸுவரோம்.

**துரீய பாதம்** - 'பரோ ரஜஸே ஸாவதோம்.' காயத்ரீயில் வியாஹிருதிகள் ஒரு கூடமாகவும் மூன்று பாதங்கள் மூன்று கூடங்களாகவும், துரீய பாதம் ஒரு கூடமாகவும், சிரஸ், ஒரு கூடமாகவும் கொண்டால், ஆறு கூடங்களும் சேர்ந்து மஹா ஷோடசீ மந்திரத்திற்குச் சமம் ஆகும். மஹாஷோடசீ மந்திர விளக்கம் 2வது சுலோகத்தில் காண்க. சக்தி உபாஸனையில் எம்மதமும் ஸம்மதம் என்ற ஸமயஸமரஸபாவனை அடங்கி உள்ளது கவனிக்கத் தக்கது.

**(தாத்பரியம்)** ஹே த்ரிபுரசுந்தரியே! உம்மை வேதங்களும் ஆகம சாஸ்திர புராணாதிகளும், துரீய பாதத்தோடும் சிரோ மந்த்ரத்தோடுங்கூடிய காயத்ரீ மஹாமந்த்ரத்தின் அதிஷ்டான ஸ்வரூபமாகக்கூறுகின்றன. அன்றியும் நீயே ஸ்ரௌத, ஸ்மார்த்த, நித்திய, நைமித்திக, காம்யாதி கர்மங்களின் பயனான ஸுகத்தை யருள்பவளாயும், வேதாந்திகளுக்குப் பிரஹ்மஸ்வரூபமாகவும், பூர்வமீமாம்ஸகர்களுக்குக் கர்மமாகவும், சாக்தர்களுக்குப் பராசக்தியாகவும், தார்க்கிகர்களுக்குக் கர்த்தாவாகவும், சார்வாகர்களுக்கு அதாவது தேஹாத்மவாதிகளுக்கு அர்ஹனாகவும், ஸாங்கியர்களுக்குப் புருஷனாகவும், வைஷ்ணவர்களுக்கு விஷ்ணுவாகவும், ஸௌரர்களுக்கு ஸூர்யனாகவும், பௌத்தர் களுக்கு புத்தராகவும், சைவர்களுக்குச் சிவனாகவும் விளங்குகின்றனை. எல்லா மதங்களிலும் தர்சனங்களிலும் முதல் முதலில் வழிபடத்தக்க குருரூபிணியாகவும் நீயே பிரகாசிக்கின்றனை.

**(விசேஷவுரை)** இந்த ஶ்லோகத்தில், பரதேவதைக்கு ஸர்வ மதங்களின் அதிஷ்டானத்துவம் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்தையின் ஒவ்வொரு கூட டத்திற்கும் துரீய பாதத்தோடு கூடிய காயத்திரீஸ்வரூபம் திரிபுராதாபினீ உபநிஷத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருப்பது அறியத்தக்கது.

**सशिरा: तुरियसहिता** என்று கூறப்பட்டுள்ளதால் ஸ்ரீமஹாஷோடசீஸ்வவரூபமும் ஸூசிப்பிக்கப்படுகின்றது. பிரணவ வியாஹ்ருதிகள் ஒரு கூடம், திரிபதா காயத்ரீ மூன்று கூடங்கள், துரீயபாதம் ஒரு கூடம், சிரோமந்த்ரம் ஒரு கூடம். ஆக ஆறு கூடங்கள். இந்த ஆறு கூடங்களும் ஸ்ரீ மஹாஷோடசியின் ஆறுகூடங்களோடு துல்யமானவை யென்றுணரத்தக்கது.

**संध्यामयी** = ஸந்தியாகாலஸ்வரூபிணி. ஸந்திகள் நான்கென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பிராதஸ் ஸந்தி, மாத்யாந்ஹிக ஸந்தி, ஸாயம் ஸந்தி, துரீய ஸந்தி யென்பனவாம். நான்கு ஸந்திகளிலும் காயத்ரீஸ்வரூபமாகப் பரதேவதையே உபாஶிக்கப்படுகின்றனள். வாக்பவகூட காயத்ரீ, காமராஜகூட காயத்ரீ, சக்திகூட

காயத்ரீ, துரீயகூட காயத்ரீ என நான்கு காயத்ரீகள் ஸ்ரீ வித்யோபாஸ்தியில் மிகப்பிரசித்தமானவை. (23)

(**அவதாரிகை**) இந்த ஶ்லோகத்தில் பஞ்சகோசங்களுக்கும் அதீதமானதும், விலக்ஷணமானதுமான ஆத்மஸ்வரூபமே பரதேவதை யென்றும், விஶ்வாதிஷ்டான பரப் பிரஹ்மத்திற்கும் பரதேவதைக்கும் கிஞ்சித்தும் போதமில்லை யென்றும், ஆதலின் பரதேவதையை யுள்ளபடி அறிந்தவனே பிரஹ்மவித் என்றுங் கூறப்படுகின்றது.

## பஞ்ச கோசங்களுள் விளங்கும் ஆத்ம ஜோதியே பரதேவதை

**अन - प्राण - मना - प्रबोध - परमानन्दः शिर : -पक्षयुक**
**पुच्छात्मप्रकटमहोपनिषदां वाग्भिः प्रसिद्धीकृतैः ।**
**कोशैः पञ्चभिरेभिरम्ब भवतीमेतत्पलीनामिति**
**ज्योतिःप्रज्वलदुज्ज्वलात्मचपलां यो वेद स ब्रह्मवित् ॥२४ ॥**

**அன்ன-ப்ராண-மன:-ப்ரபோத-பரமானந்தை: சிர: பக்ஷயுக்**
**புச்சாத்ம-ப்ரகடைர்-மஹோபநிஷதாம் வாக்பி ப்ரஸித்தீக்ருதை:** ।
**கோசை: பஞ்சபிரேபி-ரம்ப பவதீ-மேதத் ப்ரலீனாமிதி**
**ஜ்யோதி: ப்ரஜ்வல-துஜ்ஜ்வலாத்ம-சபலாம் யோ வேத ஸ ப்ரஹ்மவித்** ||24||

(**பதவுரை**) (**அம்ப**) = தாயே!; (**அன்ன-**) = அன்னமயம்; (**ப்ராண-**) = பிராணமயம்; (**மன:**) = மனோமயம்; (**ப்ரபோத-**) = விக்ஞானமயம்; (**பரமானந்தை:**) = ஆனந்தமயம் என்றவையும்; (**சிர:-**) = தலை; (**பக்ஷயுக்-**) = இரண்டு இறக்கைகள்; (**புச்ச-**) = வால்; (**ஆத்ம-**) = உடல்-என்ற; (**ப்ரகடை:**) = பிரகடனத்துடன்; (**மஹோப நிஷதாம் வாக்பி:**) = சீரிய உபநிஷத வாக்கியங்களால்; (**ப்ரஸித் தீக்ருதை:**) = பிரசித்தம் செய்யப்பட்டவையுமான; (**ஏரி:**) = இந்த; (**கோசை: பஞ்சரி:**) = ஐந்து கோசங்களால்; (**ப்ரலீனாம்**) = மறை பட்டிருக்கும்; (**பவதீம்**) = உம்மையே; (**ஏதத்**) = இந்த; (**ப்ரஜ்வலத்-உஜ்ஜ்வலாத்ம-சபலாம் ஜ்யோதி:**) = பிரகாசமாய் மின்னல் கொடி போல் ஜ்வலிக்கும் ஆத்மஜ்யோதி என்று; (**ய:**) = எவன்; (**வேத**) = அறிகிறானோ; (**ஸ:**) = அவனே; (**ப்ரஹ்மவித்**) =பிரம்மஞானி யாவான்.

ஒ பஞ்சகோசாந்தரஸ்திகா - லலிதா ஸஹஸ்ரநாமம் 428.

ஐந்து கோசங்களால் மறைப்பட்டிருப்பது 'அஹம்' எனும் சொல்லின் பொருளாக விளங்கும் பிரத்யகாத்மா, அதுவே பரதேவதையின் ஸ்வரூபம். ஒ 'அஹமித்யேவ விபாவயே பவானீம்' - பவானியை (அஹம்) என்னும் பொருளாகவே தியானிக்கின்றேன்.

**(தாத்பரியம்)** ஹே அம்பிகையே! அந்நமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞான மயம், ஆநந்தமயம் என்னும் பஞ்சகோசங்களும் முறையே சிரஸ், இரண்டு இரக்கைகள், புச்சம் (வால்), ஆத்மாவாக நான் மறைகளின் சிரோபாகங் களான வேதாந்தங்கள் முறையிடுகின்றன. இங்ஙனம் அந்நமயாதி பஞ்சகோச வடிவ விஶ்வ சரீரத்திற்குள் அநுப்பிரவேசித்து, அதிஷ்டானமாயம், ஸ்வயம் பிரகாசவடிவமாயும், ஜ்யோதிர்மயமான மின்னலைப் போல் பிரகாசிப்பவளாயுமுள்ள உமது ஸ்வரூபத்தை எந்த உபாசனையை குரூபதேசத்தின் மூலமாய்த் தெரிந்து கொண்டிருக்கிறானோ அவனே பிரஹ்மவித் எனப்படுவன்,

**(விசேஷவுரை)** பஞ்சகோசவிலக்ஷணமாயும் அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயு முள்ளது அஹம்பத லக்ஷ்யார்த்த பிரத்தியகாத்மாவாகும். இந்த அஹம்பதலக்ஷ்ய ஆத்மஸ்வரூபமே பரதேவதை. **பஞ்சகூடாத்மிகா வித்⁴யா த்ரிபுரா லலிதாம்பி³கா** என்னும் பிரமாணம் பஞ்சதோசங்களுக்கு அதீதமாயும், ஜாக்கிரஸ்வப்ன ஸுஷுப்திகளில் ஸாக்ஷி ரூபமாய் விளங்குபவளாயுமுள்ள ஸ்ரீ பரதேவதையின் ஸ்வரூபத்தை நிர்ணயிப்பது அறியத்தக்கது.

वेदनं (**வேத³னம்**) - அறிதல்; இதனால் அறிபவன், அறியப்படுவது, அறிவு என்னும் திரிபுடி ஶித்திக்கின்றது. பூமாஸ்வரூப, அஹம்பதலக்ஷிய, ஆத்மவடிவ, பரதேவதையை அகண்டாகார வ்ருத்தியினால் தான் அறியமுடியும். இந்த அகண்ட வ்ருத்தியில் அறிதல் என்னும் அதிஸூக்ஷ்ம சுத்த கர்மமும், அறிபவனும் ஒடுங்க, பிரஹ்மாபின்ன ஆத்மஸ்வரூபமே யாகின்றனன். யாகின்றனன். ஆதலின் **ப்⁴ரம்ஹவித் ப்⁴ரம்ஹைவ ப⁴வதி** - பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றனன் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

ஆத்மாவின் உபாதியாகும் பஞ்சகோசங்களும் விஶ்வ சரீரமாகக் கூறப்பட்டுள்ளன. ஈக்ஷணாதி பிரவேசாந்தமான ஶ்ருதிகள் ஆத்மஸ்வரூபத்திற்கு ஜீவபாவம் கற்பித்து ஒரு பக்ஷியின் ஆகாரமாக வர்ணிக்கின்றன. அதற்கு அந்ந மயகோசம் தலை பிராணமயம், மயம், மனோமயம் என்னும் இரண்டு கோசங்களும் இரண்டு பக்ஷங்கள் (இரக்கைகள்). விஞ்ஞானமயகோசம் வால் (புச்சம்). ஆநந்தமய கோசம் ஆத்மா. இங்கே ஆத்மா வென்னும் பதத்திற்கு ஜீவாத்மா வென்பது பொருளாகும். கூடஸ்தஸாக்ஷியே சுத்த ஆத்மஸ்வரூபமாகும். (24)

**(அவதாரிகை)** இதுகாறும் **श्रीमात:** என்னும் ஶ்லோகம் முதல் **अन-प्राण-मन:** என்னும் ஶ்லோகம் வரையில் கூறப்பட்ட அதிரஹஸ்யமான விஷயங்கள் யாவும் ஸத்குருவினிடத்தில் விதிப்படி தீக்ஷையைப்பெற்ற ஸச்சிஷ்யனுக்கே விளங்கும். குருபரம்பராக்கிரமத்தில் வராத அதீக்ஷிதனுக்கு விளங்கவே விளங்காது. ஆதலின் தீக்ஷையைப் பெறுதல் அத்தியாவசிய மென்றும், தீக்ஷையினால் அடையும் மஹா பலன் இது வென்றும் இதில் கூறப்படுகின்றது.

## ஸத்குருவிடம் தீக்ஷை

सञ्चित्तत्त्वमसीति वाक्यविदितैरध्यात्मविद्याशिव
ब्रह्माख्यैरखिलप्रभावमहितैस्तत्वैत्रिभिः सद्गुरोः ।
स्वद्रूपस्य मुखारविन्दविवरात्संप्राप्य दीक्षामतो
यस्त्वां विन्दति तत्त्वतस्तदहमित्यार्ये स मुक्तो भवेत् ॥२५ ॥

**ஸச்சித்-தத்-த்வமஸீதி வாக்ய விதிதை-ரத்தயாத்ம-வித்யா-சிவ-**
**ப்ரஹ்மாக்கயை ரகில-ப்ரபாவ-மஹிதைஸ்-தத்வைஸ்-த்ரிபி: ஸத்குரோ:** ।
**த்வத்ரூபஸ்ய முகாரவிந்த-விவராத் ஸம்ப்ராப்ய தீக்ஷாமதோ**
**யஸ்த்வாம் விந்ததி தத்வதஸ்-ததஹ-மித்யார்யே ஸ முக்தோ பவேத்** ||25||

**(பதவுரை)** (**ஆர்யே**) = அம்பிகே!; (**ஸத்-சித்-தத்வமஸி இதி**) = ஸ்த், சித், தத்வமஸி என்ற; (**வாக்ய விதிதை:**) = மகா வாக்கியங்களால் அறியப்படும்; (**அத்தயாத்ம-வித்யா-சிவ-ப்ரஹ்மாக்க்யை:**) = ஆத்ம தத்துவம், வித்யாதத்துவம், சிவ, பிரம்மதத்துவம் எனப்படும்; (**அகில-ப்ரபாவ மஹதை:**) = ஸகலப்பிரபாவ மகிமையுடன்கூடிய; (**தத்வை: த்ரிபி:**) = மூன்று தத்துவங்களால்; (**த்வத் ரூபஸ்ய**) = உன்னுடைய வடிவினரான; (**ஸத்குரோ:**) = ஸத்குருவின்; (**முகாரவிந்த-விவராத்**) = முககமலத்தின் வாயிலாக; (**தீக்ஷாம்**) = தீக்ஷையை; (**ஸம்ப்ராப்ய**) = அடைந்து; (**அத:**) = அதனால்; (**ய:**) = எவன்; (**தத் அஹம் இதி**) = அதுவே நான் என்று; (**த்வாம்**) = உம்மை; (**தத்வத:**) = உள்ளபடி; (**விந்ததி**) = அடைகிறானோ; (**ஸ:**) = அவன்; (**முக்த:**) = முக்தி எய்தியவனாக; (**பவேத்**) = ஆகிறான்.

**ஸத்-சித்-தத்-த்வம் அஸி** - 'ஸத் தவம் அஸி' என்பது ஆத்மதத்வ ஸ்தூல தேஹ சோதனம். 'சித்-த்வம் அஸி' என்பது வித்யா தத்துவ ஸூக்ஷ்ம தேஹ சோதனம். 'தத்-த்வம் அஸி' என்பது சிவ தத்துவ காரண தேஹ சோதனம். 'ஸத்-சித்-தத்-த்வம் அஸி' என்பது துரீய பிரம்ம ஸ்வரூபம். மகாவாக்கிய உபதேசம் பெற்றவனே ஸ்ரீவித்தைக்கு உத்தம அதிகாரி.

**தீக்ஷை** - குருவினிடமிருந்து பெறும் உபதேசம்.

**(தாத்பரியம்)** ஹே ஆர்யே! உம்முடைய ஸ்வரூபமான, ஸத்குருவின் முகாரவிந்தத்தினின்று, "ஸத்," "சித்," "தத்துவமஸி" என்னும் உபதேச மஹா வாக்கியங்களால் முறையே அறியப்படுவனவாகும் ஆத்ம தத்துவம், வித்யா தத்துவம், சிவ தத்துவம் என்னும் மூன்று தத்துவங்களின் சோதனையால் பிரகாசிக்கும் பிரஹ்ம அல்லது துரீய தத்துவஸ்வரூப பூர்ண தீக்ஷையைப்பெற்று

எந்த ஸாதக முமுக்ஷவானவன் உம்மை ஸந்தேஹ விபரீதங்களற "ஸோஹம்" என்று அறிகின்றானோ அவன் ஜீவன் முக்தனாகின்றான்.

**(விசேஷவுரை) தத்ர ஸர்வதா[2] மதிமான் தீ[3]க்ஷேத்** என்பது பரசுராம கல்ப ஸூத்திரம். "பிரஹ்மம் விளங்கவில்லை" யென்னும் அபாநாபாதக ஆவரண பூமிகையில், விவேகியாகும் தீவிரதர முமுக்ஷுவானவன் எங்ஙனமாவது தீக்ஷையைப் பெறுதல் அத்தியா வசியம்.

தத்துவ சோதனத்தோடு கூடிய மஹாவாக்கிய உபதேசமே தீக்ஷையாகும். இதன் ரஹஸ்யமாவது: -

ஸத்துவமஸி = ஆத்மதத்துவ ஸ்தூலதேஹசோதனம்.
சித்துவமஸி = வித்யாதத் ஸூஷ்மதேஹ சோதனம்.
தத்துவமஸி = சிவதத்துவ காரணதேஹ சோதனம்.
ஸத்சித் தத்துவமஸி = துரீயமாகும் பிரஹ்ம தத்துவ ஸ்வரூபம்.

இந்த துரீயஸ்வரூபம் உவமையற்ற பிரபாவத்தோடு கூடியது. இந்த அகண்டார்த்த போதக ஸர்வதத்துவ சோதனா ஸ்வரூப மஹாவாக்கியோபதேசத் திற்கே தீக்ஷ யென்று பெயர்.

ஸ்ரீ வித்யா தீக்ஷக்கு முந்தியே மஹா வாக்கியோபதேசம் பெற்றுள்ளவனே ஸ்ரீ வித்தைக்கு முக்கியாதிகாரியாவன் மஹாவாக்கியோபதேசம் பெற்றும் பிரதிபந்த கங்களின் வலிமையால் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம் ஏற்படவில்லை. **தத்துவ சோதனபுரஸ்ஸரமாய் ஏற்படும் மஹாக்கியோபதேசத்தால் பிரதிபந்தகங்கள் கிரமமாய் நசித்து அபரோக்ஷஞான மேற்படுகின்றது.** "ஸோஹம், அஹம் பிரஹ்மாஸ்மி' யென்னும் ஸ்வாநுபவமே அபரோசக்ஷ ஸாக்ஷாத்காரமாகும். அபரோக்ஷ ஞானாநுபவியே ஜீவன் முக்தன்.

பரதேவதைக்கும் ஸத்குருநாதருக்கும். கிஞ்சித்தும் பேதமில்லை. இவ்விஷயம் குருமண்டலரூபிணீ, குருமூர்த்தி, குருரூபதரா, குருப்ரியா என்னும் நாமங்களால் ஶித்தாந்தப்படுகின்றது. (25)

**(அவதாரிகை)** "அல்பாயாஸ ஸாத்தியமாயும், நியாஸம், பூஜை முதலிய கலாபங்கள் அற்றவையாயும், முக்தி ஸாதனங்களாயுமுள்ள சைவ, வைஷ்ணவ, ஸௌராதி பல மார்க்கங்களிருக்கையில் வெகு சிரமப்பட்டு ஸாதிக்கக்கூடியதாயும், நியாஸம் பூஜை முதலிய கர்ம கலாபங்கள் நிறைந்ததாயும் அபாரமாயுமுள்ள வித்யோபாஸ்தியாகும் இந்த மார்க்கத்தில் ஆதரவு கொள்ளும்படி ஏன் கூறுகிறீர்"

என்று பார்வதி பரமேஶ்வரனைக் கேழ்க்கப் பரமேஶ்வரன் ஸமாதானங் கூறுகிறார். அவ்விஷயம் இதில் பிரதிபாதிக்கப்படுகின்றது.

## ஸமன்வயமான சாம்பவீ வித்தை

**सिद्धान्तैर्बहुभिः प्रमाणगदितैरन्यैरविद्यातमो**
**नक्षत्रैरिव सर्वमन्धतमसं तावन्न निर्भिद्यते ।**
**यावत्ते सवितेव संमतमिदं नोदेति विश्वान्तरे**
**जन्तोर्जन्मविमोचनैकभिदुरं श्रीशाम्भवं श्रीशिवे ।। २६ ।।**

**ஸித்தாந்தைர் பஹூபி: ப்ரமாண-கதிதை-ரன்யை ரவித்யாதமோ**
**நக்ஷத்ரைரிவ ஸர்வமந்த்ததமஸம் தாவந்ந நிர்ப்பித்யதே ।**
**யாவத்தே ஸவிதேவ ஸம்மத-மிதம் நோதேதி விச்வாந்தரே**
**ஜந்தோர்-ஜன்ம-விமோசனைகபிதுரம் ஸ்ரீசாம்பவம் ஸ்ரீசிவே** ॥ 26 ॥

**(பதவுரை)** (**ஸ்ரீசிவே**) = சிவஸ்வரூபிணியான தாயே!; (**ஜந்தோ:**) = ஜீவனுக்கு; (**ஜன்ம-விமோசன-ஏகபிதுரம்**) = பிறவியினின்று முக்தியளிக்கவல்லதும்; (**தே**) = உம்முடைய; (**ஸவிதா இவ ஸம்மதம்**) = சூரியனைப்போல் எல்லோருக்கும் ஸம்மதமானதும் ஆகிய; (**இதம்**) = இந்த; (**ஸ்ரீசாம்பவம்**) = ஸ்ரீசாம்பவீ வித்தையானது; (**விச்வாந்தரே**) = இவ்வலகில்; (**யாவத்**) = எதுவரை; (**ந உதேதி**) = உதிக்கவில்லையோ; (**தாவத்**) = அதுவரை; (**ப்ரமாண-கதிதை:**) = பிரமாணங்களுடன் கூறப்படும்; (**பஹூபி:**) = பலவகைப்பட்ட; (**அன்யை: ஸித்தாந்தை:**) = பிற சித்தாந்தங்களால்; (**அவித்யா தம:**) = அவித்தையாகிற இருள்; (**ந நிர்ப்பித்யதே**) = நீங்காது; (**ஸர்வமந்த்த-தமஸம்**) = எங்குமடர்ந்த இருளை; (**நக்ஷத்ரை:**) = நக்ஷத்திரங்களால்; (**இவ**) = போக்க இயலாதவாறு.

**ஸ்ரீசாம்பவி வித்தை** - ஷடன்வய சாம்பவஞானம், அதாவது ஆறுமாதங்கள், ஆறு சாஸ்திரங்கள், ஆறு தர்சனங்கள், ஆறு அங்கங்கள், ஆறு ஆதாரங்கள், ஆறு ஆம்னாயங்கள் முதலியவற்றின் ஸமன்வயமாகும் அத்விதீய சித்சக்தி அபின்ன ஞானம்.

**(தாத்பரியம்)** ஆத்மாநந்த ஸ்வரூபிணியாய் விளங்கும் ஓ சிவையே! ஜனன மரண வடிவ ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கித் தவிக்கும் ஜீவனுக்குப் பிறப்பிறப்பற்ற முக்தியை யளிக்க வல்லதும், ஸர்வமத ஸம்மதமும், ஸித்தாந்தமானதும் ஸர்வோத்க்ருஷ்டமானதுமான **"ஸ்ரீ சாம்பவம்"** என்னும் ஸ்ரீ வித்தியா மார்க்கமே மிகச்சிறந்ததாம். இந்த ஸத்ஸம்பிரதாய ப்ரஸித்தமான சிவ சக்தி ஸாமரஸ்ய அகண்டஞான ஸூர்யன் எதுவரை யிவ்வுலகில் உதிக்கவில்லையோ அதுவரையில்,

பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால் ஶித்தித்தனவாயும், நானாவாய் விளங்குவன வாயுமுள்ள ஸாங்கிய, தார்க்கிகராதியரின் ஶித்தாந்தமான நக்ஷத்திரங்களால் அஞ்ஞான இருள் நீங்காது. காடாந்தகாரம் அற்பப் பிரகாசமுள்ள நக்ஷத்திரங்களால் நீங்குமோ?

**(விசேஷவுரை)** **अविधातमः** = மயக்கத்தை யுண்டுபண்ணுவதால் அவித்தையே இருள் எனக்கூறப்பட்டது. எங்ஙனம் பேரிருளானது சிறிய நக்ஷத்திரப்பிரகாசத்தால் நீங்காதோ அங்ஙனமே துவைத மதங்களாலேற்பட்ட அஞ்ஞானமாகிற பேரிருள் அத்வைத ஶித்தாந்தமாகும் **ஶ்ரீ சாம்பவ** அதாவது ஜீவப்பிரஹ்மைக்கிய அகண்டஞான சூரியனாலன்றி மற்றொன்றால் நீங்காது. ஆதலின் ஜீவர்களின் ஸம்ஸார பந்தத்தை நீக்கவல்ல ஒப்பற்ற மார்க்கம் சாம்பவமாகும் சித்வித்யா மார்க்கமேயாகும். சாம்பவம் என்றதனால் ஷடன்வய சாம்பவ ஞானம் ஸூசிக்கப்படுகின்றது. ஷண் மதங்கள், ஷட் தர்சனங்கள், ஷட் சாஸ்திரங்கள், ஷடங்கங்கள், ஷடாதாரங்கள், ஷடாம்நாயங்கள், முதலியவற்றின் ஸமன்வயமாகும் அத்விதீய சித்சக்தியபின்ன பரப்பிரஹ்மமே ஷடன்வய சாம்பவ ஞானமாகும். இந்த ஞானம்தான் சித்வித்யோபாஸ்தியின் அவதி. ஆதலின் சாம்பவ தத்துவமாகிய சித் வித்தையே நன்கு உலகில் பிரசாரம் அடைதல் வேண்டும். (26)

**(அவதாரிகை)** ஆத்மாநுஸந்தானமே அவித்தையை யொழிக்கும் என்பது பரம சித்தாந்தமாம். **அதா²த்மாரே ஷ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி³த்⁴யாஸிதவ்ய: ஸாக்ஷாத்கர்த்வ்ய:** என்னும் பிரமாணத்தின்படி நெடுநாள் இடைவிடாது சிரத்தையுடன் ஆத்மாநுஸந்தானமே செய்யத்தக்க தென்றேற் படுகின்றது. துர்க்கடமாயும், சிரமம் தரத்தக்கதாயுமுள்ள ஶ்ரீ வித்யோபாஸ்தியானது ஏன் ஆதரிக்கப்படல் வேண்டும்? என்னும் ஆக்ஷேபணைக்குச் சமாதானம் கூறப்படுகின்றது.

## குருகடாக்ஷத்தால் முக்தி

**आत्मासौ सकलेन्द्रियाश्रयमनोबुद्ध्यादिभिः शोचितः**
**कर्माबद्धतनुर्जनिं च मरणं प्रैतीति यत्कारणम् ।**
**तत्ते देवि महाविलासलहरीदिव्यायुधानां जय**
**स्तस्मात्सद्गुरुमभ्युपेत्य कलयेत्त्वामेव चेन्मुच्यते ॥ २७ ॥**

**ஆத்மாஸௌ ஸகலேந்த்ரியாச்ரய-மனோபுத்த்யாதிபி: சோசித:**
**கர்மாபத்ததனூர்-ஜனிஞ்ச மரணம் ப்ரைத்தி யத்காரணம் ।**
**தத்தே தேவி மஹாவிலாஸ-லஹரீ திவ்யாயுதானாம் ஜயஸ்-**
**தஸ்மாத் ஸத்குரு-மப்ப்யுபேத்ய கலயேத் த்வாமேவ சேன்முச்யதே ॥ 27 ॥**

**(பதவுரை)** (**தேவி**) = தேவியே!; (**அஸௌ**) = இந்த; (**ஆத்மா**) = ஜீவாத்மா; (**ஸகல-இந்திரிய-ஆச்ரய-**) = எல்லா இந்திரியங்களுக்கும் ஆதாரமான; (**மனோபுத்தி யாதிபி:**) = மனது புத்தி முதலியவற்றால்; (**சோசித:**) = துக்கத்தையனுபவிப்பவனாய்; (**கர்மாபத்ததனு:**) = கருமத்தில் கட்டுண்ட சரீரத்துடன்; (**ஜனிஞ்ச மரணம்**) = பிறவியையும் மரணத்தையும்; (**ப்ரைதி**) = அடைகிறான்; (**இதி**) = என்பதற்கு; (**யத்** )= எது; (**காரணம்**) = காரணம் எனில்; (**தத்**) = அது; (**தே**) = உமது; (**மஹாவிலாஸலஹரீ-**) = மகாமாயா விலாஸத்தின் வெள்ளம் போன்ற; (**திவ்ய-ஆயுதானாம்**) = திவ்விய ஆயுதங்களின்; (**ஜய:**) = வெற்றியேயாகும்; (**தஸ்மாத்**) = ஆகையால்; (**ஸத்குரும்**) = நல்ல குருவை; (**அப்யுபேத்ய**) = நாடியடைந்து; (**த்வாம் ஏவ**) = உம்மையே; (**கலயேத் சேத்**) = பஜிப்பானேயாயின்; (**முச்யதே**) = விடுதலை எய்துவான்.

**ஆயுதங்களின் தத்துவம் -**

ஓ. இச்சாசக்தி மயம் பாசம் அங்குசம் ஜ்ஞானரூபிணம் |
க்ரியாசக்திமயே பாணதனுஷீ தததுஜ்ஜ்வலம் ||

- யோகினீஹ்ருதயம்

பாசம் இச்சாசக்தி; அங்குசம் ஞானசக்தி; வில்லும் பாணங்களும் க்ரியாசக்தி. கரும்பு வில்லும் புஷ்ப பாணங்களும் மனஸ்தத்துவத்தையும் ஞானேந்திரிய தத்துவங்களையும் குறிக்கும். இவை அஞ்ஞானிகளுக்கு ஸம்ஸார பந்தத்தையும், ஞானிகளுக்கு மோக்ஷத்தையும் அளிப்பவை.

ஓ. ராகஸ்வரூப-பாசாட்யா க்ரோதாகாராங் குசோஜ்ஜவலா |
மனோரூபேக்ஷு கோதண்டா பஞ்சதன்மாத்ரஸாயகா ||

- லலிதாஸஹஸ்ரநாமம்

**(தாத்பரியம்)** ஹே தேவி! ஸம்ஸாரியான இந்த ஜீவன் ஞாநேந்திரிய கர்மேந்திரியங்களுக்கு ஆதாரமான அந்தக்கரணத்தால் துக்கத்தை யநுபவித்துக் கொண்டு சுபாசுப கர்மங்களுக்குட்பட்டு அவற்றின் வாஸனையால், லிங்க சரீரத்தை விருத்தி செய்து கொண்டு ஜனனமரணப் பிரவாஹத்தில் சிக்கிச் சுழன்று கொண்டிருக்கின்றான்.

இதற்குக்காரணம் மஹாவிலாஸமாகும் சிருங்கார ஸௌந்தரியக் கடலாகும் உமது ஸ்வரூபத்தின் அலைகள் போன்ற திருக்கரங்களில் விளங்கும் திவ்வியமான ஆயுதங்களின் பிரதாபமே யாகும். எப்பொழுது ஒரு ஜீவன் உமது தாதாத்மிய பாவத்தையடைந்த ஸத்குருவை யாஶ்ரயித்து, அவர் மூலமாய் ஸதுபதேசத்தைப் பெற்று, உமது பாரமார்த்திக ஸ்வரூபத்தைத் தனக்கபின்னமாய் அறிகின்றானோ அப்பொழுது உமது ஆயுதங்களின் பிரதாபம் அவனிடத்திற் செல்லுவதில்லை. ஆகவே அவன் முக்தனாகின்றான்.

(**விசேஷவுரை**) பரதேவதையின் ஆயுதங்கள் பாசம், அங்குசம், கோதண்டம், புஷ்ப பாணங்களாம். இவற்றின் பிரதாபமே ஜீவத்துவமும் ஜனன மரண ரூப ஸம்ஸாரமு மாகும்.

**ஞானேந்திரியங்கள்:** - துவக், சக்ஷுஸ், ஶ்ரோத்திரம், ஜிஹ்வை, கிராண மென்பனவாம்.

**கர்மேந்திரியங்கள்:** - வாக், பாணி, பாத, பாயு, உபஸ்த மென்பனவாம்.

**அந்தக்கரணம்:** - மனோ, புத்தி, சித்த அஹங்காரங்களாகும்.

மனோவாக்காயங்களாகும் திருக்கரணங்களில் இச்சாக் ஞானக்கிரியைகள் தோன்றி ராகத் துவேஷாதிகளை யுண்டு பண்ணுகின்றன. இவற்றால் பிரவ்ருத்தி நிவ்ருத்திகளும், ஸுகதுக்கங்களும் ஏற்படுகின்றன. இது தான் ஸம்ஸார பந்தமாகும். இது பரதேவதையின் ஆயுதங்களின் பிரதாபமே யாகுமென்று கூறப்பட்டது.

இச்சாக் ஞானக்கிரியைகளே பரதேவதையின் ஆயுதங்களின் தத்துவமாம்.

**इच्छाशक्तिमयं पाशमङ्कुशं ज्ञानरूपिणम् ।**
**क्रियाशक्तिमये बाणधनुषी धदुज्वलम् ॥**

என்று யோகினீஹ்ருதயம் கூறுகின்றது.

பாசம் இச்சாசக்தி; அங்குசம் ஞான சக்தி; தநுர்ப் பாணங்கள் கிரியாசக்தி. தநுஸ்ஸும் பஞ்சபாணங்களும் முறையே அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களு மாகும். அந்தக்கரணத்தின் வருத்திகளே ராகத்துவேஷங்களாகும். அஞ்ஞானிகளுக் குப் பந்தத்தையும், ப்ரஹ்ம வித்தியா ஸாதகர்களுக்கு மோக்ஷத்தையும் அருளுவது பரதேவதையின் ஆயுதங்களின் பராக்கிரமமாகும். இவ்விஷயம் **ப⁴வசக்ரப்ரவர்தினி பாஸஹஸ்தா** என்றும், **ப⁴ந்த⁴மோசனி பஸுபாஸவிமோசனி பாஸஹந்த்ரி** என்றும் ஸஹஸ்ரநாமம் கூறுவதால் தெளிவாகின்றது.

பரதேவதையின் தியானமே நிதித்தியாஸனமாகும். அஹம்பத லக்ஷ்ய பிரத்தியகாத்மாவே ஸ்ரீ லலிதை யென்பது ஸ்ரீ வித்தையின் பரம ஸித்தாந்தமாகும். அஹம்பத வாச்சியனான தீவிரதர முமுக்ஷுவானவன், ஜஹதஜஹல் லக்ஷணையால் அவித்தையாகும் உபாதியை நீக்கி ஆத்மஸ்வ ரூபமாகித் தத்பதலக்ஷ்யார்த்த பிரஹ்மத்தோடு ஐக்கியமாகின்றனன். இதுதான் ஸாக்ஷாத்கார மெனப்படுவது. இதுதான் ஸகல வேதாந்த ஶ்ருதிகளின் பரம தாத்பரியமானது. ஆதலின் ஸ்ரீ வித்தையே பிரஹ்மவித்தை. (27)

**(அவதாரிகை)** பகவான் துர்வாஸர், இதில் ஸம்ஸாரமாகின்ற ஜனன மரணப் பிரவாஹத்தில் மூழ்கித் தவிக்கும் ஜீவர்களின் க்ஷேமத்தைக் கருதிப் பரதேவதையைப் பிரார்த்திக்கின்றனர்.

## சரணாகதி

**नानायोनिसहस्रसंभववशाजाता जनन्यः कति**
**प्रख्याता जनकाः कियन्त इति मे सेत्स्यन्ति चाग्रे कति ।**
**एतेषां गणनैव नास्ति महतः संसारसिन्धोर्विधे**
**भीतं मां नितरामनन्यशरणं रक्षानुकम्पानिधे ॥ २८ ॥**

**நானா-யோனி-ஸஹஸ்ர-ஸம்ப்பவ-வசாஜ்ஜாதா ஜனன்ய: கதி**
**ப்ரக்க்யாதா ஜனகா: கியந்த இதி மே ஸேத்ஸ்யந்தி சாக்ரே கதி ।**
**ஏதேஷாம் கணனைவ நாஸ்தி மஹத: ஸம்ஸார-ஸிந்த்தோர் விதேர்**
**பீதம் மாம் நிதரா-மனன்ய-சரணம் ரக்ஷானுகம்பா-நிதே ॥ 28 ॥**

**(பதவுரை)** (**அனுகம்பாநிதே**) = கருணைக்கடலான தாயே!; (**நானா-யோனி-ஸஹஸ்ர**-) = பல்லாயிரம் விதமான யோனிகளில்; (**ஸம்ப்பவ-வசாத்**) = பிறந்த காரணத்தால்; (**ஜனன்ய:**) = தாய்மார்கள்; (**கதி**) = எத்தனைபேர்; (**ப்ரக்க்யாதா ஜனகா:**) = பெயர்பெற்ற தந்தைமார்; (**கியந்த:**) = எத்தனைபேர்; (**மே**) = எனக்கு; (**அக்ரே**) = எதிர்காலத்தில்; (**கதி**) = எத்தனைபேர்; (**ஸேத்ஸ்யந்தி**) = வரப் போகிறார்கள்; (**இதி**) = என்று; (**ஏதேஷாம்**) = இவர்களுக்கு; (**கணனா**) = கணக்கு; (**நாஸ்தி ஏவ**) = இல்லவே இல்லை; (**மஹத:**) பெரிதான; (**ஸம்ஸார-ஸிந்த்தோ:**) = இந்தப் பிறவிக்கடலின்; (**விதே:**) = முறையிலிருந்து; (**தம்**) = பயமடைந்துள்ளவனும்; (**நிதராம்**) = நிச்சயமாக; (**அனன்ய-சரணம்**) = வேறு புகலிடமற்றவனுமாகிய; (**மாம்**) = என்னை; (**ரக்ஷ**) = காப்பாற்றி அருள்வீராக.

**(தாத்பரியம்)** கருணைக்கடலான பரதேவதையே! எண்ணிறந்த பற்பல யோனிகளிற் பிறந்துள்ள காரணத்தால் எனக்கு எத்தனையோ தாய்தந்தையர் ஏற்பட்டுள்ளார். இனி எனக்கு ஏற்படப்போகும் ஜன்மங்களிலும் எத்தனையோ தாய் தந்தையர் ஏற்படப் போகின்றனர். ஜன்மங்களுக்கும் மாதாபிதாக்களுக்குங் கணக்கேயில்லை. இங்ஙனம் கரைகாணாத அபார ஸம்ஸார ஸாகரத்தைக் கண்டு மஹாபயத்தை யடைந்தவனும் வேறுகதி யற்றவனுமாகிய அடியேனைத் தாங்கள் தான் காப்பாற்றவேண்டும்.

**(விசேஷவுரை) அனுகம்பாநிதே**[4] = தயா ஸமுத்திரமே! என்னும் ஸம்போதனம் ஸாபிப்பிராய விசேஷணம். பிரார்த்தனைக்கு உடனே இணங்கி யருள் புரிவது பரதேவதையின் ஸ்வபாவ மாகும்.

துவைததர்சனமாகும் ஸம்ஸார பயத்திலிருந்து ரக்ஷிப்பது அபேத தர்சனமாகும் அகண்ட ஞானமே யாகும். இந்த அகண்ட (அபேத) ஞானம் மஹாவாக்கியோபதேசத்தினால் ஏற்படுவதாகும். இதற்கு ஸத்குருவின் கருணை வேண்டும். ஸத்குருஸ்வரூபிணியே பரதேவதை. ஆதலின் பரதேவதை குருவாகவும், மாதா பிதாக்களாகவும் விளங்குவது சாஸ்திர ஸித்தாந்தமாகும்.

தந்தைதா யாவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா வின்பநமக் காவானும் - எந்தனுயிர்
தானாகு வானும் சரணாகுவானு மருட்
கோனாகு வானுங் குரு

ஆதலின் குருஸ்வரூபிணியாயுள்ள பரதேவதையைத் தவிற வேறு அடைக்கலம் ஜீவர்களுக்கு இல்லை யென்பது திரண்ட பொருளாகும். (28)

**(அவதாரிகை)** காயிக, வாசிக, மானஸிக கர்மாக்களால் நித்தியாநந்த மோக்ஷம் ஸித்திக்காது என்னும் விஷயம் இதில் பிரதிபாதிக்கப்படுகின்றது.

## கர்மத்தால் முக்தி கிட்டாது

**देहक्षोभकरैर्व्रतैर्बहुविधैर्दानैश्च होमर्जपैः**
**संतानैर्हयमेधमुख्यसुमखैर्नानाविधैः कर्मभिः ।**
**यत्संकल्पविकल्पजालमलिनं प्राप्यं पदं तस्य ते**
**दूरादेव निवर्तते परतरं मातः पदं निर्मलम् ॥ २ ९ ॥**

**தேஹக்ஷோப-கரைர்-வ்ரதைர்: பஹுவிதைர்-தானைச்ச ஹோமைர்- ஜபை:**
**ஸந்தானைர்-ஹயமேத-முக்க்ய-ஸுமகைர் நானாவிதை: கர்மபி: ।**
**யத்ஸங்கல்ப-விகல்ப-ஜால-மலினம் ப்ராப்பம் பதம் தஸ்ய தே**
**தூராதேவ நிவர்த்ததே பரதரம் மாத: பதம் நிர்மலம் ॥ 29 ॥**

**(பதவுரை)** (**மாத**:) = தாயே!; (**நேஹ-க்ஷோபகரை**:) = உடலை வருத்தும்; (**பஹு விதை**:) = பலவிதமான; (**வ்ரதை**:) = விரதங்களாலும்; (**தானை: ச**) = தானங்களாலும்; (**ஹோமை**:) = ஹோமங்களாலும்; (**ஜபை:**) = ஜபங்களாலும்; (**ஸந்தானை:**) = மக்கட்பேறாலும்; (**ஹய மேதமுக்க்ய**-) = அசுவ மேதம் முதலிய; (**ஸுமகை:**) = சிறந்த யாகங்களாலும்; (**நானாவிதை**) = பலவகைப்பட்ட; (**கர்மபி**:) = கருமங்களாலும்; (**ப்ராப்யம்**) = அடையப்படும்; (**பதம்**) = பதவி; (**யத்**) = எதுவோ-அது-(**ஸங்கல்பவிகல்ப-ஜால-மலினம்**) = ஆசை முதலிய ஸங்கல்பவிகல்பத் தொகுதிகளால் மாசு படிந்ததாகும்; (**தஸ்ய**) = அதனின்று; (**நிர்மலம்**) = மாசற்ற; (**தே**) = உம்முடைய; (**பதம்**) = பதவி; (**பரதரம்**) = மிகமிக; (**துராத் ஏவ**) = தொலைவில்; (**நிவர்த்ததே**) = எட்டியுள்ளது.

ஒ. எவ்வாறு என்னை நீ கண்டனையோ அவ்வாறு என்னை வேதங்களாலும், தவத்தாலும், தானத்தாலும், வேள்வியாலும் காண இயலாது. வேறு நாட்டம் இல்லாத பக்தியாலேயே நான் உண்மையில் காண்பதற்கும் அளவளாவுவதற்கும் உரியவன். என் பணி செய்பவனாயும் என்னையே அனைத்தினும் மேலாகக் கருதுபவனாயும், என்னிடம் பக்தி செய்பவனாயும், பற்றற்றவனாயும் எவ்வுயிர்களிடத்தும் வைரமில்லாதவனாயும் உள்ளவன் எவனோ அவன் என்னை அடைகிறான். - **கீதை** 11-53-55. பக்தியை முக்கியமாய்க் கொள்ளாமல் பயனை முக்கியமாய்க் கொண்டு ஆசையால் தூண்டப்பட்டு செய்யும் கருமங்கள் மாசு படிந்தவையாம்.

**(தாத்பரியம்)** ஒ தாயே! சரீரத்திற்குச் சிரமம் தரக்கூடிய பலவகையான விரதங்களாலும், தானங்களாலும், ஜப ஹோமங்களாலும், ஸந்தானத்தாலும், அஶ்வமேதாதி மஹாயாகங்களாலும், இன்னும் இத்தகைய பற்பல கர்மாக்களாலும் அடையக்கூடியதும், ஸங்கல்ப விகல்பங்களால் மாலின்யமானதுமான ஆமுஷ்மிக ஸ்வர்க்க பதவியானது நஶ்ரமானது. உம்முடைய ஸ்தானமோவெனின் அதற்கு அதாவது ஸ்வர்க்கபதவிக்கு வெகு தூரமானது; என்றால், விலக்ஷணமான தென்பது பொருள். ஆதலின் நித்தியமும், உத்கிருஷ்டமும் பரிசுத்தமுமாகும்.

**(விசேஷவுரை)**

**न कर्मणा न प्रजया धनेन त्यागेनैकेऽमृतत्वमानशुः ।**

என்னும் பிரமாணத்தின்படி அம்ருதத்துவ ஸ்வரூப மோக்ஷமானது கர்மாக்களாலும், ஸந்தானத்தினாலும், செல்வத்தினாலும் அடையப்படமாட்டாது. ஆனால் அது அக்ஞானத்தின் நீக்கத்தினால் மட்டுமே அடையத்தக்கதாகு மென்றேற்படுகின்றது.

கர்மாக்களெல்லாம் அஞ்ஞான காரியங்களாகும். கர்மாக்கள் அஞ்ஞானத்தை யொழிக்கா.

“இந்தக் காரியத்தைச் செய்கிறேன்” என்பது ஸங் கல்பமும், “செய்யவில்லை” யென்பது விகல்பமுமாகும். அக்ஞானமே மாலின்யம் (அழுக்கு) எனப்படும்.

புண்ணியகர்மாக்களால் ஸ்வர்க்காதிலோகாந்தரங்களும், பாப கர்மாக்களால் நரகாதிகளும் ஜீவனால் அடையப்படுகின்றன. இவை யாவும் அநித்தியங்களே. புண்ணிய பாபங்களின் அநுபவகாலம் முடிந்த பின் மறுபடியும் இம்மண்ணுலகில் பிறத்தல் நியமம். பரமபதமாகும் பரதேவதையின் ஸ்தானமோ அழிவில்லாதது; அக்ருத்மானது. அக்ஞானத்திற்கு அதீதமானது. (29)

**(அவதாரிகை)** சப்தப்பிரபஞ்சமான மாத்ருகைகளுக்கும் மூல பூதமான அகார ஹகார வடிவ பராசக்தி ஸ்வரூப காமகலை இதில் ஸ்துதிக்கப்படுகின்றனள்.

## பரா அஹந்தா ஸ்வரூபம்

**पञ्चाशन्निजदेहजाक्षरमयैर्नानाविधैर्धातुभि**
**बहथैः पदवाक्यमानजनकैराविनाभावितैः ।**
**साभिप्रायवदर्थकर्मफलदैः ख्यातैरनन्तैरिदं**
**विश्वं व्याप्य चिदात्मनाहमहमित्युज्जृम्भसे मातृके ॥३० ॥**

**பஞ்சாசந்நிஜ-தேஹஜாக்ஷரமயைர்-நானாவிதைர் தாதுபிர்-**
**பஹ்வர்த்தை: பதவாக்ய-மான-ஜனகை-ரர்த்தாவிநா பாவிதை: |**
**ஸாபிப்ராயவதர்த்த-கர்ம-பலதை: க்யாதை ரனந்தை-ரிதம்**
**விச்வம் வ்யாப்ய சிதாத்மநாஹமஹமித்-யுஜ்ஜ்ரும்ப்-பஸே மாத்ருகே || 30 ||**

**(பதவுரை)** (**மாத்ருகே**) = மாத்ருகாஸ்வரூபிணியான தாயே!; (**பஞ்சாசத் நிஜதேஹஜ-**) = உமது தேகத்திலிருந்து தோன்றிய ஐம்பது; (**அக்ஷரமயை:**) = அக்ஷர வடிவான; (**நானாவிதை:**) = பல வகைப்பட்ட; (**தாதுபி:**) = தாதுக்களாலும்; (**பஹ்வர்த்தை:**) = பல அர்த்தங்களையுடைய; (**பத-வாக்ய-மான-**) = பதம், வாக்கியம், பிரமாணம் ஆகியவற்றை; (**ஜனகை:**) = தோற்றுவிக்கின்றனவும்; (**அர்த்த-அவிநாபாவிதை:**) = அர்த்தத்திலிருந்து விலகாதனவும்; (**ஸாபிப்ராயவத்**) = உட்கருத்துக் கொண்ட; (**அர்த்த-கர்ம-பலதை:**) = அர்த்தமும் கருமமும் பயனும் தருவனவுமாகிய; (**க்யாதை: அனந்தை:**) = பிரசித்தமான பலவற்றாலும்; (**இதம்**) = இந்த; (**விச்வம்**) = உலகை; (**வ்யாப்ய**) = வியாபித்து; (**சிதாத்மனா**) = அறிவு வடிவான உமது ஸ்வரூபத்தால்; (**அஹம் அஹம் இதி**) = நான் நான் என்று; (**உஜ்ஜ்ரும்ப்பஸே**) = விளங்கிக் கொண்டிருக்கிறீர்.

**பத-வாக்ய-மான-ஜனகை: - பதம்** என்பது பற்பல அர்த்தங்களைத் தரும் தாதுக்களால் ஏற்படுவது. இதைப்பற்றிய இலக்கணம் வியாகரணசாஸ்திரம். **வாக்கியம்** என்பது பிரதிக்ஞை, ஹேது, உதாரணம், உபநயம், நிகமனம் எனும் அவயவயங்களை உடையது. இதை ஆராய்வது தர்க்கசாஸ்திரம். **மானம்** அல்லது **பிரமாணம்** என்பது ஒரு குறிப்பிட்ட கொள்கையைச் சித்தாந்தம் செய்யும் முறை. இதை ஆராய்வது மீமாம்ஸா சாஸ்திரம்.

**அஹம் அஹம் இதி** - நான் நான் என்று எல்லா சப்தங்களிலும் எல்லா நிலைகளிலும் மாறுபாடின்றிப் பிரகாசிக்கும் பராஹந்தாஸ்புரணமே சித்சக்தியின் **காமகலா** ஸ்வரூபம் எனப்படுவது.

ஓ. 'அஹம் இத்யேவ விபாவயே பவானீம்'

**(தாத்பரியம்)** ஓ மாத்ருகா ஸ்வரூபிணியான பரதேவதே உமது ஸூக்ஷ்மதமசரீரமாகும் பராவாக்கிலிருந்து ஆவிர்ப்பவித்த ஐம்பது வர்ணகங்க ளினின் றுண்டானதும் நானாவிதமான அர்த்தஸ்வரூபமானதும், பதமாகும் வியாகரணம், வாக்கியமாகும் பூர்வமீமாம்ஸை, பிரமாணமாகும் உத்தரமீமாம்ஸை இவற்றால் ஏற்படும் தாத்பரியத்திற்குக் காரணமானதும், கர்மபலத்தைத் தெரிவிப்பதும் பிரஸித்தி பெற்றதும், எண்ணற்றதுமாகிய தாதுக்க (பகுதிக)ளால் இந்த வுலகம் முழுமையும் வியாபிக்கப்பட்டுள்ளது. இந்த தாதுக்கள் யாவும் சைதன்னிய ஸ்வரூபமான உமது வடிவினவே யாகும். "அஹம், அஹம்," என்று ஸ்புரித்து ஸ்வயம்பிரகாசமாய் விளங்கிக்கொண்டிருக்கின்றீர்

**(விசேஷவுரை) இத³ம் விஷ்வம்** = பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் இந்த பாஞ்ச பௌதிகப் பிரபஞ்சமும், சாஸ்திரங்களின் மூலமாய்க் கேட்கப்படும் ஸ்வர்க்க நரகங்களும் மற்றுமுள்ள லோகாந்தரங்களும். இவை யாவும் சப்தமயமாகவும், அர்த்தமயமாகவும் விளங்குகின்றன. அர்த்தங்களாகும் ஸகலவஸ்துக்களும் சப்தத்தினின்றுண்டானவையே யாகும். வேத சாஸ்திர புராண இதிஹாஸ ஆகமாதிகள் யாவும் சப்தமயமே. இவை யாவும் பத, வாக்கிய, பிரமாண வடிவினவாகும். பதங்கள் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களா லானவை. எழுத்துக்கள் ஐம்பது; अ காரம் முதல் क्ष காரம் வரை ळ காரம் நீங்கலாகக் கணக்கிடப்பட்டுள்ளன. இந்த ஐம்பது அக்ஷரங்களும் பரதேவதையின் உண்மை நிலையான பரா ஸ்வரூபத்திலிருந்து உண்டானவையே யாகும்.

**वन्दे तामहमक्षय्यां क्षकाराक्षररूपिणीम् ।**
**देवी कुलकलोल्लासप्रोल्लसन्ती परां शिवाम् ।।**

என்னும் பிரமாணத்தின்படி பரதேவதையின் பரா ஸ்வரூபம் क्ष கார ஸ்வரூப மென்றேற்படுகின்றது. இந்த பரஸ்வரூபத்தினின்றுதான் "அஹம், அஹம்" என்னும் சைதன்ய ஸ்புரணமுண்டாகின்றது. இந்த பராஹதாஸ்புரணத்திலிருந்து அகாரம் முதல் ஹகாரம் வரையுள்ள நாற்பத்தொன்பது அக்ஷரங்களுமுண்டாயின. இவற்றினின்று பல அர்த்தங்களை யுடைய தாதுக்க (பகுதிக) களும், பதங்களும் வாக்கியங்களும், பிரமாணங்களும் உண்டாயின.

இங்கே **பிரமாண**மென்பது ஒரு குறிப்பிட்ட தாத்பரியத்தை ஸித்தாந்தம் செய்யும் ஒரு பிரகரணமாகும். இது உபக்கிரமம் உபஸம்ஹாரம் முதலிய அறுவித லிங்கங்களோடு கூடியதாகும். இத்தகைய பிரகரணங்கள் **பூர்வமீமாம்ஸா** சாஸ்திரத்தில் மிகப்பிரஸித்தமானவை.

**வாக்கிய** மென்பது ஐந்து அவயவங்களோடு கூடியது பிரதிக்ஞை, ஹேது, உதாரணம், உபநயம், நிகமனம் இவை அவயவங்களாகும். இவை யாவும் சேர்ந்தது ஒரு வாக்கியமாகும். இது **தர்க்கசாஸ்திர**த்தில் மிகப்பிரஸித்தமானது.

**பதம்** என்பது பற்பல விதமான அர்த்தங்களைத்தரும் பல தாதுக்க (பகுதிக) ளால் ஏற்படுவதாகும். இவற்றைப் பற்றிய ஸகல விஷயங்களும் இலக்கணமாகும் **வியாகரண** சாஸ்திரத்தில் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளது. சப்தமும் அர்த்தமும் பரஸ்பரம் தம்முள் வேற்றுமை யுடையன வல்ல. **அர்தா2விநா பா4விதை:** என்னும் விசேஷணம் இந்த அர்த்தத்தைத் தெரிவிக்கின்றது.

**ஸாபி4ப்ராய வத3ர்த2கர்ம ப2லதை:** = சொல்லுவோனுடைய அபிப்பிராயத்திற்குத் தக்கவண்ணம் அர்த்தத்தையும், செய்கையையும், அதற்குறிய பலத்தை (பயனை) யும் அளிப்பது **"ஸைந்தவம் கொண்டுவா"** என்னும் வாக்கியத்தில் சாப்பிடும்போது உப்பிலும், பிரயாணமாய்ச் செல்லும்போது குதிரையிலும் வக்தாவின் அபிப்பிராயம் இருத்தலால், பயனாகும் செயல் அபிப்பிராயத்திற்கு மாறுபடாமல் இருப்பது தகுதி. ஆதலின், உலக வியவஹாரங்கள் யாவும் சொல்லுவோனது தாத்பரியத்திற்கிணங்க அர்த்தம் செய்யப்படும் சப்தப் பிரமாணஸ்வருபமாய் விளங்குகின்ற தென்பது நுட்பமாய் அறியத்தக்க விஷயமாகும். ஸகல, அதாவது, பத வாக்கிய பிரமாணஸ்வரூப சப்தப்பிரமாணங்களும், "அஹம், அஹம்" என்னும் சைதன்யரூப **अन्तः** (உள்) ஸ்புரணத்தையே காரணமாக வுடையனவாகும். இந்த பராஹந்தா ஸ்புரணமே விமர்ச சக்தியாகும் சித்சக்தியின் காமகலாஸ்வரூபமாம். இதைப்பற்றி அதிகமாய் அறிய விரும்புவோர், இவ்வாசிரியராலியற்றப்பட்ட **காமகலா விலாஸம்**, **ஆநந்தோல்லாஸ விரிவுரை**யில் கண்டு தெளிக. (30)

**(அவதாரிகை)** ஸ்ரீ சக்கிரத்தின் ஸ்வரூபமும், அதிஷ்டான சக்திகளின் ஸ்வரூபமும் இந்த ஶ்லோகத்தில் வர்ணிக்கப்படுகின்றன.

### ஸ்ரீ சக்ரம்

**श्रीचक्रं श्रुतिमूलकोश इति ते संसारचक्रात्मकं**
**विख्यातं तदधिष्ठिताक्षरशिवज्योतिर्मयं सर्वतः ।**
**एतन्मन्त्रमयात्मिकाभिररुणं श्रीसुन्दरीभिर्वृतं**
**मध्ये बैन्दवसिंहपीठललिते त्वं ब्रह्मविद्या शिवे ॥३ ॥**

**ஸ்ரீசக்ரம் ச்ருதிமூலகோச இதி தே ஸம்ஸாரசக்ராத்மகம்**
**விக்க்யாதம் தததிஷ்ட்டிதாக்ஷர-சிவஜ்யோதிர்-மயம் ஸர்வத: |**
**ஏதன்மந்தரமயாத்மிகாபி-ரருணம் ஸ்ரீஸுந்தரீபிர்-வ்ருதம்**
**மத்த்யே பைந்தவ-ஸிம்ஹபீடலலிதே த்வம் ப்ரஹ்ம-வித்யா சிவே || 31 ||**

**(பதவுரை)** (**சவே**) = மங்களவடிவினளே!; (**தே**) = உம்முடைய; (**ஸம்ஸார-சக்ராத்மகம்**) = ஸம்ஸார சக்ரவடிவான; (**ஸ்ரீசக்ரம்**) = ஸ்ரீசக்ரமானது; (**ச்ருதி-மூல-கோச:**) வேதத்திற்கு வேர் போன்ற ஓங்காரத்திற்குக் கோசம் போன்றது; (**இதி**) = என்பது; (**விக்க்யாதம்**) = பிரசித்தம்; (**தததிஷ்ட்டித**) = அதில் நிலைபெற்றுள்ள; (**அக்ஷர-சிவஜ்யோதிர்மயம்**) = பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் மங்களமான ஜோதியின் பரப்பு; (**ஸர்வத:**) = எங்கும் உளது; (**ஏதத்**) = இந்த; (**மந்த்ர-மய-ஆத்மிகாபி:**) = மந்திரமே உருக்கொண்டவர்களான; (**ஸ்ரீஸுந்தரீபி:**) = ஆவரண தேவதைகளால்; (**வ்ருதம்**) = சூழப்பெற்று; (**அருணம்**) = சிவந்த நிறத்துடன்; (**மத்த்யே**) = நடுவில்; (**பைந்தவ-ஸிம்ஹபீடலலிதே**) = பிந்துவாகிய ஸிம்மாஸனத்தில் அழகு மிகுந்து விளங்குபவளே!; (**த்வம்**) = நீர்; (**பிரஹ்மவித்யா**) = பிரம்மவித்யா ஸ்வரூபிணியாய் உள்ளவர்.

**ஸம்ஸார சக்ரம்** - பிரம்மாண்டமான உலகம் ஸம்ஸார சக்ரம்; பிண்டாண்டமான உடலும் ஸம்ஸார சக்ரம். பாவனோப நிஷத்தில் இது நன்கு விளக்கப்பட்டுள்ளது.

**ச்ருதி மூலகோச** - வேதத்திற்கு மூலம் பிரணவம் அல்லது ஓம். ஸ்ரீசக்ரத்தில் நடு முக்கோணத்தின் மூன்று கோணங்கள் அகார உகார மகார வடிவம்; பிந்து அர்த்தமாத்திரை. அதற்குக் கோசம் போன்றது ஸ்ரீ சக்ரம்.

**ஆவரண தேவதைகள்** - ஸ்ரீ சக்ர நவாவரண பூஜையிலும் கட்கமாலையிலும் ஆவரண தேவதைகளின் பெயர்களை விரிவாகக் காணலாம்.

**(தாத்பரியம்)** பிரஹ்ம வித்யாஸ்வரூபிணியும் ஸ்ரீ லலிதாம்கை யென்னும் திருநாமமுடையவளுமான ஓ சிவையே! உம்முடைய ஸ்தானமும், சரீரமும், பூஜாசக்கிரமு மாகும் இச்சக்கிரமானது ஸகல வேதங்களின் மூலகாரணமான ப்ரணவஸ்வரூபத்திற்கு இருப்பிடமானதும், மிகப்பிரஸித்தமானதுமாகும்; மேலும் உன்னுடைய ஸ்ரீ சக்கிரமே ஸம்சார சக்கிரமாய் விளங்குகின்றது. உன்னுடைய சக்கிரம் உன்னுடைய மந்த்ரமாகும் ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரியினின்று முண்டான தென்பது சாஸ்திரப்பிரஸித்தமானது. சக்கிரத்தின் மத்தியில் உள்ள மஹாபிந்து வாகும் ஸிம்ஹாஸனத்தில் நீ அதிஷ்டிதையாய் இருக்கின்றனை. திரிகோணம் முதல் நாற்சதுர பூபுரம் வரையில் உள்ள எல்லாச் சக்கிரங்களிலும் பீஜாக்ஷரமயமாய் விளங்கும் செந்நிறமான ஆவரண தேவதைகள் விளங்குகின்றனர்.

(**விசேஷவுரை) ஷ்ருதிமூலகோஸ:** = ஸ்ருதிகளின் மூல காரணமான பிரணவத்திற்கு இருப்பிடம். ஸ்ரீ சக்கிரத்தின் மத்தியத்திரிகோணம் பிரணவாத்மக மானது.. திரிகோணத்தின் மூன்று கோணங்கள் அகார, உகார, மகாரங்களாம். அர்த்தமாத்திரை பிந்து வடிவினதாகும்.

**ஸம்ஸாரசக்ராத்மகம்** பிரபஞ்சமே ஸம்ஸார சக்கிரமாகும் சரீரமும் ஸம்ஸார சக்கிரமாம்; **மனமே ஸம்ஸார சச்கிரமாமென்பது மிகவும் ரஹஸ்யமானது**. காலசக்கிர தேச சக்கிரங்களின் வடிவமாய் ஸ்ரீ சக்கிரத்தைத் தந்த்ரராஜம் கூறுகின்றது அறியத்தக்கது. ஸம்ஸார சக்கரமாகும் பிரபஞ்சமோ, சரீரமோ அல்லது மனமோ பர தேவதையின் வித்தையாகிற ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரியின் ஒவ்வொரு வர்ணாத்மகமான பஞ்சதன்மாத்ராஸ்வரூபம் யுள்ளது சாஸ்திரப் பிரஸித்தமாகும். ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்தையின் பதினைந்து வர்ணகங்களும் (5 சப்தம், 4 ஸ்பர்சம், 3 ரூபம், 2 ரஸம், 1 கந்தம் ஆக) பதினைந்து தன்மாத்ரா வடிவினவாகும். இத்தகைய ஸ்வரூபமுடைய பஞ்சதசீ வித்தையின் பீஜங்களிலிருந்து தான் ஸ்ரீ சக்கிரம் தோன்றி யிருக்கின்றது. அது வருமாறு: -

ல காரத்திலிருந்து பூபுரமும், ஸ காரத்திலிருந்து ஷோடச தள கமலமும், ஹ காரத்திலிருந்து அஷ்டதச கமலமும், ஈ காரத்திலிருந்து பதினான்குகோண சக்கிரமும் ஏ காரத்திலிருந்து பஹிர்த்தசாரமும், ரேப (ரகார) த்திலிருந்து அந்தர்த்தசாரமும், க காரத்திலிருந்து அஷ்ட கோணமும், நாதத்திலிருந்து முக்கோணமும் தோன்றின. பிந்துவே மஹாபிந்துஸ்வரூபமாகும். ஆகவே பஞ்சதசீவித்தைக்கும் ஸ்ரீ சக்கிரத்திற்கும் அபேதமாம். இவ்விஷயம் வரிவஸ்யாரஹஸ்யம் இரண்டாவது அம்சம் 46, 47 ஶ்லோகங்களில் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது. ஆதலின் ஸ்ரீ சக்கிரமும் பாஞ்சபௌதிகமே யாகும். ஆகவே, அதுவும் காலதேச வஸ்து பரிச்சேதமுடையதாந் தன்மையால் ஸம்ஸார சக்கிரமென்று கூறப்பட்டது.

तदधिष्ठिताक्षरशिवज्योतिर्मयं **(தத³தி⁴ஷ்ட்ரிதாக்ஷரஷிவஜ்யோதிர்மயம்)** = ஸ்ரீ சக்கிரத்தை யதிஷ்டித்து விளங்கும் மஹாப்பிரகாச ஸ்வரூப சிவத்தின் விமர்ஶவடிவ ஜ்யோதியின் கிரணவடிவ, அகாராதி க்ஷகாராந்த மாத்ருகாஸ்வரூபராய் விளங்கும் ஆவரண தேவதைகளின் மயமாய் விளங்குவது.

**ஸர்வத: ஏதன்மந்த்ரமயாத்மிகாபி⁴ரருணம்** = ஸ்ரீ சக்கிரம் முழுமையும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள மந்த்ராத்மக ஸூக்ஷ்ம சரீரத்தோடும், ஆத்மஸ்வரூப விமர்ஶத்தின் லிங்கமாகும் செந்நிறத்தோடுங் கூடியுள்ள,

**ஸ்ரீ ஸுந்த³ரி பி⁴ர்வ்ருதம்** = சிவக்ஞான ஸாதனங்களை நன்கருளும் ஆவரண தேவதைகளால் சூழப்பட்டுள்ளது ஸ்ரீ சக்கிரம்.

**மத்[4]யே பை[3]ந்த[3]வ ஸிம்ஹபீடே[2]** = ஸ்ரீ சக்கிரத்தின் மத்தியிலுள்ள பிந்து மயமான ஸிம்ஹானத்தின்கண்; பிந்து சக்கிரமே ஸிம்ஹாஸனம். இதற்குப் பஞ்சபிரேத மஹா ஸிம்ஹாசன மென்றும் வேறு பெயருண்டு. இதில் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேஸ்வரன் என்னும் நால்வர் கால்களாகவும், ஸதாசிவம் பலகையாகவும் விளங்குகின்றனர். இதன்மேல் பிரஹ்மவித்யா ஸ்வரூபிணியாயும், ஸமஸ்தமான கல்யாணங்களையும் அருள்பவளாயும், துவம்பத லக்ஷ்யார்த்த கூடஸ்தஸ்வ ரூபிணியாயுமுள்ள ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தரீ தேவியானவள் நிர்விசேஷப் பிரஹ்ம வடிவ, ஸ்ரீ காமேஸ்வரரின் வாமாங்கத்தின்மேல் வீற்றிருகின்றனள்.

## ஆவரண தேவதைகளின் விமர்சமாவது: -

| ஆவரணம் | ஆகாரம் | தேவதைகள் |
|---|---|---|
| முதலாவது | பூபுரம் | அணிமாதிகள், பிராஹ்ம் யாதிகள், முத்ரா தேவதைகள் |
| இரண்டாவது | ஷோடசதள கமலம் | காமாகர்ஷிண்யாதிகள் |
| மூன்றாவது | அஷ்டதள கமலம் | அநங்க குஸுமாதிகள் |
| நான்காவது | மன்வஸ்ரம் | ஸர்வஸங்க்ஷோபிண் யாதிகள் |
| ஐந்தாவது | பஹிர்த்த சாரம் | ஸர்வ ஸித்திப் பிரதாதிகள் |
| ஆறாவது | அந்தர்த்த சாரம் | ஸர்வக்ஞாதிகள் |
| ஏழாவது | அஷ்டகோணம் | வசின் யாதிகள் |
| எட்டாவது | திரிகோணம் | மஹாகாமேஸ்வர் யாதிகள் |
| ஒன்பதாவது | பிந்து | மஹாத்ரிபுரஸுந்தரீ |

இவர்களுக்கெல்லாம் பீஜாக்ஷரங்களும் மந்த்ரங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

இங்ஙனம், ஸ்ரீ சக்கிரத்தின் ஸ்வரூபமும் அதன் அதிஷ்டானமான ஸ்ரீ லலிதையின் ஸிம்ஹாஸனத்தின் விமர்சமும், ஆவரணதேவதைகளின் விளக்கமும் இதில் பிரதி பாதிக்கப்பட்டுள்ளது அறியத்தக்கது. (31)

**(அவதாரிகை)** இங்ஙனம் ஸ்ரீ சக்கிரவித்தையை நன்குணர்ந்து ஸ்ரீ சக்ராராதனம் செய்துவந்த பின்னர், பூர்ணாபிஷேகத்தைப்பெற்ற உத்தமா திகாரி யாகும் ஸாதகன் பரா பூஜையைச் செய்தல் அத்தியாவசியமாதலின் அதன் பொருட்டு இந்த ஸ்லோகத்தில் மஹாப்பிராஸாத மந்த்ரம் உத்தாரம் செய்யப் படுகின்றது.

## மஹா பராப்ராஸாத மந்திரம்

बिन्दुप्राणविसर्गजीवसहितं बिन्दुत्रिबीजात्मकं
षट्कूटानि विपर्ययेण निगदेत्तारत्रिवालाक्षरैः ।
एभिः संपुटितं प्रजप्य विहरेत्प्रासादमन्त्रं परं
गुह्याद्गुह्यतमं सयोगजनितं सद्भोगमोक्षप्रदम् ॥ ३२ ॥

**பிந்து-ப்ராண-விஸர்க்க-ஜீவஸஹிதம் பிந்து-த்ரிபீஜாத்மகம்**
**ஷட்கூடானி விபர்யயேண நிகதேத் தாரத்ரிபாலா-க்ஷரை: |**
**ஏபி: ஸம்புடிதம் ப்ரஜப்ய விஹரேத்-ப்ராஸாதமந்த்ரம் பரம்**
**குஹ்யாத்-குஹ்யதமம் ஸயோகஜநிதம் ஸத்போக-மோக்ஷப்ரதம்** || 32 ||

**(பதவுரை) (பிந்து-**) = அனுஸ்வாரம்; (**ப்ராண-**) = ஹகாரம்; (**விஸர்க்க-**) = விஸர்க்கம்; (**ஜீவ-**) = ஸகாரம்; (**ஸஹிதம்**) = இவைகளுடன் கூடியதும்; (**பிந்து-த்ரிஜாத்மகம்**) = ஹம்ஸ:, ஸோஹம், அம்ஹம்ஸ: அ: ஸோஹம் என்ற மூன்று வடிவு கொண்டதும்; (**விபர்யயேண**) = அதைத் திருப்புவதால்; (**ஷட் கூடானி**) = ஆறு கூடங்களாவதுமான மந்திரத்தை; (**தாரத்ரி-பாலா-அக்ஷரை:**) = தாரத்ரி அல்லது த்ரிதாரி ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம், பாலா ஐம் க்லீம் ஸௌ: என்ற அக்ஷரங்களுடன்; (**நிகதேத்**) = கூட்டி உச்சரிக்கவும்; (**ஏரி:**) = இவற்றால்; (**ஸம்புடிதம்**) = முன்னும் பின்னும் இணைக்கப் பெற்ற; (**ப்ராஸாத மந்த்ரம் பரம்**) = பராப்ராஸாத மந்திரத்தை; (**ப்ரஜப்ய**) = ஜபித்து; (**விஹரேத்**) = இன்புற்றிருக்கவும்; (**குஹ்யாத் குஹ்யதமம்**) = இது ரகசியங்களுள் மிகரகசியமானது; (**ஸ-யோக-ஜனிதம்**) = யோகத்துடன் பிறந்தது; (**ஸத்-போக-மோக்ஷப்ரதம்**) = நல்ல போகத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பது.

**பராப்பிரஸாத வீத்யா** - ஹ்ஸௌம்: ஸ்ஹௌம்:
**हसौः** **सहौः**

இதற்கு முன் சேர்க்க வேண்டியது த்ரிதாரி, - பாலாவுடன் (1) ஹம்ஸ:- (2) ஸோஹம்- (3) அம் ஹம்ஸ: அ: ஸோஹம் என்ற மூன்று கூடங்கள். பின்பு ஸம்புடம் போல் திருப்பிச் சேர்க்க வேண்டியது.. (4) ஸோஹம் அ: ஹம்ஸ: அம்- (5) ஸோஹம்- (6) ஹம்ஸ: - பாலா-த்ரிதாரி விபர்யயமாக.

**(தாத்பரியம்)** அநுஸ்வாரம், ஹகாரம், விஸர்க்கம், ஸகாரம் இவற்றின் சேர்க்கையால் ஏற்பட்டது **ஹம்ஸ:** என்பதாகும். இதை **ஹம்ஸ:; ஸோஹம்; அம் ஹம்ஸ: அ: ஸோஹம்** என்றபடி மூன்றாகப் பிரித்துக்கொண்டு அந்த மூன்றையும் நேராகவும் தலை கீழாகவும் சொல்ல ஆறு கூடங்களாகின்றன. இந்த ஆறு கூடங்களுக்கும் முதலில் த்ரிதாரியையும், பாலா பீஜங்களையும் சேர்க்கவேண்டும். இவற்றோடு பிராஸாத பரை, பராப்பிராஸாத த்தையும் சேர்க்க மஹா

பராப்பிராஸாத வித்தையாகின்றது. இதை இதை அர்த்தாநுஸந்தானத்தோடு ஜபிக்கின், ஸாதகர்கள் போக மோக்ஷங்களை யடைந்து ஜீவன்முக்தர்களாய் விளங்குவார்கள்.

**(விசேஷவுரை)** இதில் உத்தாரம் செய்யப்பட்டுள்ள மஹா பராப்பிராஸாத மாகும் மஹாவித்தை ரஹஸ்யங்களுக்கெல்லாம் பரமரஹஸ்யமானது. இதனால் ஐஹிகத்தில் புஷ்பம், சந்தனம், ஸ்திரீ ஸுகம், யானை, குதிரை, பல்லக்கு முதலிய சிரேஷ்ட வாஹனங்களின் அடைவு, சக்கிரவர்த்திகளாலும் பூஜிக்கப்படும் தன்மை முதலிய ஸகலத்தையும் அடைந்து மோக்ஷத்தையும் பெறலாமென்பது சாஸ்திரப் பிரஸித்தமானது.

இதன் உத்தாரமாவது: -

I. **ஓம், ஐம் ஹ்ரீம் ஸ்ரீம், ஐம் க்லீம் ஸெள:, -**
**ஹம்ஸ: ஸோஹம், அம் ஸஹ்ஸ: அ: ஸோஹம் ஹஸெளம்:**
**1 2 3**
**ஸ்வவ்ங்: -**
**ஸோஹம் அ: ஹம்ஸ: அம், ஸோஹம் ஹம்ஸ: -**
**3 2 1**
**ஸெள: க்லீம் ஐம், ஷ்ரீம் ஹ்ரீம் ஐம், ஓம்.**
என்பவனவாம். அல்லது,

II. **7 அம் ஹம்ஸ: ஹஸெளம்: ஸ்வவ்ங்:**

III. **7 ஹம்ஸ: ஸோஹம் ஹைம் ஹ்ஸெளம்: ஸ்வவ்ங்:**

இங்ஙனம் மூன்று விதமான உத்தாரங்கள் சாஸ்திரங்களில் காணப் படுகின்றன. (32)

**(அவதாரிகை)** இனி இந்த சுலோகத்தில் பிந்துசக்கிரமாகும் ஸிம்ஹாஸ னத்தில் அமர்ந்திருப்பவளும், ஸர்வா பரண பூஷிதையும், மஹாராஜோ பசாரங் களால் ஆராதிக்கத்தக்கவளுமான ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தரியை ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷி தியானம் செய்கின்றனர்.

## த்ரிபுரஸுந்தரீ ஸ்வரூபம்

**आताम्रार्क सहस्र दीप्ति परमा सौन्दर्य सारै रलं**
**लोकातीतमहोदयैरुपयुता सर्वोपमागोचरैः ।**
**नानानर्घविभूषणैरगणितैर्जाज्वल्यमानाभित**
**स्त्वं मातत्रिपुरारिसुन्दरि कुरु स्वान्ते निवासं मम ॥३३ ॥**

**ஆதாம்ரார்க்க-ஸஹஸ்ர-தீப்தி-பரமா ஸௌந்தர்ய-ஸாரை-ரலம்**
**லோகாதீத-மஹோதயை-ருபயுதா ஸர்வோபமா கோசரை: |**
**நானானர்க்ய-விபூஷணை-ரகணிதைர்-ஜாஜ்வல்ய-மானாபிதஸ்-**
**த்வம் மாதஸ்த்ரிபுராரி-ஸுந்தரி குரு ஸ்வாந்தே நிவாஸம் மம** ||33||

**(பதவுரை)** (**மாத:**) = தாயே!; (**த்ரிபுராரி-ஸுந்தரி**) = திரிபுரத்தை எரித்த பரமசிவபத்தினியே!; (**ஆதாம்ர-**) = சிவந்த; (**அர்க்க-ஸஹஸ்ர-**) = ஆயிரம் சூரியர்களின்; (**தீப்திபரமா**) = சிறந்த காந்தியை உடையவளாயும்; (**ஸௌந்தர்ய-ஸாரை:**) = வடிவழகால்; (**அலம்**) = பூர்ணமான; (**லோகாதீதமஹோதயை:**) = உலகை வென்ற மகிமையுடன்; (**உபயுதா**) = கூடியவளாயும்; (**ஸர்வ-உபமா-அகோசரை:**) = எவ்விதமான உவமைக்கும் எட்டாத; (**அகணிதை:**) = கணக்கற்ற; (**நானா-**) = பலவிதமான; (**அனர்க்கய**) = மதிப்பிடற்கரிய; (**விபூஷணை:**) = ஆபரணங்களால்; (**அறித:**) = சுற்றிலும்; (**ஜாஜ்வல்யமானா**) = ஜ்வலித்துப் பிரகாசிப்பவளாயும்; (**த்வம்**) = நீர்; (**மம ஸ்வாந்தே**) = என்னுள்ளத்தில்; (**நிவாஸம் குரு**) = வாஸம் செய்வீராக.

**த்ரிபுராரி ஸுந்தரீ** - புரம் சரீரம்; ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் முப்புரம், சரீரம் மாயாகார்யமாதலின் அதை ஒழிக்க தத்துவஞானம் அல்லது சிவஞானம் வேண்டும். அந்த சிவஞானப்ரதாயினியான பரதேவதையே த்ரிபுராரி ஸுந்தரி அல்லது த்ரிபுரஸுந்தரி.

**ஸ்வாந்தே** - உள்ளத்தில் அதாவது அநாஹதம் எனும் ஸம்வித் சக்ரத்தில்.

இதுவரை வர்ணிக்கப்பட்டது மந்த்ரஸ்வரூபம்.

இனி தேவியின் கரசரணாதி ஸ்வரூபத்தியானம் கூறப்படுகிறது.

**(தாத்பரியம்)** ஜகன்மாதாவாகும் ஓ மஹாத்ரிபுரஸுந்தரீ தேவியே! லோகோத்தரமாயுள்ள ஸௌந்தரியத்தின் ஸாரமானவையும், லோகாதீத மஹிமையுடையவையும், ஸர்வ உபமானங்களாலும் கூறமுடியாதவையும், கூறமுடியாதவையும், விலைமதிக்கக் கூடாதவையுமான பலவித திவ்விய பூஷணங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டவளும், பல்லாயிரம் பாலஸூர்யர்களின் சிவந்தகாந்தியைவிட அதிகப்பிரகாசமுடைய தன்மையால் தன்னைச்சுற்றிலும் பிரகாசித்துக்கொண்டு விளங்குபவளான உம்மை என் ஹ்ருதயத்தில் தியானம் செய்கின்றேன்; நீ என் ஹ்ருதயத்தில் வாஸம் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

**(விசேஷவுரை)** இந்த ஶ்லோகத்தில் பரதேவதையைத் தியானம் செய்யும் வகை கூறப்பட்டுள்ளது. தியானம் செய்யும் வகைக்குத் தக்கபடி பலத்தின் பேதம்

சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது மிகப்பிரஸித்தமாம். இங்கே பரதேவதையை அருண நிறத்தோடு கூடிய சரீர காந்தியையும் பூஷணா அலங்காரங்களையும் உடையவளாய் வர்ணிக்கப்பட்டுள்ளது.

**कुङ्कुमरागशोणे; सकुङ्कुमविलेपना; अरुणमाल्यभूषाम्बरां; जपाकुसुम भासुरां; अरुणां करुणातरङ्गिताक्षीं; सिन्दूरारुण-विग्रहां; उद्यत्कोटिरविप्रख्यां; सर्वारुणा; जपापुष्पनिभाकृतिः ॥**

என்பனவாதி பிரமாணங்களால், பரதேவதையைச் செந்நிறமாகவும், செந்நிற வஸ்திரமால்ய பூஷணங்களைப் பூண்டுள்ளவளாகவும் தியானித்தல் அவசியமென் றேற்படுகின்றது. தியானிக்கும் நிறத்தின் வேறுபாட்டிற்குத்தக்கபடி தியானத்தின் பயனும் வேறுபடுமென்பது சாஸ்திர ஸித்தாந்தமாகும்.

**லௌஹித்ய மேதஸ்ய ஸர்வஸ்ய வ்மர்ஸ:** என்னும் பாவனோபநிஷத்தின் வாக்கியப்படி, லௌஹீத்ய மென்னும் செம்மை நிறத்தின் தத்துவம் **சிவாபின்ன ஆத்மகோசர அகண்டாகார வ்ருத்தியே** யாமென்றேற்படுகின்றது.

ஹ்ருதயமே அநாஹதமென்னும் ஸம்வித்சக்கிரமாகும்.

**मम स्वान्ते निवासं कुरु (மம ஸ்வாந்தே நிவாஸம் குரு)** "என்னுடைய ஹ்ருதயத்தில் நீக்கமின்றி நீ வஸிப்பாயாக" என்பது பிரார்த்தனை: இதனால் நிரந்தரம் இடைவிடாது விளங்கும் ஆத்மாகார அகண்ட வ்ருத்தி வடிவ நிதித்தியாஸம் ஏற்படவேண்டு மென்று பிரார்த்திக்கப் படுகின்றது அறியத்தக்கது.

**த்ரிபுராரிஸுந்த[3]ரி** திரிபுரங்களைச்சுட்ட பரமேச்வரனது ஆத்மஸ்வரூப விமர்சவடிவமாகும். புரம் = சரீரம். ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரங்களே முப்புரங்களாகும். உபாதியாகும் சரீரங்கள் கார்யங்களாதலின் அவற்றை யொழிக்க தத்துவ ஞானமே வேண்டும். தத்துவ ஞான ஸ்வரூபிணியே பரதேவதையாகும் மஹா த்ரிபுரஸுந்தரி யாம். (33)

**(அவதாரிகை)** மஹாயோகீஸ்வரராகும் ஸ்ரீ ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷியானவர் முன் ஶ்லோகத்தில் அம்பாளை ஸமஷ்டியாய்த் தியானித்து, இது முதல், மேலானதாயுள்ள ஸௌபாக்கிய மென்னும் மோக்ஷத்தை யருளக்கூடியவளும், நானாவித வஸ்த்ர, பூஷண, புஷ்பாலங்காரங்களோடு விளங்குபவளுமான பரதேவதையின் திவ்விய அங்கங்களையும், பூஷணங்களையும், ஆயுதங்களையும் தனித்தனியாய் வர்ணித்துத் துதிக்கத்தொடங்கி, இதில், அம்பாளின் **சரணங்களைத்** துதிக்கின்றனர்.

## பாதாரவிந்த தியானம்

शिञ्जनपुरपादकङ्कणमहामुद्रासुलाक्षारसा
लंकाराङ्कितपादपङ्कजयुगं श्रीपादुकालंकृतम् ।
उद्भाखन्नखचन्द्रखण्डरुचिरं राजजपासंनिभं
ब्रह्मादित्रिदशासुरार्चितमहं मूर्ध्नि स्मराम्यम्बिके ॥३४॥

**சிஞ்ஜந்நூபுர-பாதகங்கண-மஹாமுத்ரா-ஸுலாக்ஷா-ரஸா-**
**(அ)லங்காராங்கித-பாதபங்கஜ-யுகம் ஶ்ரீபாதுகாலங்-க்ருதம் ।**
**உத்பாஸ்வந்-நகசந்த்ரகண்ட-ருசிரம் ராஜஜ்-ஜபா-ஸந்நிபம்**
**ப்ரஹ்மாதி-த்ரிதசாஸுரார்ச்சித-மஹம் மூர்த்த்னி ஸ்மராம்யம்பிகே ॥ 34 ॥**

**(பதவுரை)** (**அம்பிகே**) = அம்பிகையே!; (**ஶ்ரீபாதுகா-அலங்க்ருதம்**) = அழகிய பாதுகைகளால் அலங்கரிக்கப் பெற்றதும்; (**சிஞ்ஜன்**) = ஒலிக்கும்; (**நூபுர-**) = சதங்கைகளாலும்; (**பாத-கங்கண-**) = பாதகங்கணங்களாலும்; (மஹா-முத்ரா-) = உபாஸகர்களின் ம்ருகீ எனும் முத்திரையாலும்; (**ஸுலாக்ஷாரஸ-**) = சிறந்த லாக்ஷாரஸத்தாலும்; (**அலங்கார-அங்கித**) = அலங்கார அடையாளங்களுடன் கூடியதும்; (**உத்பாஸ்வன்**) = சிறந்து பிரகாசிக்கும்; (**நக-சந்த்ரகண்ட-ருசிரம்**) = சந்திரகலைகளைப் போன்று மிளிரும் நகங்களை உடையதும்; (**ராஜஜ்ஜபா-ஸந்நிபும்**) = செம்பருத்திப் பூப் போன்ற வண்ணமுடையதும்; (**ப்ரஹ்மாதி-**) = பிரம்மா முதலிய; (**த்ரிதச-**) = தேவர்களாலும்; (**அஸுர-**) = அசுரர்களாலும்; (**அர்ச்சிதம்**) = பூஜிக்கப் பெற்றதுமான; (**பாதபங்கஜயுகம்**) = திருவடித் தாமரைகள் இரண்டையும்; (**அஹம்**) = நான்; (**மூர்த்தனி**) = எனது சிரசில்; **(ஸ்மராமி**) = தியானம் செய்கின்றேன்.

பரதேவதையின் திருவடிகளை சிரசில் பொருத்தித் தியானித்தல் சாம்பவீ எனும் **சிவயோகம்**. உபாஸகர்கள் சிரசில் (ஸஹஸ்ராரத்தில்) பாதுகாமந்திரத்தை ம்ருகீ எனும் மஹா முத்திரை இயற்றித் தியானிப்பது ஸம்பிரதாயம்.

ஒ. தேவியின் பாதங்களில் அளிக்கப்பட்ட தீர்த்தம் பரம சிவனுடைய தலையிலிருக்கும் கங்கை ஆகிறது. அவற்றிற்குப் பூசப்பட்ட லாக்ஷாரஸத்தின் பொலிவு விஷ்ணுவின் சிரசை அலங்கரிக்கும் மாணிக்கம் போல் உளது.

- ஸௌந்தர்யலஹரீ. 84

**(தாத்பரியம்)** ஹே அம்பிகையே! சலங்கைகள் சப்தித்துக் கொண்டுள்ள பாதஸரங்களாலும், காப்புகளாலும், செம் பஞ்சுக்குழம்பாலும், உபாஸகர்களால் இயற்றப்பட்ட மஹா முத்திரையாலும் அலங்கரிக்கப்பட்டனவாயும், மணிமயமான பாதுகைகளின் மேல் விளங்குவனவாயும், சந்திர ரேகைகள் போல் பிரகாசிக்கும் நகங்களோடு பிரகாசிப்பனவாயும், அப்பொழுது தான் மலர்ந்த ஜபா (செம்பருத்திப்)

புஷ்பத்தைப் போன்ற செந்நிறமுடையனவாயும், பிரஹ்மாதி மூர்த்திகளாலும், இந்திரனாதி தேவர்களாலும், அஸுரர்களாலும் ஆராதிக்கப் படுவனவாயுமுள்ள இரண்டு **பாதாரவிந்தங்களை** அடியேனது சிரஸில் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை) महामुद्राः** - (**மஹாமுத்[3]த[4]**) உபாஸகர்கள் தங்கள் சிரஸில் (பிரஹ்மாந்திரமாகும் ஸஹஸ்ராரத்தில்) பாதுகாமந்திரத்தை ம்ருகீமுத்திரை இயற்றித் தியானிப்பது ஸம்பிரதாயமாம். இந்த ம்ருகீமுத்திரையே இங்கே மஹா முத்திரை யென்பதாகும். இதன்மேல் பரதேவதையின் சரணங்கள் அம்பாளின் சரணங்களை தாங்குவன பாதுகைகளாகும். இவை சிந்தாமணி யென்னும் இரத்தினங்களால் இழைக்கப்பட்டு விளங்குகின்றன.

**ஸாம்ப[4]வீசரணவிந்யாஸா:** பரதேவதையின் பாதாரவிந்தங்களைச் சிரஸில் பொருத்தித் தியானித்தல் சாம்பவீ யென்னும் சிவயோகமாகும். ஆதலின் **சிவயோகம்** இதில் குறிப்பிடப்பட்டுள்ளது அறியத்தக்கது.

**ஸிஞ்ஜாநூபுரபாத[3]கங்கண** பாதபங்கஜங்களில் விளங்கும் நூபுரத்தின் மணிச்சிலங்கைகள், காப்புகள் இவைகளின் சப்தம்.

**चिरादन्तःशल्यं दहनकृतमुन्मूलितवता**
**तुलाकोटिक्काणैः किलिकिलितमीशानरिपुणा ।।**

"முது பழம்பகை கருதிவேள்
இறையை வென்றனன் விழியை வென்றனன்
எனமு ழங்கிய குரலெனாது
அறை சிலம் பெழும் அரவ மென்ப"

**(இதன் பொருள்)** "அம்பாளின் பாத நூபுரச்சிலங்கைகளின் சப்தமானது, மன்மதன் தன்னைப் பரமசிவன் நீறாக்கியதால் ஏற்பட்ட வெகு காலத்திய பகைமையை யொழித்து அவ்விறையை வென்று ஜய கோஷம் செய்வது போலிருக்கின்ற" தென்று ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் ஸ்ரீ சௌந்தர்யலஹரி யில் 86 - வது ஸ்லோகத்தில் திருவாய் மலர்ந்தருளியுள்ளது ஈண்டறிதற்பாலது.

**உப்[4]தா[3]ஸ்வஞ்நக[2]சந்த[3]ரக[2]ண்டருசிரம்** - நகங்கள் சந்திரனைப்போல் விளங்குகின்றன வென்பதைப் பரமாசார்யாள் ஸௌந்தர்ய லஹரியில் -

**नखैः कस्त्रीणां करकमलसंकोचशशिभिः**
**तरूणां दिव्यानां हसत इव ते चण्डि चरणौ ।।**

"முற்றுபொற்பர மாதர் கைத்தல
முண்டகங்குவி வெண்ணிலா
நற்றிறத் தொடுநாடி நாடி
கைக்க வாளுகி ரென்பரே."

**(இதன் பொருள்)** இந்த்ராணி முதலிய தேவலோக ஸ்திரீகள் அம்பாளின் சரணங்களை நமஸ்கரிக்கும் போது அவர்களுடைய கைகளாகிற தாமரை மலர்களைக் குவியச்செய்வதில் ஸாமர்த்தியமுள்ள சந்திரனைப் போன்ற வெண்மை யான நகங்களால் பரிகாஸம் செய்வது போன்றிருக்கின்ற தென்று கூறுகின்றனர். (34)

**(அவதாரிகை)** இதில் நன்கு அலங்கரிக்கப்பட்டதும், பூஜிக்கப்பட்டதுமான பரதேவதையின் நிதம்பம் வர்ணிக்கப்படுகின்றது.

## இடுப்பு வர்ணனை

**आरक्तच्छविनातिमार्दवयुजा निश्वासहार्येण य**
**कौशेयेन विचित्ररत्नघटितैर्मुक्ताफलैरुज्ज्वलैः ।**
**कूजत्काञ्चनकिङ्किणीभिरभितः संनद्धकाचीगुणे**
**रादीप्तं सुनितम्बबिम्बमरुणं ते पूजयाम्यम्बिके ॥३५ ॥**

**ஆரக்தச்சவிநாதி-மார்த்தவயுஜா நிச்வாஸஹார் யேண வத்**
**கௌசேயேன விசித்ர-ரத்னகடிதைர்-முக்தாபலை-ருஜ்ஜ்வலை: ।**
**கூஜத்காஞ்சன-கிங்கிணீபி-ரபித: ஸந்நத்த-காஞ்சீகுணை-**
**ராதீப்தம் ஸுநிதம்ப-பிம்ப-மருணம் தே பூஜயாம்-யம்பிகே ॥ 35 ॥**

**(பதவுரை)** (**அம்பிகே**) = அம்பிகையே!; (**ஆரக்தச்சவினா**) = நல்ல சிவப்பு வண்ணமுடையதும்; (**அதிமார்த்தவ-யுஜா**) = மிகவும் மெதுவானதும்; (**நிச்வாஸஹார்யேண**) = மூச்சுக்காற்றில் அசையக்கூடியதுமான; (**யத் கௌசேயேன**) = எப்படிப்பட்ட பட்டு வஸ்திரமுண்டோ அதனாலும்; (**விசித்ர ரத்ன நடிதை:**) = பலவித ரத்னங்களிழைக்கப்பட்ட; (**உஜ்ஜ்வலை:**) = ஒளிவீசும்; (**முக்தாபலை:**) = முத்துக்களுடன் கூடியதும்; (**கூஜத்**) = இனிமையாய் ஒலிக்கும்; (**காஞ்சன கிங்கிணீபி:**) = தங்கச் சலங்கைகளால்; (**அபித:**) = சுற்றிலும்; (**ஸந்நத்த-**) = இணைக்கப் பெற்றதுமான; (**காஞ்சீருணை:**) = அரை நாண்களாலும்; (**ஆதீப்தம்**) = பிரகாசிக்கும்; (**அருணம்**) = உதயசூரியன் போன்ற; (**தே**) = உமது; (**ஸுநிதம்ப-பிம்யம்**) = அழகிய இடுப்புப் பிரதேசத்தை; (**பூஜயாமி**) = பூஜிக்கிறேன்.

ஒ. 'அருணாருண-கௌஸும்ப-வஸ்த்ரபாஸ்வத் கடீதடீ' சிவப்புப் பட்டாடையால் பிரகாசிக்கின்ற இடை உடையவள், ரத்ன கிங்கிணிகா-ரம்ய-ரசனா-தாம-பூஷிதா' - இரத்தினச் சதங்கைகளுடன் விளங்கும் அழகிய அரைஞாண் பூண்டவள். - லலிதா ஸஹஸ்ரநாமம் 37-38

**(தாத்பரியம்)** ஓ அம்பிகே! நானாவித ரத்தினங்கள் இழைக்கப்பெற்று நல்ல முத்துக்களால் பிரகாசிக்கப்பட்டதும், சப்திக்கின்ற தங்கச் சலங்கைகளால் சூழப்பட்டதுமான ஒட்டியாணத்தோடும், அரைஞாணோடும் பிரகாசிப்பதும், மிருதுவானதும், அருண நிறத்தோடு கூடியதும், மூச்சுக் காற்றினாலுங்கூட அலையக்கூடிய அவ்வளவு மெல்லிய பட்டுவஸ்திரத்தினால் அலங்கரிக்கப்பட்டதும் ஆன உமது அழகிய நிதம்ப மண்டலத்தைத் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை)** நிதம்பம் = இடுப்பின் பின்புறம். பரதேவதை செந்நிறப் பட்டுச்சேலையைத் தரித்திருக்கின்றனள். அது மூச்சுக்காற்றினாலும் அலையக் கூடிய அவ்வளவு மெல்லியதாய் இருக்கின்றது. நிதம்பத்தின் மேற்பாகத்தில் ஒட்டியாணம் விளங்குகின்றது. அதில் தங்கச்சலங்கைகளும் மதயானைகளின் மத்தகத்தினின்றுதிரும் நல்ல முத்துக்களும் விளங்குகின்றன. அது பற்பல விதமான மணிகளால் இழைக்கப்பட்டிருக்கின்றது. அந்த மேகலையைச் சுற்றி அரைஞாணும் பிரகாசிக்கின்றது. என்பது திரண்ட பொருளாகும். (35)

**(அவதாரிகை)** இதில் அம்பாளின் குசமண்டலம் ஸ்துதிக்கப்படுகின்றது.

## நகில்களின் தியானம்

**कस्तूरीघनसारकुङ्कुमरजोगन्धोत्कटैश्चन्दन**
**रालितं मणिमालयातिरुचिरं ग्रैवेयहारादिभिः ।**
**दीप्तं दिव्यविभूषणैर्जननि ते ज्योतिर्विभावत्कुच**
**व्याजस्वर्णघटद्वयं हरिहरब्रह्मादिपीतं भजे ॥ ३६ ॥**

**கஸ்தூரீ-கனஸார-குங்குமரஜோ-கந்தோத்கடைச்-சந்தனை-**
**ராலிப்தம் மணிமாலயாதிருசிரம் க்ரைவேய-ஹாராதிபி: |**
**தீப்தம் திவ்ய-விபூஷணைர்-ஜனனி தே ஜ்யோதிர்-விபாஸ் வத்-குச-**
**வ்யாஜ-ஸ்வர்ணகடத்வயம் ஹரிஹர-ப்ரஹ்மாதி-பீதம் பஜே** || 36 ||

**(பதவுரை)** (**ஜனனி**) = தாயே!; (**கஸ்தூரி-தனஸார-குங்குமரஜ:**) = கஸ்தூரி பச்சைக்கற்பூரம் குங்குமப்பூ இவற்றின் துகள்களால்; (**கந்தோத்கடை:**) = வாசனையேறிய; (**சந்தனை:**) = சந்தனத்தால்; (**ஆலிப்தம்**) = பூசப்பெற்றதும்; (**மணிமாலயா**) = ரத்ன மாலைகளால்; (**அதிருசிரம்**) = அழகுமிக்கதும்; (**கரைவேய-**

**ஹாராதிபி:**) = கழுத்திலணிந்த ஆபரணங்கள் ஹாரம் முதலியவற்றாலும்; (**திவ்ய விபூஷணை:**) = திவ்ய பூஷணங்களாலும்; (**தீப்தம்**) = பிரகாசிப்பதும்; (**ஹரிஹர-ப்ரஹ்மாதி-**) = ஹரி ஹரன் ப்ரஹ்மா முதலியவர்களால்; (**பீதம்**) = பருகப்பெற்றதுமான; (**தே**) = உமது; (**ஜ்யோதி: விபாஸ்வத்-குச-வ்யாஜ-**) = ஜ்வலிக்கும் நகில்கள் எனப் புனைப் பெயர் கொண்டவையுமான; (**ஸ்வர்ணகடத்வயம்**) = இரு பொற் கலசங்களை; (**பஜே**) = தியானிக்கிறேன்.

**நகில்கள்** - ஒ. 'அமூ தே வக்ஷோஜாவம்ருதரஸ-மாணிக்ய-குதுபௌ' - உம்முடைய நகில்கள் அமிருதம் நிறைந்த ரத்ன கலசங்கள். - ஸௌ. லஹரீ 73

**(தாத்பரியம்)** ஓ ஜனனீ! கஸ்தூரி, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, இவற்றின் பொடியின் வாஸனையால் மேன்மையுற்றதாய் விளங்கும் சந்தனப்பூச்சை யுடையதும், நவரத்தின மாலைகளால் மிகவும் பிரகாசிப்பதும், கண்டாபரணங்களால் திகழ்வதும், விலைமதிக்கப்படாத திவ்விய பூஷணங்களால் ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசிப்பதும், பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரர்களால் பானம் செய்யத்தக்க இனிய அம்ருதம் நிறைந்ததுமான உமது ஸ்தனயுகள மென்னும் இரண்டு பொற் கலசங்களை அடியேன் மனத்தில் பாவிக்கின்றேன். (36)

**(அவதாரிகை)** இந்த ஶ்லோகத்தில் மெல்லிய கொடிகளைப் போன்ற அம்பாளின் நான்கு கைகளும், சங்கை யொத்த கண்டமும் தியானிக்கப்படுகின்றன.

## கழுத்துப்பிரதேசம்

**मुक्तारत्नसुवर्णकान्तिकलितैस्ते बाहुवल्लीरहे**
**केयूरोत्तमबाहुदण्डवलयैर्हस्ताङ्गुलीभूषणैः ।**
**संपृक्ताः कलयामि हीरमणिमन्मुक्ताफलाकीलित**
**ग्रीवापट्टविभूषणेन सुभगे कण्ठं च कम्बुश्रियम् ॥३७॥**

**முக்தா-ரத்ன-ஸுவர்ண-காந்தி-கலிதைஸ்தே பாஹுவல்லீரஹம்**
**கேயூரோத்தம-பாஹுதண்ட-வலயைா-ஹஸ்தாங்குலீ- பூஷணை: |**
**ஸம்ப்ருக்தா: கலயாமி ஹீரமணிமன்-முக்தாபலாகீலித-**
**க்ரீவாபட்ட-விபூஷணேன ஸுபகே கண்ட்டஞ்ச-கம்புச்ரியம் || 37 ||**

**(பதவுரை)** (**ஸுபகே**) = ஸௌபாக்கியத்திற்கிருப்பிடமானவளே!; (**முக்தா-**) = முத்து; (**ரத்ன-**) = ரத்னம்; (**ஸுவர்ண-**) = தங்கம் ஆகியவற்றின்; (**காந்தி-கலிதை:**) = காந்தியுடன் கூடியவையும்; (**கேயூர-**) = கேயூரம்; (**உத்தமபாஹு தண்ட-**) = சிறந்த அங்கதம்; (**வலயை:**) = கங்கணம் ஆகியவற்றுடனும்; (**ஹஸ்தாங்குலீ-பூஷணை:**) = கைவிரல்களை அலங்கரிக்கும் மோதிரம் முதலியவற்றுடனும்; (**ஸம்ப்ருக்தா:**) =

கூடிய; (**தே**) = உமது; (**பாஹுவல்லீ:**) = கொடிகள் போன்ற கைகளையும்; (**ஹீர-**) = வயிரம்; (**மணிமத்**) = ரத்னம் ஆகியவற்றுடன் கூடியவையும்; (**முக்தாபாலாகீலித**) = முத்துக்களாலிழைக்கப்பட்டவையுமான; (**க்ரீவாபட்ட-விபூஷணேன**) = அட்டிகை முதலிய பூஷணங்கள் அணியப் பெற்றதும்; (**கம்புச்ரியம்**) = சங்கினைப் போன்றழகியதுமான; (**கண்ட்டஞ்ச**) = கழுத்தையும்; (**அஹம்**) = நான்; (**சலயாமி**) = தியானிக்கிறேன்.

**கேயூரம் அங்கதம்** - முழங்கைக்கு மேல் அணியப்பெறும் ஆபரணங்கள். **கங்கணம்** மணிக்கட்டில் அணிவது.

**கம்புச்ரியம்** - ஓ. கம்புபூத-ஸமச்சாய-கந்தராயை நமோ நம:

- லலிதா அஷ்டோத்தர சதநாமாவளி.

**(தாத்பரியம்)** ஓ தேவியே! முத்து, வைரம் முதலிய இரத்தினக்காந்திகளாலும், ஸ்வர்ணம் முதலியவற்றின் பிரகாசத்தாலும் மனோஹரமாய் விளங்கும் கேயூரம், அங்கதம், கங்கணம் முதலிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட நான்கு கைகளோடும், மோதிரங்களால் சோபிக்கும் விரல்களோடும் கூடிய உமது நான்கு புஜங்களையும், வைரமுத்துக்களும் நல்லமுத்துக்களும் கலந்து கோக்கப்பட்டுள்ள கண்டாபரணத்தோடிலங்கும் சங்கினை யொத்த கண்டத்தையும் நான் மனத்தில் தியானிக்கின்றேன்.

**(விசேஷவுரை)**

**கேயூரம்** = மணிக்கட்டில் அணியும்படியான ஒருவித ஆபரணம்.

**அங்கதம்** = தோளுக்குக் கீழும் முழங்கைக்கு மேலும் அணியும் ஆபரணம்.

(37)

**(அவதாரிகை)** ஸ்ரீ துர்வாஸ முனிவர் இந்த ஶ்லோகத்தில் அம்பாளின் இரண்டு காதுகளையும், நாழிகையையும் வர்ணித்துத் துதிக்கின்றனர்.

## முகவர்ணனை

**तप्तस्वर्णकृतोरुकुण्डलयुगं माणिक्यमुक्तोल्लस**
**हीराबद्धमनन्यतुल्यमपरं हैमं च चक्रद्वयम् ।**
**शुक्राकारनिकारदक्षमपरं मुक्ताफलं सुन्दरं**
**बिभ्रत्कर्णयुगं नमामि ललितं नासाग्रभागं शिवे ॥३८ ॥**

**தப்தஸ்வர்ண-க்ருதோருகுண்டலயுகம் மாணிக்ய-முக்தோல்லஸத் -**
**ஹீராப்த்த-மனன்ய-துல்ய-மபரம் ஹைமஞ்ச சக்ரத்வயம் |**
**சுக்ராகார-நிகார-தக்ஷ-மபரம் முக்தாபலம் ஸுந்தரம்**
**பிப்ப்ரத் கர்ணயுகம் நமாமி லலிதம் நாஸாக்ரபாகம் சிவே || 38 ||**

**(பதவுரை)** (**சிவே**) = மங்கள வடிவினளே!; (**தப்தஸ்வர்ண-க்ருத-**) = உருக்கிய தங்கத்தால் செய்த; (**உரு**) = பெரிய; (**குண்டலயுகம்**) = இரு குண்டலங்களையும்; (**மாணிக்ய-முக்தோல்லஸத்**) = மாணிக்கமும் முத்தும் இழைத்ததும்; (**ஹீராபத்தம்**) = வயிரங்கட்டியதும்; (**அனன்ய-துல்யம்பரம்**) = ஒப்புயர்வற்றதும்; (**ஹைமஞ்ச**) = பொன்னாலானதும்; (**சக்ரத்வயம்**) = சக்ரவடிவான இரு தாடங்கங்களையும்; (**பிப்ப்ரத்**) = அணிந்துள்ள; (**கர்ணயுகம்**) = இரு காதுகளையும்; (**சுக்ராகார-நிகார-நக்ஷமபரம்**) = மற்றும் சுக்ரனுடைய பிரகாசத்தையும் தோல்வியுறச் செய்யும்; (**ஸுந்தரம்**) = அழகிய; (**முக்தாபலம்**) = முத்தை-; (**பிப்ரத்**) = அணிந்துள்ள-; (**லலிதம்**) = அழகுமிக்க; (**நாஸாக்ரபாகம்**) = மூக்கு நுனியையும்; (**நமாமி**) = நமஸ்கரிக்கிறேன்.

ஒ. தாடங்க-யுகளீபூத-தபனோடுப்ப-மண்டலா ।
தாராகாந்தி-திரஸ்காரி-நாஸாபரண-பாஸுரா ॥

- லலிதாஸஹஸ்ரநாமம்

**(தாத்பரியம்)** ஸகலமான மங்களங்களையும் அருளும் சிவையே! பத்தரை மாற்றுள்ள தங்கத்தாற் செய்யப்பட்ட இரண்டு பெரிய குண்டலங்களையும், மாணிக்கத்தாலும் முத்துக்களாலும் வஜ்ஜிரங்களாலும் இழைக்கப்பட்ட ஸ்வர்ண மயமான சக்கிராகாரமான இரண்டு தாடங்கங்களையும் தரித்துள்ள உமது இரண்டு கர்ணங் (காது) களையும், சுக்கிரனுடைய வெள்ளிய பிரகாசத்தையும் தோர்க்கச் செய்யும் அவ்வளவு பிரகாசமுள்ளதும், மனோஹரமானது மாகிய உயர்ந்த நல்ல முத்தாலாக்கப்பட்ட நாஸாபரணத்தை (மூக்குத்தியை) யுடைய உமது நாஸிகையின் நுனிப்பாகத்தையும் நான் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை)** கர்ணபூஷணங்கள் இரண்டு. அவை குண்டலங்களும் தாடங்கங்களுமாம். குண்டலம் = தோடு. தாடங்கம் = வட்டமாயும் காதுகளின் மேற்பாகத்திலணியத்தக்கதாயு முள்ள வட்டமான ஆபரணம். (38)

**(அவதாரிகை)** இதில் அம்பாளுடைய ஸுப்பிரஸன்ன முகம் மண்டலம் ஸ்துதிக்கப்படுகின்றது.

### முகவர்ணனை

**उद्यत्पूर्णकलानिधिश्रि वदनं भक्तप्रसन्नं सदा**
**संफुल्लाम्बुजपत्रचित्रसुषमाधिक्कारदक्षेक्षणम् ।**
**सानन्दं कृतमन्दहासमसकृत्प्रादुर्भवत्कौतुकं**
**कुन्दाकारसुदन्तपतिशशिभापूर्णं स्मराम्यम्बिके ॥३ ९ ॥**

**உத்யத்பூர்ண-கலாநிதிச்ரி வதனம் பக்தப்ரஸன்னம் ஸதா**
**ஸம்ப்புல்லாம்புஜ-பத்ர.சித்ர-ஸுஷமா-திக்கார-தக்ஷேக்ஷணம் ।**
**ஸாநந்தம் க்ருத-மந்தஹாஸ-மஸக்ருத்-ப்ராதுர்ப்பவத்-கௌதுகம்**
**குந்தாகார-ஸுதந்த-பங்க்தி-சசிபா-பூர்ணம் ஸ்மராம்யம்பிகே** ॥ 39 ॥

**(பதவுரை)** (**அம்பிகே**) = அம்பிகையே!; (**உந்யத்-பூர்ணகலா-நிதிச்ரி**-) = பரிபூர்ண கலைச்செல்வத்துடன் உதிக்கும் சந்திரனைப் போல் அழகியதும்; (**பக்தப்ரஸன்னம்**) = பக்தர்களுக்கு காட்சியளிப்பதும்; (**ஸதா**) = எப்பொழுதும்; (**ஸம்புல்லாம்புஜ-**) = மலர்ந்த தாமரை; (**பத்ரசித்ர-ஸுஷமா-)** இதழ்களின் அற்புதமான அழகை; (**நிக்கார**-) = வெல்லும்; (**தக்ஷ**-) = சக்தி வாய்ந்த; (**ஈக்ஷணம்**) = கண்களுடன் கூடியதும்; (**ஸானந்தம்**) = ஆனந்தத்துடன்; (**க்ருத-மந்தஹாஸம்**) = புன்முறுவல் பூத்ததும்; (**அஸக்ருத்**) = அடிக்கடி; (**ப்ராதுர்ப்பவத்**) = பொங்கியெழும் (**கௌதுகம்**) ஆர்வமுடையதும்; (**குந்தாகார**-) மல்லிகை போன்ற; (**ஸுதந்த-பங்க்தி**) = அழகிய பல்வரிசையால்; (**சசிபா பூர்ணம்**) = நிலவொத்த காந்தியால் நிறைந்ததும் ஆகிய; (**வதனம்**) = முகமண்டலத்தை; (**ஸ்மராமி**) = தியானிக்கிறேன்.

ஒ. தயமான-தீர்க்கநயனாம் தேசிகரூபேண தர்சிதாப்-யுதயாம் ॥
- நவரத்னமாலிகாஸ்தோத்ரம்

ஓ. சுத்தவித்யாங்குராகார-த்விஜபங்க்தி-தவயோஜ்-ஜ்வலா ।
- லலிதாஸஹஸ்ரநாமம்.

**(தாத்பரியம்)** ஹே அம்பிகே! ஷோடச கலைகளோடும் உதிக்கும் பூர்ண சந்திரனைப்போல் பிரகாசிக்கின்றதும், பக்தர்களிடத்தில் ஸதா பிரஸன்ன வடிவ மலர்ச்சியோடு கூடியதும், நன்கு மலர்ந்த தாமரை இதழின் சோபையை திக்காரம் செய்வதில் ஸாமர்த்தியமுள்ளதும், கருணா நோக்கம் ததும்பும்படியானதுமான நேத்திரங்களோடு விளங்குவதும், அடிக்கடி ஆநந்தத்தைக் குறிப்பிடும் மந்தஹாஸத்தோடு கூடியதும், குந்த புஷ்பங்களைப் போன்ற நல்ல பல் வரிசையோடு கூடியதுமான உமது **முகமண்டல**த்தைத் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை)** இதில் அம்பாளின் முகமண்டலத்தின் சோபை, பிரஸன்னத்துவம், கருணா நோக்கத்தோடு கூடிய நேத்திரங்கள், அகமுக மலர்ச்சியை (மனக்களிப்பை)ப் பிரகடம் செய்யும் மந்தஹாஸத்தோ (குறு நகையோ) டு கூடிய தந்த பங்க்தி (பல் வரிசை) என்னும் இவைகள் வர்ணிக்கப் பட்டுள்ளன. (39)

**(அவதாரிகை)** இதில், ஸ்ரீ துர்வாஸ முனிவர் பரதேவதையின் நெற்றியையும், இரண்டு அதரங்(உதடு)களையும், சரீரத்தையும் ஸ்தோத்திரம் செய்கின்றார்.

## நெற்றி வர்ணனை

शृङ्गारादिरसालयं त्रिभुवनीमाल्यैरतुल्यैर्युतं
सर्वाङ्गीणसदङ्गरागसुरभिश्रीमद्वपुर्धपितम् ।
ताम्बूलारुणपल्लवाधरयुतं रम्यं त्रिपुण्ड्रं दध-
द्भालं नन्दनचन्दनेन जननि ध्यायामि ते मङ्गलम् ॥४० ॥

**ச்ருங்காராதி-ரஸாலயம் தரிபுவனீ-மால்யை-ரதுல்யைா-யுதம்**
**ஸர்வாங்கீண-ஸதங்கராக-ஸுரபி-ஸ்ரீமத்வபர்-தீபிதம் ।**
**தாம்பூலாருண-பல்லவாதர-யுதம் ரம்யம் திரிபுண்ட்ரம் ததத் -**
**பாலம் நந்தனசந்தனேன ஜனனி த்யாயாமி தே மங்கலம் ॥ 40 ॥**

**(பதவுரை)** (**ஜனனி**) = உலகீன்ற அன்னையே!; (**ச்ருங்காராதி-ரஸாலயம்**) = சிருங்காரம் முதலிய ரஸங்களுக்கு உறைவிடமாவதும்; (**அதுல்யை; த்ரிபுவனீ-மால்யை: யுதம்**) = நிகரற்ற மூவுலகத்துப் பூமாலைகளால் அலங்கரிக்கப் பெற்றதும்; (**ஸர்வாங்தீண-**) = எல்லா அங்கங்களிலும்; (**ஸதங்க-ராக-**) = நல்ல சந்தனக் கலவையின்; (**ஸுர-**) = வாஸனையுடன்; (**ஸ்ரீமத்-வபுர்தீபிதம்**) = சிறந்து விளங்குவதும்; (**தாம்பூல-**) = தாம்பூலத்தால்; (**அருண-**) = சிவந்த; (**பல்லவ-அதர-யுதம்**) = இதழ் போன்ற உதடுகளுடன் கூடியதும்; (**நந்தன சந்தனேன**) = மகிழ்விக்கும் சந்தனத்தால்; (**ரம்யம்**) = அழகாக; (**த்ரிபுண்ட்ரம்**) = மூன்று கோடு; (**ததத்**) = இடப்பெற்ற; (**தே**) = உம்முடைய; (**மங்கலம்**) = மங்களத்தை அளிக்கும்; (**பாலம்**) = நெற்றியை; (**த்யாயாமி**) = தியானிக்கின்றேன்.

**சிருங்காரம் முதலிய ரஸங்கள்** - சிவனிடத்தில் சிருங்கார ரஸம், மற்றவர்களிடத்தில் அருவருப்பு, கங்காதேவியிடம் கோபம், சிவனுடைய லீலைகளில் வியப்பு, பாம்புகளிடம் பயம், தோழிகளிடம் ஹாஸ்யம், பக்தர்களிடம் கருணை. ஒப்பிடுக: ஸௌ. லஹரி 50

**(தாத்பரியம்)** ஹே ஜகன்மாதாவே! சிருங்காரம் முதலிய நவரஸங்களுக்கும் வாஸ்ஸ்தானமாயும், மூன்று லோகங்களிலுமுள்ள நிகரற்ற புஷ்பமாலைகளோடு கூடி விளங்குவதும், சந்தனக்கலவைப் பூச்சினால் எல்லா அங்கங்களிலும் வியாபித்துள்ள வாஸனையோடு கூடியதும், தாம்பூலத்தினால் சிவந்த இரண்டு அதர பல்லவங்களையுடையதும், அழகாயும் மனோஹரமாயுமுள்ள திரிபுண்ட்ரம் (விபூதி ரேகைகள்) சந்தன திலகம் இவற்றோடு விளங்கும் நெற்றியோடு கூடியதுமான உமது மங்கள சரீரமாகும் ஸ்தூலரூபத்தைத் தியானம் செய்கின்றேன்.

**(விசேஷவுரை)** त्रिभुवनानि (**த்ரிபு[4]வநாநி**) ஸ்வர்க்கம், மர்த்தியம், பாதாள மென்பனவாகும். இம்முன்று லோகங்களிலும் உண்டாகும் புஷ்பங்களால் மாலைகளைத் தொடுத்துத் தேவ, மனுஷ்ய, அஸுரர்களால் பூஜிக்கப்பட்ட விஷயம் இதனால் தொனிக்கின்றது.

இதனால் பரதேவதையின் ஸ்தூல சரீரமும், **ஸ்ருங்கா[3]ராதி[3]** என்பதனாலும் **ரஸாலயம்** என்பதனாலும், முறையே, மனோமய பிராணமயகோசங்களின் வடிவம் ஸூக்ஷ்ம சரீரமும் குறிப்பிடப்படுவது அறியத்தக்கது.

**நவவித்[3]ருமபி[4]ம்ப[3]ஸ்ரீந்யக்காரித[3]ஸ்னச்ச[2]தா[3]** என்னும் ஸஹஸ்ர நாமப் பிரமாணம் பரதேவதையின் அதரங்களின் அருணம் நிறத்தை வலிவுறுத்துகின்றது. (40)

**(அவதாரிகை)** இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷி பரதேவதையின் கூந்தலை வர்ணிக்கின்றனர்.

## பின்னிய கூந்தலழகு

**जातीचम्पककुन्दकेसरमहागन्धोद्गिरत्केतकी**
**नीपाशोकशिरीषमुख्यकुसुमैः प्रोसिता धूपिता ।**
**आनीलाञ्जनतुल्यमत्तमधुपश्रेणीव वेणी तव**
**श्रीमातः श्रयता मदीयहृदयाम्भोजं सरोजालये ॥४१ ॥**

**ஜாதீ-சம்பக-குந்தகேஸர-மஹாகந்தோத்கிரத்-கேதகீ-**
**நீபாசோக-சிரீஷ.முக்க்ய-குஸுமை: ப்ரோத்தம் ஸிதா தூபிதா ।**
**ஆநீலாஞ்ஜன-துல்ய-மத்த-மதுப-ச்ரேணீவ வேணீ தவ**
**ஸ்ரீமாத: ச்ரயதாம் மதீய ஹ்ருதயாம்போஜம் ஸரோஜாலயே ॥ 41 ॥**

**(பதவுரை)** (**ஸரோஜாலயே ஸ்ரீமாத:**) = ஆயிர இதழ்க்கமலத்தை இருப்பிடமாயுடைய தாயே!; (**ஜாதீ-சம்பக குந்த-**) = ஜாதீ, சம்பகம், முல்லை; (**கேஸர- மஹாதந்த-உத்திரத்-கேதகீ-**) = மகரந்தப் பொடியுடன் கூடி மிகுந்த வாசனை கமழும் தாழ்ம்பூ; (**நீப-அசோக-சிரீஷ-முக்க்ய**) = கடம்பு, அசோகம், வாகை முதலிய; (**குஸுமை:**) = மலர்களால்; (**ப்ரோத்தம்ஸிதா**) = நன்கு அலங்கரிக்கப் பெற்றதும்; (**தூபிதா**) = தூபத்தால் வாசனை கூட்டப்பெற்றதும்; (**ஆநீல-அஞ்ஜன-துல்ய**) = மிகக்கறுத்துமை போன்ற; (**மத்த-மதுப-ச்ரேணீஇவ**) = மதங்கொண்ட வண்டுகளின் வரிசை போல் இலங்குவதுமான; (**தவ**) = உம்முடைய; (**வேணி**) = பின்னிய கூந்தல்; (**மதீய**) = என்னுடைய; (**ஹ்ருதய-அம்போஜம்**) = இருதய கமலத்தில்; (**ச்ரயதாம்**) = விளங்கிக் கொண்டிருக்கட்டும்.

ஓ. சம்பகாசோக-புந்நாக-ஸௌகந்திக-லஸத்-கசா ||

- லலிதா ஸஹஸ்ரநாமம்.

**(தாத்பரியம்)** ஸ்ஹஸ்ரதள கமலத்தை யிருப்பிடமாகவுடைய ஓ ஸ்ரீ மாதாவே! ஜாதீ, சம்பகம், முல்லை, வாசனை மிகுந்த மகரந்தப்பொடியோடு கூடிய தாழை, கடம்பு, அசோகம், வாகை முதலிய சிறந்த புஷ்பங்களாலலங்கரிக் கப்பட்டதும், (அகரு, தசாங்கம் முதலியவற்றின்) தூபத்தால் வாஸனை கட்டப்பட்டதும், அதிக கறுப்பான மை போன்ற மதங்கொண்ட வண்டுகளின் வரிசையைப்போல் இலங்கும் உமது பின்னிய கூந்தலானது எனது **ஹ்ருதய கமலத்தில் நன்கு விளங்கிக் கொண்டிருக்கட்டும்**. (41)

**(அவதாரிகை)** இதில் பரதேவதையின் சிரஸ் ஸ்துதிக்கப்படுகின்றது.

## கிரீடத் தியானம்

**लेखालभ्यविचित्ररत्नघटितं हैमं किरीटोत्तम**
**मुक्ताकाश्चनकिङ्किणीगणमहाहीरप्रबद्धोज्ज्वलम् ।**
**बचच्चन्द्रकलाकलापमहितं देवलुपुष्पांचितै**
**माल्यैरम्ब विलम्बितं सशिखरं विच्छिरस्ते भजे ॥४२ ॥**

**லேகாலப்ப்ய-விசித்ர-ரத்ன-கடிதம் ஹைமம் கிரீடோத்தமம்**
**முக்தா-காஞ்சன-கிங்கிணீ-கண-மஹா-ஹீர-ப்ரபத்தோஜ்ஜ்வலம் ।**
**சஞ்சச்சந்த்ரகலா-கலாப-மஹிதம் தேவத்ருபுஷ்பாசிதைர்**
**மால்யைரம்ப விலம்பிதம் ஸசிகரம் பிப்ரச்சிரஸ்தே பஜே || 42 ||**

**(பதவுரை)** (அம்ப) அம்மா!; (**லேகாலாய**-) = வரிசையாக இழைக்கப் பெற்ற; (**விசித்ர**-) = பலவிதமான; (**ரத்ன-கடிதம்**) = இரத்தினங்களுடன் கூடியதும்; (**முக்தா**-) = முத்து; (**காஞ்சன-கிங்கிணீ-கண**-) = தங்கச்சலங்கைகளின் கோர்வை; (**மஹா-ஹீர-)** சிறந்த வயிரம்; (**ப்ரபத்த-உஜ்ஜ்வலம்**) = முதலியவற்றுடன் கூடி ஒளி வீசுவதும்; (**சஞ்சத்**) = அசையும்; (**சந்த்ரகலா**) = சந்திரகலை என்னும்; (**கலாபமஹிதம்**) = பூஷணத்தால் அலங்கரிக்கப் பெற்றதும்; (**தேவத்ரு-புஷ்பாசிதை**:) = கற்பகம் முதலிய தேவதருக்களின் புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட; (**மால்யை**:) = மாலைகளால்; (**விலம்பிதம்**) = சுற்றிலும் தொங்கவிடப் பெற்றதுமான; (**ஸசிகரம் பிப்ரத்**) = கிரீடத்தையணிந்துள்ள; (**தே**) = உமது; (**சிர**:) = சிரஸை; (**பஜே**) = தியானம் செய்கிறேன்.

**(தாத்பரியம்)** ஹே அம்பிகையே! மிகவும் நெருக்கமாகப் பதிக்கப்பட்ட நவரத்தினங்களோடு கூடியதும், நல்லமுத்துக்கள், தங்கச் சலங்கைகள், நீரோட்டம் பெற்ற சிறந்த வைரங்கள் இவற்றால் சுற்றிலும் கட்டப்பட்டு விளங்குவதும், பிரகாசிக்கின்ற சந்திரகலை யென்னும் பூஷணத்தால் விளங்குவதும், மந்தாரம், பாரிஜாதம் முதலிய தேவ குஸுமங்களால் தொடுக்கப்பட்ட புஷ்ப மாலைகள் சுற்றிலும் தொங்கவிடப்பட்டதும், சிகரத்தோடு கூடியதுமான ஸ்வர்ண கிரீடத்தை யுடைய உமது சிரஸ்ஸைத்தியானம் செய்கிறேன். (42)

**(அவதாரிகை)** இந்த ச்லோகத்தில் பரதேவதையின் சத்திரம் சாமரம் முதலிய பிருதுகள் வர்ணிக்கப்படுகின்றன.

### பரிஜனங்களின் சேவை

**उत्क्षिप्तोचसुवर्णदण्डकलितं पूर्णेन्दुबिम्बाकृति**
**च्छत्रं मौक्तिकचित्ररत्नखचितं क्षौमांशुकोसितम् ।**
**मुक्ताजालविलम्बितं सकलशं नानाप्रसूनाचितं**
**चन्द्रोड्डामरचामराणि दधते श्रीदेवि ते स्वस्त्रियः ॥४३ ॥**

**உத்க்ஷிப்தோச்ச்ஸுவர்ண-தண்ட-கலிதம் பூர்ணேந்து-பிம்பாக்ருதி**
**ச்சத்ரம் மௌக்திக-சித்ரரத்னகசிதம் க்ஷௌமாம்சு-கோத்தம்ஸிதம் ।**
**முக்தாஜால-விலம்பிதம் ஸகலசம் நானாப்ரஸூனார்ச்சிதம்**
**சந்த்ரோட்டாமர-சாமராணி தததே ஸ்ரீதேவி தே ஸ்வஸ்த்ரிய: ॥ 43 ॥**

**(பதவுரை) (ஸ்ரீதேவி)** = ஸ்ரீதேவியே!; (**உத்க்ஷிப்த-**) = உயரத் தூக்கப் பெற்ற; (**உச்சஸுவர்ண-தண்டகலிதம்**) = நீண்ட தங்கத் தண்டுடன் கூடியதும்; (**பூர்ணேந்து-பம்பரக்ருதி**) = பூர்ணசந்திரபிம்ப வடிவுடையதும்; (**மௌக்திக-சித்ரரத்ன கசிதம்**) = முத்துக்களாலும் பலவித ரத்னங்களாலும் அலங்கரிக்கப் பெற்றதும்; (**க்ஷௌமாம்சுக-உத்தப்ஸிதம்**) = வெண்பட்டால் ஆக்கப்பட்டதும்; (**முக்தாஜால-விலம்பிதம்**) = முத்து ஸரங்கள் தொங்கவிடப் பெற்றதும்; (**ஸகலசம்**) = கலசத்துடன் கூடியதும்; (**நானாப்ரஸூனார்ச்சிதம்**) = பலவகைப் புஷ்பங்களால் அலங்கரிக்கப் பெற்றதுமான; (**ச்சத்ரம்**) = குடையையும்; (**சந்த்ரோட்டாமர சாமராணி**) = நிலவு போல் வெண்மையானதும் உயரத் தூக்கப் பெற்றதுமான சாமரங்களையும்; (**ஸ்வஸ்த்ரிய:**) = உமது ஸ்திரீகள்; (**தே**) = உமக்கு; (**தததே**) = பிடிக்கின்றனர்.

**(தாத்பரியம்)** ஸ்ரீ தேவியே! உயரத்தூக்கப்பட்டதும், நீளமானதுமான தங்கக் காம்போடு கூடியதும், பூர்ண சந்திர பிம்பத்தைப்போல் ஆக்ருதியையுடையதும்,

நல்லமுத்துக்களும் நானாவித ரத்தினங்களும் பதிக்கப்பட்டு அவற்றால் பிரகாசிக்கின்றதும், வெண்பட்டால் ஆக்கப்பட்டதும், நல்ல முத்துச்சரங்கள் சுற்றிலும் தொங்கவிடப்பட்டதும், மேல் பாகத்தில் கலசத்துடன் கூடினதும், நாநாவித புஷ்பங்களால் அர்ச்சிக்கப்பட்டதுமான குடையையும், சந்திரிகையைப்போன்று வெண்மையாய் விளங்கும் சாமரங்களையும், ஸ்ரீ நகரத்து உமது தோழிகள் உமக்குப்பிடிக்கின்றனர்.

**(அவதாரிகை)** இந்த ச்லோகத்தில் பரதேவதை ஆவரண தேவதைகளோடு ஸ்ரீ சக்கிரேச்வரியாய்த் துதிக்கப்படுகின்றனள்.

## ஆவரண தேவதைகள்

**विद्यामन्त्ररहस्यविन्मुनिगणैः कॢप्तोपचारार्चनां**
**वेदादिस्तुतिगीयमानचरितां वेदान्ततत्त्वात्मिकाम् ।**
**सर्वास्ताः खलु तुर्यतामुपगतास्त्वद्रश्मिदेव्यः परा-**
**स्त्वां नित्यं समुपासते स्वविभवैः श्रीचक्रनाथे शिवे ॥४४ ॥**

**வித்யா-மந்திர ரஹஸ்யவின்-முனிகணை: க்லுப்தோபசா ரார்ச்சனாம்**
**வேதாதி-ஸ்துதி-கீயமான-சரிதாம் வேதாந்த-தத்வாத்மிகாம் ।**
**ஸர்வாஸ்தா: கலு துரியதா-முபகதாஸ்-தவத்ரச்மி தேவ்ய: பராஸ்-**
**த்வாம் நித்யம் ஸமுபாஸதே ஸவிபவை: ஸ்ரீசக்ர-நாதே சிவே ॥ 44 ॥**

**(பதவுரை)** (**சிவே**) = மங்கள வடிவினளே!; (**ஸ்ரீசக்ரநாதே**) = ஸ்ரீசக்ர நாயகியே!; (**வித்யா-மந்த்ர-ரஹஸ்யவித்**) = ஸ்ரீவித்யா மந்திரத்தின் ரகசியங்களை அறிந்த; (**முனிகணை:-**) = முனிவர் கூட்டங்களால்; (**க்லுப்த-உபசார-அர்ச்சனாம்**) = முறைப்படி செய்யப்பட்ட உபசாரம் அர்ச்சனை முதலியவற்றுடன் கூடியவளும்; (**வேதாதி-ஸ்துதி-தீயமான-**) = வேதங்கள் முதலியவற்றால் துதித்துப் போற்றப்பட்ட; (**சரிதாம்**) = சரித்திரமுடையவளும்; (**வேதாந்த-தத்வாத்மிகாம்**) = வேதாந்தத்தின் உட்பொருளாகியவளும் ஆகிய; (**த்வாம்**) = உம்மை; (**த்வத்ரச்மி-தேவ்ய: பரா:**) = உமது கிரணங்களாகிற சிறந்த தேவிகள்; (**துர்யதாம் உபாதா:**) = துரீய நிலையில் நிற்பவர்களாய்; (**ஸர்வா: தா: கலு**) = அவர்கள் எல்லோருமே; (**நித்யம்**) = எப்பொழுதும்; (**ஸவிபவை:**) = எல்லா வைபவங்களுடனும்; (**ஸமுபாஸதே**) = நன்கு உபாஸிக்கிறார்கள்.

**(தாத்பரியம்)** ஸ்ரீ சக்கிரத்திற்கு நாயிகையாய் விளங்கும் ஓ சிவையே! ஸ்ரீ வித்தையின் ரஹஸ்யங்களை நன்கறிந்த உபாஸங்கங்களால் சாஸ்திரோக்தமாய்ச் செய்யப்பட்ட ஆராதனைகளோடும், உபசாரங்களோடும் கூடினவளும், வேதங்கள், புராணங்கள், தந்திரங்கள், வேதாந்தம் முதலியவற்றால் புகழப்பட்ட

மஹிமையுடையவளும், வேதாந்தத்தின் பரமதத்துவமாயிருப்பவளும், ஸ்ரீ சக்கிரத்திற்கு அதிஷ்டாத்ரியாயிருப்பவளுமாகிய உம்மை, உமது கிரணங்களாய் விளங்கும். சிறந்த ஆவரண தேவதைகளெல்லாம் துரீயபாவத்தோடு உம்மை ஸ்வகீய விபவங்களோடு ஸதா உபாஸிக்கின்றனர்.

**(விசேஷவுரை)** ஸ்ரீ சக்கிரமானது பிந்து, திரிகோணம், அஷ்டகோணம், அந்தர்த்தசாரம், பார்த்தசாரம் மந்வஸ்ரம், (த்ரிவலயங்கள்) அஷ்டதளம், ஷோடசதளம், பூபுரத்திரயம் என்பவற்றோடு விளங்குவதாகும். இந்த சக்கிரத்தில் பிந்துஸ்தானத்தில் **பரப்பிரஹ்மஸ்வரூபிணியாகும் பரதேவதை** அதிஷ்டித்து விளங்குகின்றனள். இந்த பரதேவதையின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் மந்த்ரத்திற்கு **ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ** வித்தையென்று பெயர். இந்த வித்தையை ஸத்குரு மூலமாய்ப் பெற்று அதன் ரஹஸ்யார்த்தத்தைக் தெரிந்து கொண்ட பின்னரே ஸ்ரீ சக்கிரத்தைப் பூஜித்தல் வேண்டும்.

திரிகோணம் முதல் பூபுரம் வரையில், பரதேவதையின் சரணாரவிந்தப் பிரகாசத்தின் கிரணங்களெனச் சாஸ்திரங்கள் கூறும் ஆவரண தேவதைகள் விளங்கிக் கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு சக்கிரத்திலும், அதாவது பூபுரம், ஷோடசதள அஷ்டதள கமலங்கள், மந்வஸ்ரம் (14 கோணங்கள்), பஹிர்த்தசாரம், அந்தர்த்தசாரம், அஷ்டகோணம், திரிகோணம் என்னும் ஒன்பது சக்கிரங்களிலும் விளங்கும் கிரணவடிவ ஆவரண தேவதைகளைப் பூஜித்து, அக்கிரணங்களுக்கு மூலபூதமான மஹாப்பிரகாச விமர்ஶ ஸாமரஸ்ய துரீய தத்துவமான பரதேவதையை அபேத பாவனையோடு அர்ச்சித்தல் வேண்டுமென்பது பரமரஹஸ்யமாகும். இந்த ரஹஸ்யத்தையறிந்தவர்களே உபாஸக சிரேஷ்டர்கள். இவர்கள் ஸதாகாலமும் இடை விடாது பக்தி சிரத்தைகளோடு அம்பாளை ஆந்தர (மானஶிக)மாகவோ, பாஹ்யமாகவோ பூஜோபசாரங்களைச் செய்து உபாஸித்து வருவார்கள். அம்பாளுக்குச் செய்யும் உபசாரங்கள் அறுபத்தினான்கெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவற்றுள் பஞ்சோபசாரங்கள் சிறந்தவையாகும்.

**समुपासते स्वविभवौः** = ஸ்வஸ்வரூபமாகும் ஆத்ம பிரஹ்மைக்கியானுஸந்தான அகண்டாகாரவ்ருத்தியால் உபாஶிப்பதே மேலான உபாஸனையாகுமென்பது ரஹஸ்யமாகும். (44)

**(அவதாரிகை)** ஸ்ரீ பரதேவதோபாஸ்தியின் மஹிமை கூறப்படுகின்றது.

## உபாஸகர்களின் சிறப்பு

**एवं यः स्मरति प्रबुद्धसुमतिः श्रीमत्वरूपं परं**
**वृद्धोऽप्याशु युवा भवत्यनुपमः स्त्रीणामनगायते ।**
**सोऽष्टैश्वर्यतिरस्कृताखिलसुरश्रीजृम्भणैकालयः**
**पृथ्वीपालकिरीटकोटिवलभीपुष्पार्चिताङ्घिर्भवेत् ॥ ४५ ॥**

**ஏவம் ய: ஸ்மரதி ப்ரபுத்தஸுமதி: ஸ்ரீமத்ஸ்வரூபம் பரம்**
**வருத்தோऽப்யாசு யுவா பவத்யனுபம: ஸத்ரீணா-மனங்காயதே ।**
**ஸோऽஷ்டைச்வர்ய-திரஸ்க்ருதாகில-ஸுரஸ்ரீ-ஜ்ரும்பணை காலய:**
**ப்ருத்வீபாலகிரீட-கோடி-வலபீ-புஷ்பார்ச்சிதாங்க்ரிர்-பவேத் ॥ 45 ॥**

**(பதவுரை)** (**ஏவம்**) = இவ்வாறு; (**ய:**) = எவன்; (**ப்ரபுத்தஸுமதி:**) = விழிப்படைந்த நல்லபுத்தியுடன் கூடியவனாய்; (**ஸ்ரீமத் ஸ்வரூபம் பரம்**) = பரதேவதையின் மங்கள ஸ்வரூபத்தை; (**ஸ்மரதி**) = தியானிக்கிறானோ; (**ஸ:**) = அவன்; (**வ்ருத்த: அபி**) = வயதானவனாயிருந்தாலும்; (**ஆசு**) = விரைவில்; (**யுவா**) = யௌவனமுடையவனாக; (**பவதி**) = ஆகிறான்; (**ஸ்த்ரீணாம்**) = ஸ்திரீகளுக்கு; (**அனங்காயதே**) = மன்மதனைப்போல் காணப்படுவான்; (**அஷ்டைச்வர்ய-திரஸ்க்ருத-**) = அஷ்டைசுவரியங்களுக்கும் மேம்பட்ட; (**அகிலஸுரஸ்ரீ-ஜ்ரும்பண-ஏகாலய:**) = தேவர்களனைவருடைய செல்வத்திற்கும் சிறந்த உறைவிடமாயும்; (**ப்ருத்வீபால-**) = பூமியாளும் அரசர்களின்; (**கிரீடகோடி-வலபீ**) = கிரீடங்களின் உச்சியிலுள்ள; (**புஷ்பார்ச்சித-**) = புஷ்பங்களால் அர்ச்சிக்கப் பெற்ற; (**அங்க் :**) = பாதங்களை உடையவனாயும்; (**பவேத்**) = விளங்குவான்.

**(தாத்பரியம்)** இங்ஙனம் முற்கூறியபடி ஞானமயமான பரதேவதையின் ஸ்வரூபத்தை, உபாஸனா பலத்தால் துரீயாவஸ்தையில் விழிப்படைந்த அகண்ட ஞானத்தோடு கூடிய எந்த சிறந்த உபாஸகன் தியானம் செய்கின்றானோ அவன், வார்த்தக்கிய அவஸ்தையோடு அதாவது முதுமைப் பருவத்தோடு கூடியவனா யிருந்தாலும் சீக்கிரத்தில் யௌவனாவஸ்தையோடு விளங்குபவனாகின்றனன். யௌவனத்தினால் ஏற்படும் ஒப்பற்ற சோபை அவனிடம் விளங்குகின்றது. அதனால் அவன் யௌவனத்தினால் கர்வமடைந்த யுவதிகளுக்கு அதிஸௌந்தரியமுள்ள மன்மதஸ்வரூபமாகக் காணப்படுகின்றனன்; அன்றியும் ஸ்ரீ தேவியின் அநுக்கிரஹத்தால் ஏற்பட்ட அஷ்டைஸ்வரியங்களால் ஸகல தேவர்களையும் வென்று, மகிமை பொருந்திய ஸ்ரீயின் அபிவ்ருத்திக்கு ஒரு வாஸஸ்தானமாகவும் விளங்குவான்; அரசர்களின் கிரீடங்களின் அக்ரபாகத்தில் அலங்கரிக்கப்பட்ட புஷ்பங்களால் பூஜிக்கப்படும் பாதங்களையுடையவனாகவும் ஆகிவிடுகின்றான். என்றால், அரசர்கள் அவனை வணங்குகின்றனர் என்பது பொருள்.

**(விசேஷவுரை)** பரதேவதையின் உபாஸ்தியால், மண்ணுலகும் விண்ணுலகும் உபாஸகனுக்கு ஸ்வாதீன மாகின்றன. இதனால் தர்மம், அர்த்தம், காமம் என்னும் திரிவர்க்கங்களின் அடைவும், அபவர்க்கமாகும் மோக்ஷத்தின் அடைவும் ஸித்திக்கின்றனவென்று ஏற்பட்டது. அம்பாளை நன்கு உபாஸிப்பவர்களுக்கு போக மோக்ஷங்கள் இரண்டும் கரஸ்தமாயிருக்கின்றன வென்பது,

**यत्रास्ति भोगो न च तत्र मोक्षो यत्रास्ति मोक्षो न च तत्र भोगः ।**
**श्रीसुन्दरीसाधकपुंगवानां भोगश्च मोक्षश्च करस्थ एव ॥**

என்னும் பிரமாணத்தால் ஸித்திப்பது அறியத்தக்கது. (45)

**(அவதாரிகை)** ஸ்ரீமத் பரதேவதையின் ஆயுதங்களில் ஒன்றான **கோதண்டத்**தின் தியானமானது இந்த ஶ்லோகத்தில் ஸ்துதிக்கப்படுகின்றது.

## கரும்பு வில்

**अथ तव धनुः पुण्ड्रेक्षुत्वात्प्रसिद्धमतिद्युति**
**त्रिभुवनवधूमुखज्ज्योत्स्नाकलानिधिमण्डलम् ।**
**सकलजननि स्मारं सारं गतः स्मरतां नर.**
**त्रिभुवनवधूमोहाम्भोधेः प्रपूर्णविधुर्भवेत् ॥ ४६ ॥**

**அத தவ தனு: புண்ட்ரேக்ஷத்வாத் ப்ரஸித்தமதித்யுதி**
**த்ரி வனவதூ-முத்யஜ்ஜ்யோதஸ்னாகலாநிதி-மண்டலம் ।**
**ஸகல-ஜனனி ஸ்மாரம் ஸ்மாரம் கத: ஸ்மரதாம் நரஸ்-**
**த்ரிபுவனவதூ-மோஹாம்போதே: ப்ரபூர்ணவிதுர்-பவேத் ॥ 46 ॥**

**(பதவுரை)** (**ஸகலஜனனி**) = அனைத்துலகிற்கும் தாயே!; (**அத**) = (**த்ரிபுவனவதும் அதித்யுதி**) = மூன்று உலகங்களின் பெண்ணழகினும் அதிகமான வனப்புடையதும்; (**உதயத்-ஜ்யோத்ஸ்னா-கலாநிதி-மண்டலம்**) உதிக்கும் சந்திரனுடைய ஒளிக்கலைக்கு இருப்பிடமாய் விளங்குவதும்; (**தவ**) = உம்முடைய; (**புண்ட்ரேக்ஷத்வாத் ப்ரஸித்தம்**) = நாமக்கரும்பெனப் பிரசித்தமான; (**தனு:**) = வில். (**ஸ்மாரம் ஸ்மாரம்**) = அதை இடைவிடாது தியானம் செய்து; (**நர:**) = மனிதன்; (**ஸ்மரதாம் கத:**) = மன்மதனைப் போன்ற அழகுடையவனாகி; (**த்ரிபுவனவது-மோஹ-அம்போதே:**) = மூன்று உலகங்களின் பெண் வர்க்கத்தின் மோகக்கடலுக்கு; (**ப்ரபூர்ண-விது:**) = பூர்ண சந்திரனாக; (**பவேத்**) = ஆகிவிடுவான்.

**(தாத்பரியம்)** ஸகல புவனங்களுக்கும் தாயே! முவ்வுலகங்களிலுமுள்ள ஸ்திரீகளின் விரஹத்தின் உத்பாதகமாகும் மிக்க பிரகாசத்தையுடைய காந்தியோடு கூடிய சந்திரமண்டலம் போன்றதும், நாமக்கரும்பினால் அமைக்கப்பட்டதுமான உமது கையில் விளங்கும் கோதண்டத்தை (வில்லை) இடைவிடாமல் தியானம் செய்த காரணத்தால் மன்மதனாகவே விளங்கும் உபாஸகன், முவ்வுலகத்தின் யுவதிகளின் மோகக் கடலுக்குப் பூர்ண சந்திரனாகவும் விளங்குகின்றனன்; என்றால் சந்திரனைக் கண்ட கடல் அலைகளின் பெருக்கால் கொந்தளிப்பது போல், பரதேவதையின் ஆயுதமான கரும்பு வில்லைத் தியானம் செய்து பேரழகைப் பெற்று உபாஸகனைக் கண்டமாத்திரதில் முவ்வுலகங்களிலுமுள்ள யௌவனஸ்திரீகள் மோஹமடைகின்றனர்.

**(விசேஷவுரை)** முவ்வுலகம் - தெய்வ லோகம், மநுஷ்ய லோகம், நாகலோகம்.

: இக்ஷு கோதண்டமே மனமாம். அதன் தியானமாவது மனத்தின் இயல்பை நன்கு ஆலோசிப்பதாகும். இவ்வித ஆலோசனையாகும் விசாரத்தினால் மனத்தின் உண்மையானஸ்வரூபம் வெளிப்பட்டு அது வசப்படுகின்றது. மனம் வசப்பட்டால் அதனால் கற்பிக்கப்பட்ட ஸகலவுலகங்களும் அவற்றால் ஏற்படும் போகங்களும் துச்சமாய்ப் புலப்படுங் காரணத்தால் அவையாவும் ஸ்வாதீன மனத்தனுக்கு அடங்கி தாஸபாவ மெய்துகின்றன. (46)

**(அவதாரிகை)** இந்த ஶ்லோகத்தில் புஷ்பபாணங்களின் தியானத்தின் பயன் வர்ணிக்கப்படுகின்றது.

### புஷ்ப பாணங்கள்

**प्रसूनशरपञ्चकप्रकटजृम्भणागुम्भितं**
**त्रिलोकमवलोकयत्यमलचेतसाऽचञ्चलम् ।**
**अशेषतरुणीजनस्मरविजृम्भणे यः सदा**
**पटुर्भवति ते शिवे त्रिजगदङ्गनाक्षोभणे ॥ ४७ ॥**

**ப்ரஸூந-சர-பஞ்சக-ப்ரகட ஜ்ரும்பணாகும்பிதம்**
**த்ரிலோக-மவலோகயத்-யமல-சேதஸாऽசஞ்சலம் ।**
**அசேஷ தருணீஜன-ஸ்மரவிஜ்ரும்பணே ய: ஸதா**
**படுர்-பவதி தே சிவே த்ரிஜகதங்கனாக்ஷோபணே ॥ 47 ॥**

**(பதவுரை)** (**சிவே**) = மங்கள வடிவினளே; (**ய:**) = எவன்; (**அமல-சேதஸா**) = பரிசுத்தமான மனதுடன்; (**த்ரிலோகம்**) = மூவுலகத்தையும்; (**தே**) = உமது; (**ப்ரஸூந-**

**சர-பஞ்சக**-) = ஐந்து புஷ்ப பாணங்களின்; (**ப்ரகட**-) = வெளிப்படையான; (**ஜ்ரும்பணா**) = விலாஸங்களால்; (**கும்பிதம்**) = நிறைந்ததாய்; (**அசஞ்சலம்**) = சஞ்சலமின்றி; (**அவலோகயதி**) = காண்கின்றானோ - அவன்; (**அசேஷ-தருணீ-ஜன**-) = எல்லாப் பருவப் பெண்களின்; (**ஸ்மர-விஜ்கும்புணே**) = காமத்தை மலரச் செய்வதிலும்; (**த்ரிஜத்-அங்கனா**-) = மூவுலக வடிவான பெண்ணையும்; (**க்ஷோபணே**.) = சலங்கச் செய்வதிலும்; (**படு**:) = திறமை உடையவனாக; (**பவதி**) = ஆகின்றான்.

**(தாத்பரியம்)** ஹே சிவே! எந்த உபாஸகன் சுத்தமான அந்தக்கரணத்தால் மூன்று உலகங்களையும் உமது பஞ்ச புஷ்பாணங்களின் வியக்தமான விகாஸங்களால் நிறைந்தாய்த் திடமாய்ப் பார்க்கின்றானோ, அந்த உபாஸக துரந் தான் எல்லா யுவதிகளின் காமத்தை விருத்தி செய்வதில் மாத்திரமேயன்றி முவ்வுலகமாகிய நாயகியின் மனத்தைக் கலக்கிக் கவறுவதில் எப்பொழுதும் ஸாமர்த்திய முடையவனாகின்றனன்.

**(விசேஷவுரை) பஞ்சதன்மாத்ரஸாயகா** = தன்மாத்திரைகளே பஞ்ச புஷ்பாணங்களாகும். தன்மாத்திரைகளே பஞ்ச பூதங்களின் அதிஸூக்ஷ்மரூபமாம். இவற்றின் விரிவே ஸர்வப் பிரபஞ்சமாகும். இவ்விஷயம்தான்

**प्रसूनशरपञ्चकप्रकटजृम्भणागुम्फितं त्रिलोकम् ।**

என்பதில் கூறப்பட்டுள்ளதாகும். ஸர்வப் பிரபஞ்சமும் பாஞ்சபௌதிகமே யென்று திடமாய் அறிந்தவனுக்கு ஸர்வலோகங்களும் வஶ்யமாகும். ஈண்டு உலகத்தை ஒரு ஸ்திரீயாக உருவகப்படுத்திருப்பது அறியத்தக்கது.

பஞ்சபுஷ்பங்களாவன: -

**कमलं कैरवं रक्तकल्हारेन्दीवरे तथा ।**
**सहकारमिति प्रोक्तं पुष्पपञ्चकमीश्वरि ।।**

என்று தந்த்ர ராஜமும்,

**अरविन्दमशोकं च चूतं च नवमल्लिका ।**
**इन्दीवरं च पञ्चैते पञ्चबाणस्य सायकाः ।।**

என்று நிகண்டுவும் கூறுகின்றன. தாமரை, அல்லி, செங்கழுநீர், கருங்குவளை, மா வென்றும் தாமரை, அசோகம், மா, மல்லிகை, கருங்குவளை யென்றும் மேற்கூறிய பிரமாணங்களால் ஏற்படுகின்றன. (47)

**(அவதாரிகை)** பரதேவதையின் ஆயுதங்களிலொன்றால் பாசத்தைச் சிந்திப்பதனாலேற்படும் பயன் இதில் கூறப்படுகின்றது.

**பாசம்**

**पाशं प्रपूरित-महा-सुमति-प्रकाशो**
**यो वा तव त्रिपुरसुन्दरि सुन्दरीणाम् ।**
**आकर्षणेऽखिलवशीकरणे प्रवीणं**
**चित्ते दधाति स जगत्रयवश्यकृत्स्यात् ॥ ४८ ॥**

**பாசம் ப்ரபூரித-மஹா-ஸுமதி-ப்ரகாசோ**
**யோ வா தவ த்ரிபுரஸுந்தரி ஸுந்தரீணாம் ।**
**ஆகர்ஷணேடகிலவசீகரணே ப்ரவீணம்**
**சித்தே ததாதி ஸ ஜகத்தரய-வச்யக்ருத் ஸ்யாத் ॥ 48 ॥**

**(பதவுரை)** (**த்ரிபுரஸுந்தரி**) = திரிபுரஸுந்தரியே!; (**ய: வா**) = எவனொருவன்; (**ப்ரபூரித-மஹா-ஸுமதி-ப்ரகாச:**) = பரிபூர்ணமான சிறந்த நல்ல புத்திப்பிரகாசத்தை உடையவனாய்; (**ஸுந்தரீணாம்**) = ஸ்திரீகளை; (**ஆகர்ஷணே**) = கவர்வதிலும்; (**அகிலவசீகரணே**) = அனைத்துலகத்தையும் வசப்படுத்துவதிலும்; (**ப்ரவீணம்**) = சக்தி வாய்ந்த; (**தவ**) = உம்முடைய; (**பாசம்**) = பாசத்தை; (**சித்தே**) = மனதில்; (**ததாதி**) = தியானம் செய்கிறானோ; (**ஸ:**) = அவன்; (**ஜகத்-த்ரய-வர்யக்குத்**) = மூவுலகத்தை யும் வசப்படுத்தக் கூடியவனாக; (**ஸ்யாத்**) = ஆவான்.

**(தாத்பரியம்)** ஒ திரிபுரசுந்தரீ தேவியே! எந்த உபாஸகன் தனது உபாஸனாபலத்தினால் மிகுந்த புத்தி விகாஸத்தை யடைந்தவனாகி ஸகல ஸுந்தரயுவதிகளை ஆகர்ஷிப்பதிலும், எல்லோரையும் வசமாக்குவதிலும் ஸாமர்த்திய முள்ள உமது பாசாயுதத்தை மனத்தில் தியானம் செய்கின்றனனோ, அந்த உபாஸக துரந்தரன் மூவ்வுலகங்களையும் தன்வசமாக்கும் திறமையுடையவனாவான்.

**(விசேஷவுரை)** பரதேவதையின் ஆயுதங்களிலொன்றான பாசத்தின் தத்துவா நுஸந்தானத்தின் பிரயோஜனம் ஶ்லோகத்தில் கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது. ஸர்வலோகவச்யமே பயனாகும். ஸகலத்தையும் தன் ஸ்வரூபத்தில் ஆகர்ஷித்துக் கொள்ளுதலே "வஶ்ய" பதத்தின் பொருளாகுமென்பது சாஸ்திரப் பிரஸித்தமாகும்.

அவித்யாபாசமானது ஆத்மஸ்வரூபத்தில் கற்பிதமாய்க் காணப்படுவன வற்றால் ஜீவனைப் பாஹ்யமாய் இழுத்து அஞ்ஞான வசமாக்குகின்றது; வித்தியா பாசமோ வெனின், பின்ன பின்னமாய்த் தோன்றுவனவற்றைப் பாஹ்யத்தினின்றும்

அந்தர்முகப்படுத்தி ஆத்மஸ்வரூப அவ்சேஷமாக்குகின்றது. பரதேவதையின் கையில் விளங்குவது **வித்தியாபாசமேயாகும்**. (48)

**(அவதாரிகை)** இதில் பரதேவதையின் **அங்குசத்** தியானத்தின் மகிமை வர்ணிக்கப்படுகின்றது.

### அங்குசம்

**यः स्वान्ते कलयति कोविदस्त्रिलोकी**
**स्तम्भारम्भणचणमत्युदारवीर्यम् ।**
**मातस्ते विजयनिजाङ्कुशं स योषा**
**देवान्स्तम्भयति च भूभुजोऽन्यसैन्यम् ॥ ४९ ॥**

**ய: ஸ்வாந்தே கலயதி கோவிதஸ்-த்ரிலோகீ**
**ஸ்தம்ப்பாரம்ப்பணசண-மத்யுதாரவீர்யம் ।**
**மாதஸ்தே விஜய-நிஜாங்குசம் ஸ யோஷா**
**தேவான் ஸ்தம்ப்பயதி ச பூபுஜோऽன்யஸைன்யம் ॥ 49 ॥**

**(பதவுரை)** (**மாத**:) = தாயே!; (**த்ரிலோகீ-ஸ்தம்ப்பா-ரம்ப்பணசணம்**) = மூவுலகத்தையும் அசையாமல் கட்டக்கூடிய திறமையுள்ளதும்; (**அதி-உதார-வீர்யம்**) = மிகச்சிறந்த வீரியம் படைத்ததும்; (**விஜய-நிஜ-அங்குசம்**) = வெற்றியுடன் விளங்குவதுமான உமது அங்குசத்தை; (**ஸ்வாந்தே**) = தனது உள்ளத்தில்; (**ய:**) = எவன்; (**கலயதி**) = தியானிக்கிறானோ; (**ஸ:**) = அந்த; (**கோவித:**) = பண்டிதன்; (**யோஷா**) = ஸ்திரீகளையும்; (**தேவான்**) = தேவர்களையும்; (**புஜ:**) = பூவுலகை ஆள்பவர்களையும்; (**அன்யஸைன்யஞ் ச**) = எதிரிசேனைகளையும்; (**ஸ்தம்ப்பயதி**) = அசையாமல் கட்டுப்படுத்தக் கூடியவனாவான்.

**(தாத்பரியம்) ஒ மா**தாவே! எந்த உபாஸகன் மூன்று லோகங்களையும் ஸ்தம்பிக்கச் செய்வதில் மிக்க ஸாமர்த்திய முடையதும், மிக்க பராக்கிரமமான விஜயத்தைத் தருவதுமான உமது ஆயுதமாகும் அங்குசத்தை மனதில் நன்கு தியானம் செய்கின்றானோ, அந்த பண்டிதன் தேவலோகத்து ஸ்திரீகளையும் தேவர்களையும் ஸ்தம்பிக்கும்படி செய்வதோடு, ராஜாக்களையும் சத்ருஸைன்யங் களையுங்கூட ஸ்தம்பிக்கச் செய்கின்றனன்.

**(விசேஷவுரை)** அங்குசத் தியானத்தின் பயன் ஸர்வஸ்தம்பனமாமென்பது இதன் திரண்ட பொருளாகும். (49)

**(அவதாரிகை)** இதில் வில், அம்பு, பாசம், அங்குசம் என்னும் பரதேவதையின் நான்கு ஆயுதங்களின் தியானத்தின் விசேஷ பலம் நிரூபிக்கப்படுகின்றது.

## ஆயுதங்களின் தியானத்தால் ஏற்படும் சித்திகள்

**चापध्यानवशाद्भवोद्भवमहामोहं महाजृम्भणं**
**प्रख्यातं प्रसवेषुचिन्तनवशात्तत्तच्छरव्यं सुधीः ।**
**पाशध्यानवशात्समस्तजगतां मृत्योर्वशत्वं महा**
**दुर्गस्तम्भमहाङ्कुशस्य मननान्मायाममेयां तरेत् ॥ ५० ॥**

**சாப-த்யான-வசாத்-பவோத்பவ-மஹாமோஹம் மஹாஜ்ரும்ப்பணம்**
**ப்ரக்க்யாதம் ப்ரஸவேஷுசிந்தன-வசாத் தத்தச்-சரவ்யம் ஸுதீ:** ।
**பாசத்த்யானவசாத் ஸமஸ்தஜகதாம் ம்ருத்யோர் வசத்வம் மஹா-**
**துர்க்கஸ்தம்ப்ப-மஹாங்குசஸ்ய மனனான்மாயா-மமேயாம் தரேத்** ॥ 50 ॥

**(பதவுரை)** (**ஸுதீ:**) = நல்ல புத்தி படைத்த ஸாதகன்; (**சாப-த்யான-வசாத்**) = கரும்பு வில்லை தியானம் செய்வதின் பயனாக; (**ப்ரக்க்யாதம்**) = பிரசித்தமானதும்; (**மஹாஜ்ரும்ப்பணம்**) = வெகு விரிந்து கொண்டே போவதும்; (**பவோத்பவ-மஹா மோஹம்**) = பிறவிச் சுழலைத் தோற்றுவிப்பதுமான பெரிய மதி மயக்கத்தையும்; (**ப்ரஸவ-இஷு**) = புஷ்பபாணங்களை; (**சிந்தன-வசாத்**) = தியானம் செய்வதின் பயனாக; (**தத்தத்**) = அந்தந்த; (**சரவ்யம்**) = பாணத்திற்குரிய தன்மாத்திரையையும்; (**பாசத்த்யான-வசாத்**) = பாசத்தை தியானம் செய்வதின் பயனாக; (**ஸமஸ்தஜகதாம்**) = உலகனைத்திற்கும் உள்ள; (**ம்ருத்யோர்வசத்வம்**) = மரணப் பீடையையும்; (**மஹாதுர்க்க-ஸ்தம்ப்ப**) = பெரிய பெரிய இடையூறுகளை அடக்கக்கூடிய; (**மஹாங்குசஸ்ய**) = மகிமை வாய்ந்த அங்குசத்தினுடைய; (**மனனாத்**) = தியானத்தினால்; (**அமேயாம்**) = அளவு கடந்த; (**மாயாம்**) = மாயையையும்; (**தரேத்**) = தாண்டி விடுவான்.

**(தாத்பரியம்)** ஹே பரதேவதே! சுத்த ஸத்துவப்பிரதான அந்தக்கரணத்தை யுடைய உமது உபாஸகன் உமது கோதண்டத்தைத் தியானம் செய்வதனால் ஜனன மரணமாகின்ற ஸம்ஸாரத்தை மிகவும் விருத்தி செய்யும் (கற்பனையால் தோன்றும்) **மஹா மோஹத்தை**யும் பஞ்ச புஷ்ப பாணங்களின் சிந்தனையால் அந்த அந்த பாணத்திற்கு லக்ஷ்யமான (பூத) **தன் மாத்திரை**களையும், பாசாயுதத்தைத் தியானம் செய்வதனால் எல்லாப்பிராணிகளுக்கும் ஸாதாரணமாய் ஏற்படக் கூடிய **மிருத்யுவுக்கு வசமாகுந் தன்மை**யையும், பெரிய பெரிய இடையூறுகளை யெல்லாம் போக்கும் மஹத்தாகிய அங்குசத்தின் மனனத்தினால் அமேயமான **மஹா மாயையையும்** தாண்டி விடுகின்றனன்.

**(விசேஷவுரை)** பரதேவதையின் ஆயுதங்களின் தத்துவ விசாரத்தினால் **அநர்த்த நிவர்த்தி** கூறப்பட்டுள்ளது கூர்ந்து உணரத்தக்கது. ஜீவர்களுக்கு ஏற்பட்ட அநர்த்த மாயை நான்கு வகையாயுள்ளது; அவை **மஹா மாயையாகு** முலாக்ஞானம்; அதனால் எற்பட்ட **மோஹம்**; அதனால் ஏற்பட்ட **அநித்திய சப்தாதி விஷயங்களில் நித்தியஸுக அத்தியாஸம்**, அதனால் ஏற்படும் **மரணமும்** மறுபடி **பிறத்தலும்** என்பனவாம். இவையாவும் பரதேவதையின் ஆயுதங்களின் பாரமார்த்திக தத்துவத்தை யுணர்தலால் நாசமாகின்றன; அநர்த்தங்கள் ஒழிந்தக்ஷணமே நித்தியாநந்த வடிவ மோக்ஷம் ஸ்வயம் பிரகாசமாய் விளங்குமென்பது சாஸ்திர ஶித்தாந்தமாம். (50)

**(அவதாரிகை)** அநர்த்த நிவர்த்திக்குப் பரமஸாதனமாகும் சரீராத்தியாஸ நிவர்த்தியைச் செய்யும் பரதேவதாதாதாத்மியவடிவ **நியாஸங்கள்** இந்த ஶ்லோகத்தில் ஸ்துதிக்கப்படுகின்றன.

## நியாஸங்கள்

**न्यासं कृत्वा गणेशग्रहभगणमहायोगिनीराशिपीठैः**
**षभिः श्रीमातृकाणैः सहितबहुकलैरष्टवाग्देवताभिः ।**
**सश्रीकण्ठादियुग्मैविमलनिजतनौ केशवाद्यैश्च तत्वैः**
**पदिशद्भिश्च तत्वैर्भगवति भवतीं यः स्मरेत्स त्वमेव।।५१ ।।**

**ந்யாஸம் க்ருதவா கணேச-க்ரஹ-பகண-மஹாயோகினி-ராசி-பீடை:**
**ஷட்ப்பி: ஸ்ரீமாத்ருகார்ணை: ஸஹித-பஹுகலை-ரஷ்டவாக்-தேவதாபி:** |
**ஸ ஸ்ரீகண்ட்டாதி-யுக்மைரி-விமலநிஜதநௌ கேசவாத்-யைச்ச தத்வை**
**ஷட்தரிம்சத்ப்பிச்ச தத்வைர்-பகவதி பவதீம் ய: ஸ்மரேத் ஸ த்வமேவ** ||51||

**(பதவுரை)** (**பகவதி**) = பகவதியே!; (**ய:**) = எவன்; (**கணேச-கரஹ-பகண-மஹாயோகினி-ராசி-பீடை, ஷட்பி:**) கணேச நியாஸம் க்ரஹ நியாஸம், நக்ஷத்திர நியாஸம், மஹாயோகினீ நியாஸம், ராசி நியாஸம், பீடநியாஸம் எனும் ஆறு வகையான; (**ந்யாஸம்**) = நியாஸங்களை; (**க்ருத்வா**) = செய்து; (**ஸ்ரீமாத்ரு கார்ணை:**) = மாத்ருகா அக்ஷரங்களாலான நியாஸங்களையும்; (**ஸஹித-பஹு-கலை: அஷ்டவாக்தேவதாரி:**) = மாத்ருகைகளோடு கூடிய கலா நியாஸங்களுடனும் எட்டு வாக்தேவதா நியாஸங்களுடனும்; (**ஸ்ரீகண்டாதியுக்மை:**) = இரண்டு ஸ்ரீகண்டாதி நியாஸங்களுடனும்; (**கேசவாத்யைச்ச தத்வை:**) = கேசவாதி தத்துவ நியாஸங்களுடனும்; (**ஷட்த்ரிம்சத்பிச்ச தத்வை:**) = முப்பத்தாறு தத்துவ நியாஸங்களுடனும்; (**பவதீம்**) = உம்மை; (**விமல நிஜதநௌ**) = தன்னுடைய பரிசுத்தமான தேகத்தில்; (**ஸ்மரேத்**) = **தியானிக்கின்றானோ**; (**ஸ:**) = அவன்; (**த்வம் ஏவ**) = நீயே.

**ஆறு நியாஸங்கள்** - 51 கணேசர், 9 கிரகங்கள், 27 நக்ஷத்திரங்கள், 7 யோகினிகள், 12 ராசிகள், 51 பீடங்கள் ஆகிய உறுப்புக்களைக் கொண்டது லகுஷோடா ந்யாஸம் எனப்படும்.

**மாத்ருகா நியாஸம்** -- ஐம்பது அக்ஷரங்களால் பஹிர் நியாஸமும் அந்தர் நியாஸமும்.

**வாக்தேவதா நியாஸம்** - ஐம்பது அக்ஷரங்களை எட்டுவர்க்கங்களாகப் பிரித்து நியாஸம்.

**கலா நியாஸம்** - 10 கலையுடன் கூடிய அக்னிமண்டலம், 12 கலையுடன் கூடிய ஆதித்ய மண்டலம், 16 கலையுடன் கூடிய ஸோம மண்டலம் ஆகியவற்றின் முப்பத்தெட்டுக் கலைகளோடு ஐம்பது மாத்ருகைகளைச் சேர்த்துச் செய்யும் நியாஸம்.

**தத்துவ நியாஸம்** - பிருதிவி முதல் முப்பத்தாறு தத்துவங்களால் செய்யும் நியாஸம்.

**ஸ்ரீகண்டாதி நியாஸங்கள்** - சிவநாமங்களால் மஹாநியாஸம் முதலியவற்றில் போலும் மஹாஷோடா நியாஸத்தில் போலும்.

**கேசவாதி நியாஸம்** - கேசவ, நாராயண என்று சொல்லி ஸந்தியா வந்தனத்தில் செய்வது போலும் மஹாஷோடா நியாஸத்தில் மூர்த்தி நியாஸத்தில் போலும்.

**விமலநிஜததௌ** - பூத சுத்தி ஆத்மப்ராணப் பிரதிஷ்டை முதலியவற்றால் பாப புருஷனை எரித்துச் சாம்பவ சரீரமாகச் செய்து கொண்ட தன்னிடம் மேற்கூறிய எல்லா நியாஸங்களையும் செய்ய வேண்டும். ஸ்ரீவித்யா பூஜாபத்ததியில் பூர்வாங்கத்தில் இந்த நியாஸங்களில் பலவற்றைச் செய்யும் முறையைக் காணலாம்.

**(தாத்பரியம்)** ஹே பகவதீ! எந்த உபாஸகன் **கணேச**, **கிரஹ**, **நக்ஷத்திர**, **யோகினீ**, **ராசி**, **பீடங்க**ளென்னும் ஆறு நியாஸங்களையும், பாஹ்யம் ஆந்தர மென்னும் **மாத்ருகா** நியாஸங்களையும், மாத்ருகைகளோடு கூடிய **வாக்தேவதா** நியாஸ **கலா** நியாஸங்களையும், **ஸ்ரீகண்டாதி** நியாஸம், **கேசவாதி** நியாஸம், **பூமியாதி** தத்துவ நியாஸம், முதலியவற்றைச் செய்து கொண்டு உனது ஸ்வரூபத்தைத் தனக்கபேதமாய்த்தியானம் செய்கின்றனனோ அவன் நீயாகவே நீயாகவே யாகின்றனன். அதாவது, உனது **ஸாயுஜ்ய பதவியாகிய மோக்ஷத்தை** யடைகின்றனன்.

(**விசேஷவுரை**) நியாஸம் என்னும் பதத்திற்கு விடுதல் அல்லது பொருத்துதல் என்று அர்த்தமாகின்றது. மயக்கவுணர்வை விட்டு மெய்யுணர்வைப் பெறுதலே நியாஸமாகும். பரதேவதா பூஜாபத்ததிகளில் பலவித நியாஸங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவையும் சிறந்தவையுமான நியாஸங்கள் இந்த ஶ்லோகத்தில் கூறப்பட்டுள்ளன. கணேஶாதி ஆறு நியாஸங்களுக்கு **ஷோடாநியாஸ** மென்று பெயர். பஹிர்மாத்ருகை அந்தர் மாத்ருகை யென்னும் இரண்டு நியாஸங்கள் மிகப்பிரஶித்தமானவை. அக்கினி மண்டலம், ஸூர்ய மண்டலம், சந்திர மண்டலம் ஆகிய மும்மண்டலங்களின் கலைகள் முப்பெத்தெட்டு. இம்முப்பத்தெட்டு கலைகளோடு ஐம்பது மாத்ருகை களைக் சேர்த்துச் செய்யும் நியாஸத்திற்குக் கலாநியாஸ மென்று பெயர்.

இவற்றோடு பிரிதிவியாதி சிவாந்தமான முப்பத்தாறு தத்துவங்களையும், கூறப்பட்டுள்ளஸ்தானங்களில், தானங்களில், நியஶிப்பது தத்துவநியாஸ மெனப் படும்.

निजकिमलतनौ என்று கூறப்பட்டுள்ள காரணத்தால் பாபமற்ற தன்னுடைய **சாம்பவ சரீரத்தில்** என்றேற் படுகின்றது. இதனால் பாபபுருஷ தாஹாதி பாவனாக்கிரியைகளை யுடைய **பூத சுத்தி**, **ஆத்மப்பிராணப் பிரதிஷ்டை** களைச் செய்து விமலமாக்கிக் கொண்ட சரீரத்தில் நியாஸாதிகள் செய்தல் வேண்டுமென்பது வித்திக்கின்றது.

நியாஸங்களின் விரிவானக்கிரமம் பூஜா பத்ததி நூல்களில் கண்டு தெளியவும். (51)

(**அவதாரிகை**) இந்த ஶ்லோகத்தில் ஸ்ரீ துர்வாஸ முநீந்திரர் ஸ்ரீ வித்யோபாஸனையால் உபாஸகர்களுக்கு ஐஹிகத்தில் ஏற்படக் கூடிய பலன்களை வர்ணிக்கின்றனர்.

## பூஜாபலன்

**सुरपतिपुरलक्ष्मीजृम्भणातीतलक्ष्मी :**
**प्रभवति निजगेहे यस्य दैवं त्वमायें ।**
**तव विविधकलानां पात्रभूतस्य तस्य**
**त्रिभुवनविदिता सा जृम्भते कीर्तिरच्छा ॥ ५२ ॥**

**ஸுரபதிபுர-லக்ஷ்மீ-ஜ்ரும்ப்பணாதீதலக்ஷ்மீ:**
**ப்ரபவதி நிஜகேஹே யஸ்ய தைவம் த்வ-மார்யே |**
**தவ விவிதகலானாம் பாத்ரபூதஸ்ய தஸ்ய**
**த்ரி வனவிதிதா ஸா ஜ்ரும்ப்பதே கீர்த்தி-ரச்சா || 52 ||**

**(பதவுரை)** (**ஆர்யே**) =பூஜித்தற்குரியவளே!; (**யஸ்ய**) = எவனுக்கு; (**த்வம்**) = நீர்; (**தைவம்**) = தெய்வமோ; (**நிஜக்ருஹே**) = அவனுடைய வீட்டில்; (**ஸுரபதிபுர-லக்ஷ்மீ-ஜ்ரும்ப்பண**) = தேவேந்திரபுரியின் செல்வத்தின் விரிவிற்கும்; (**அதீத-**) = அதிகமான; (**லக்ஷ்மீ:**) = செல்வம்; (**ப்ரபவதி**) = உண்டாகிறது; (**தவ**) = உம்முடைய; (**விவித-கலானாம்**) = பலவிதமான கலைகளுக்கு; (**பாத்ரபூதஸ்ய**) = இருப்பிடமாய் விளங்கும்; (**தஸ்ய**) = அவனுக்கு; (**த்ரிபுவன-விதிதா**) = மூவுலகும் அறியும்படியான; (**ஸா**) = அப்படிப்பட்ட; (**அச்சா**) = மாசற்ற; (**கீர்த்தி:**) = புகழானது; (**ஜ்ரும்ப்பதே**) = விரிவடைகின்றது.

**(தாத்பரியம்)** யாவராலும் பூஜிக்கப்படத்தக்க ஆர்யே! எந்த உபாஸகனுக்கு உபாஸ்யதைவமாய் நீ இருக்கின்றனையோ அவனுடைய கிருஹத்தில் ஸ்வர்க்க லோகத்தின் ஐஶ்வரியத்தை யவமதிக்கத்தக்க அசஞ்சல மஹதைஶ்வரியத்தை யருளக்கூடிய மஹாலக்ஷ்மியானவள் வாஸம் செய்வாள்; அன்றியும், உனது ஸ்வரூபமாகிய பற்பல கலைகளுக்கும் வாஸயோக்கியஸ்தானமாகிய அந்த உபாஸகனுக்கு லோகத்திரயங்களிலும் உன்னுடைய உபாஸனா பலத்தால் பிரஸித்தமும் நிர்மலமுமான கீர்த்தியானது நன்கு விளங்குகின்றது.

**(விசேஷவுரை)** பரதேவதையின் உபாஸ்தியால் புக்தியும் முக்தியும் ஏற்படுகின்றனவென்பது சாஸ்திரப் பிரஸித்தமாதலின், இங்கே புக்தி வடிவ ஐஹிகபலன் கூறப்பட்டது. தேவராஜனாகிய இந்திரனது ஐஸ்வரியம் எல்லா ஐஸ்வரியங்களிலும் மேன்மையான தென்பது சாஸ்த்திரப் பிரஸித்தமாம். அவனது செல்வங்கூட ஒரு காலத்தில் தேய்ந்தொழிவதாகப் புராணாதிகளில் கேட்கப்படுகின்றது. ஆதலின், இந்திரலோகத்திய ஐஸ்வரியம் நிலையானதன்று என்று ஏற்படுகின்றது. ஸ்ரீ வித்யோபாஸகனது ஐஸ்வரியமோ இந்திர லோகத்தின் செல்வத்தினும் சிறந்ததாகும்; நாசமின்றி அசஞ்சலமாயிருத்தலின். ஐஹிக சுகத்திற்குச் செல்வமொன்றே போதாது; செல்வத்தோடு கல்வியும் வேண்டும். பரதேவதையின் ஸாரஸ்வத ஸ்வரூபமே ஸகலகலைகளாகும். ஆதலின் ஸகலவித்தைகளும், அதிமதுரகவித்துவ வல்லமையும் தானாகவே அவனிடத்தில் உண்டாகின்றன. அதனால் அந்த உபாஸகனது நிர்த்தோஷமான கீர்த்தியானது மூன்று லோகங்களிலும் பரவி விளங்குகின்றது. (52)

**(அவதாரிகை)** இந்த ஸ்லோகத்தில் மானஸிக பூஜை வர்ணிக்கப்படுகின்றது.

## அந்தர்முக ஆராதனை

मातस्त्वं भूर्भुवःस्वर्महरसि नृतपःसत्यलोकैश्च सूर्य
न्द्वारज्ञाचार्यशुक्रार्किभिरपि निगमब्रह्मभिः प्रोतशक्तिः ।
प्राणायामादियत्नैः कलयसि सकलं मानसं ध्यानयोगं
येषां तेषां सपर्या भवति सुरकृता ब्रह्मते ज्ञानते च ॥५३ ॥

**மாதஸ்தவம் பூர்ப்புவ: -ஸ்வர்-மஹரஸி ந்ருதப: -ஸத்ய-லோகைச்ச ஸூர்யேந்த்-**
**வாரஜ்ஞாசார்ய-சுக்ரார்க்கிபி-ரபி நிகமப்ரஹ்மபி: ப்ரோதசக்தி: |**
**ப்ராணாயாமாதி-யத்னை: கலயஸி ஸகலம் மானஸம் த்யான-யோகம்**
**யேஷாம் தேஷாம் ஸபர்யா பவதி ஸூரக்ருதா ப்ரஹ்மதே ஜ்ஞானதே ச**
**|| 53 ||**

**(பதவுரை)** (**மாத**:) = தாயே!; (**பூ: புவ: ஸ்வ**:) = பூலோகம், புவர் லோகம், ஸுவர்லோகம்; (**மஹ**:) = மஹர்லோகம்; (**ந்ரு-தப: ஸத்ய-ஸோகைச்ச**) = ஜனலோகம், தபோலோகம், ஸத்யலோகம் ஆகியவற்றாலும்; (**ஸூர்ய-இந்து-ஆ-ஜ்ஞ-ஆசார்ய-சுக்ர-அர்க்கிரி: அபி**) = ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலிய கிரகங்களிலும்; (**நிமே-ப்ரஹ்மரி**:) = பிரம்மஸ்வரூபமான வேதங்களிலும்; (**ப்ரோதசக்தி**:) = ஊடுருவி நிற்கும் சக்தியாக; (**த்வம்**) = நீ; (**அஸி**) = விளங்குகிறாய்; (**ப்ராணாயாமாதி-யத்னை**:) = பிராணாயாமம் முதலிய பயிற்சிகளால்; (**யேஷாம்**) = எவர்களுடைய; (**ஸகலம் மானஸம்**) = முழுமனதையும்; (**த்யானயோகம்**) = தியானயோகத்தில்; (**கலயஸி**) = நிற்கும்படி நீ அருள்புரிகின்றனையோ; (**தேஷாம்**) = அவர்களுடைய; (**ஸபர்யா**) = பூஜையானது; (**ஸூரக்ருதா**) = தேவர்கள் செய்த பூஜை போன்றதாக; (**பவதி**) = ஆகிறது; (**ப்ரஹ்மதே**) = அவர்கள் பிரம்மமாக ஆகின்றனர்; (**ஜ்ஞானதே ச**) = ஞானமே உருக்கொண்டவர்களாகவும் ஆகின்றனர்.

**(தாத்பரியம்)** ஹே ஜனனீ! நீ **பூ⁴:, பு⁴வ:, ஸுவ:** என்னும் வியாஹ்ருதிகளாகவும், பூலோக புவர்லோகாதி ஸப்த லோகங்களாகவும் விளங்குகின்றனை; அன்றியும் ஸூர்யன் முதலிய ஸப்த கிரஹங்களாகவும் விளங்கி அவற்றிற்கும், பிரஹ்மாதி தேவர்களுக்கும், ருகாதி சதுர் வேதங்களுக்கும் அந்தர் யாமியாகவும் இருக்கின்றனை. பிராணாயாமம் முதலிய யோகாங்க ஸாதனங்களால் எந்த உபாஸகர்களுடைய மனதைச் சம்பூர்ண நிதித்தியாஸத்தில் நிலைக்கும்படி நீ அநுக் கிரஹிக்கின்றனையோ அந்த உபாஸகர்கள், நிதித்தியாஸத்தின் முதிர்ச்சியினால் ஸமாதிஸித்தியை யடைந்து பிரஹ்ம வித்தியாஸ்வரூபமாகவும் அதனால் பிரஹ்மமாகவும் விளங்குகின்றனர்.

**(விசேஷவுரை)** இதில் பரதேவதையின் ஸர்வ வியாபகத்துவம் விமர்சிக்கப்பட்டுள்ளது. ஸப்த வியாஹ்ருதிகள், ஸப்த லோகங்கள், சூரியனாதி

கிரஹங்கள், பிரஹ்மாதி தேவதைகள், ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணாதிகள் யாவும் சித்சக்தியின் வடிவமேயாமென்னும் விஷயம் இதில் பிரதி பாதிக்கப்பட்டுள்ள விஷயமாகும். இந்த சிக்சக்தி ஆத்மா பின்ன பிரஹ்மஸ்வரூபமாகும். இதையறிந்து அதுவாய் விளங்குதற்குச் சாதனங்கள் பிராணாயாமாதி யோகாங்கங்கள், மானஸிக பூஜை, அகண்டாகாரவிருத்தி வடிவ பரா பூஜை முதலியனவாகும். இத்தகைய அந்தர்யாகத்தைப் பற்றி அதிகம் அறிய விரும்புவோர்கள் சென்னை ஸ்ரீ குஹாநந்த பிரஹ்மவித்யா விமர்சினீ மண்டலியில் பிரசுரிக்கப்பட்டுள்ள **"ஸ்ரீ வித்யா ஸபர்யா வாஸனை"** யென்னும் நூலைப்பார்க்கவும். (53)

**(அவதாரிகை)** இதில் துர்வாஸமுனிவர் பரதேவதையின் மஹிமையை ஸ்தோத்திரம் செய்தல் தன்னால் இயலாத காரியமென்று தனது தாழ்மையையும் விநயத்தையும் தெரிவிக்கின்றனர்.

### க்ஷமாபனம்

**क्व मे बुद्धिर्वाचा परमविदुषो मन्दसरणिः**
**क्क ते मानब्रह्मप्रमुखविदुषामाप्तवचसाम् ।**
**अभून्मे विस्फूर्तिः परतरमहिम्नस्तव नुतिः**
**प्रसिद्धं क्षन्तव्यं बहुलतरचापल्यमिह मे ॥ ५४ ॥**

**க்வ மே புத்திர்வாசா பர-மவிதுஷோ மந்தஸரணி:**
**க்வ தே மாதா-ப்ரஹ்ம-ப்ர்முக-விதுஷா-மாப்த வசஸாம் ।**
**ஆபூன்மே விஸ்ப்பூர்த்தி: பரதர-மஹிமன-ஸ்தவ நுதி:**
**ப்ரஸித்தம் க்ஷந்தவ்யம் பஹுலதர-சாபல்ய-மிஹ மே ॥ 54 ॥**

**(பதவுரை)** (**மாத**:) = தாயே!; (**பரம் அவிதுஷ**:) = பரம் பொருளை அறியாதவனான; (**மே**) = என்னுடைய; (**வாசா**) = வாக்கினால்; (**மந்தஸரணி**:) = மந்தமான போக்குடைய; (**புத்தி**:) = புத்தி; (**க்வ**) = எங்கே?; (**ஆப்தவசஸாம்**) = வாக்கில் வல்லவர்களான; (**ப்ரஹ்ம-ப்ரமுக**-) = பிரம்மா முதலிய; (**விதுஷாம்**) = வேதவித்துக்களுக்கும்; (**பரதர**-) = எட்டாத; (**மஹிம்ன:**) மகிமை வாய்ந்த; (**தே**) = உம்முடைய; (**நுதி**:) = ஸ்தோத்திரம் (**வ**) = எங்கே? (**விஸப்பூர்த்தி**:) = அதைச் செய்ய வேண்டுமென்ற எண்ணம்; (**மே**) = எனக்கு; (**அபூத்**) = உண்டாயிற்று; (**ப்ரஸித்தம்**) = அது பூர்த்தியாயிற்று: (**இஹ**) = இவ்விஷயத்தில்; (**மே**) = என்னுடைய; (**பஹுலதர - சாபல்யம்**) வெகுவாக ஆலோசனையற்ற செயலை; (**கூந்தவ்யம்**) = மன்னித்தருள வேண்டும்.

**(தாத்பரியம்)** ஓ மாதாவே! பரத்தையறியாத என்னுடைய ஜடபுத்தி யெங்கே? அதிமந்தமான வாக்குகள் எங்கே? பிரஹ்மா முதலிய தேவர்களின் அறிவோடு

கூடிய வாக்குகளுக்கும் எட்டாத உன்னுடைய மஹிமை பொருந்திய ஸ்துதி யெங்கே? அப்படியிருந்தும், எதனாலேயோ என் மனதில் ஸ்தோத்திரம் செய்ய வேண்டு மென்று ஸ்புரித்தது; மிகவும் சிரேஷ்டமும் பிரஸித்தமுமான உனது **மஹிம்நஸ்தோத்திரத்தை** யான் செய்வதாகத் துணிந்தது எனது சாபல்யத்தைத் தெரிவிக்கின்றது. செய்யமுடியாத காரியத்தைச் சபல சித்தத்தோடு தொடங்கின என்னைக் குழந்தையாக நினைத்து மன்னிக்க வேண்டுகின்றேன்.

**(விசேஷவுரை)** ஆத்மஸ்வரூபமே பரதேவதா ரூபமாதலின் பரதேவதையின் மஹிமை மனோ வாக்குகளுக்கு எட்டாததாகும். **பரம் அவிது[3]ஷ:** என்று தன்னைக் கூறியதனால் நைச்சியாநுஸந்தானம் தொனிக்கின்றது.

**மஹிமை** = பெருமை; நிரபேக்ஷிகமான மஹிமை ஆத்மாபின்ன சித்சக்திக்கே யுள்ளது. अणोरणीयान् महतो महीयान् **(அணோரணீயான் மஹதோ மஹீயான்)** என்பது ஆத்மலக்ஷணமாகும்.

**சாபல்யம்:** தன்னால் ஆகாத காரியம் என்று நன்றாய் அறிந்திருந்தும் அக்காரியத்தில் பிரவ்ருத்தித்தலுக்கு சாபல்யமென்று பெயர். (54)

**(அவதாரிகை)** ஸாதகர்கள் பரதேவதையைப் பிரார்த்திக்கும் முறை (பிரகாரம்) கூறப்படுகின்றது.

## பிரார்த்தனை

**प्रसीद परदेवते मम हृदि प्रभूतं भयं**
**विदारय दरिद्रता दलय देहि सर्वज्ञताम् ।**
**निधेहि करुणानिधे चरणपद्मयुग्मं स्वकं**
**निवारय जरामृती त्रिपुरसुन्दरि श्रीशिवे ॥ ५५ ॥**

**ப்ரஸீத பரதேவதே மம ஹ்ருதி ப்ரபூதம் பயம்**
**விதாரய தரித்ரதாம் தலய தேஹி ஸர்வஜ்ஞதாம் ।**
**நிதேஹி கருணாநிதே சரணபத்மயுக்மம் ஸ்வகம்**
**நிவாரய ஜராம்ருதீ த்ரிபுரஸுந்தரி ஸ்ரீசிவே ॥ 55 ॥**

**(பதவுரை)** (**பரதேவதே**) = பரதேவதையே!; (**ப்ரஸீத**) = அருள் புரிவாயாக!; (**மம**) = என்னுடைய; (**ஹ்ருதி**) = உள்ளத்தில் உள்ள; (**ப்ரபூதம்**) = மிகப் பெரிதான; (**பயம்**) = பயத்தை; (**விதாரய**) = போக்கியருள்வாயாக; (**தரித்ரதாம்**) = ஏழ்மையை; (**தலய**) = நீக்குவாயாக; (**ஸர்வஜ்ஞதாம்** = அனைத்தையும் அறியும் சக்தியை;

(**தேஹி**) = கொடுத்தருள்வாயாக; (**கருணாநிதே**) = கருணைக்கடலே!; (**ஸ்வகம்**) = உன்னுடைய; (**சரணபத்மயுக்மம்**) = திருவடித்தாமரைகளிரண்டையும்; (**நிதேஹி**) = என்னிடம் வைப்பாயாக; (**ஸ்ரீசிவே த்ரிபுரஸுந்தரி**) = பரமசிவபத்னியான திரிபுரஸுந்தரி!; (**ஜராம்ருதீ**) = பிறப்பையும் இறப்பையும்; (**நிவாரய**) = போக்கி அருள்வாயாக.

**(தாத்பரியம்)** ஹே பரப்பிரஹ்மமஹிஷியான ஸ்ரீ திரிபுர ஸுந்தரி தேவியே! என்னை அநுக்கிரஹிக்க வேண்டும். என் மனதில் மஹத்தாகிய பயம் தோன்றுகின்றது. அதை நிவர்த்தி செய்வாயாக; தாரித்திரியத்தை ஒழிப்பாயாக; ஸர்வக்ஞத்துவத்தை யருள்வாயாக. ஹே கருணா ஸமுத்திரமே!! உனது இரண்டு இரண்டு சரணகமலங்களையும் எனது தியானத்துக்கு விஷயமாகச் செய்வாயாக; இவற்றோடு எனது ஜராமரணங்களையும் ஒழிப்பாயாக.

**(விசேஷவுரை)** ஆத்மஞானத்கையடைய முயலும் ஒவ்வொரு முமுக்ஷவும் அநர்த்த நிவர்த்தியிலும் ஆநந்தப் பிராப்தியிலும் பிரவர்த்தித்தல் வேண்டும். ஜராமரணங்கள் கூறப்பட்டமையின், உபலக்ஷணமாய் ஜனனமும் கொள்ளத்தக்கதா யிருக்கின்றது. **ஜனன மரணங்களே மஹத்தாகிய பயமாகும்.** ஒருவனுக்குப் பயமிருக்குமே பாயின் அவனிடத்தில் உண்மை அறிவு விளங்காது. பொய்யுணர்வு க்குக் கிஞ்சிக்ஞத்துவமென்று பெயர். இந்த கிஞ்சிக்ஞத்துவத்திற்குத்தான் **தாரித்திரிய** மென்று பெயர். இந்த ஏழ்மைத்தனத்தை நிவர்த்தித்துக்கொள்ள ஸர்வக்ஞத்துவம் வேண்டும் இது தான் மெய்யுணர்வு அல்லது தத்துவ ஞானமாகும். இது ஏற்பட்டால், பரதேவதையின் சரணகமலத் தியானம் சித்திக்கும். இது தான் **நிதித்தியாஸனமும் ஸமாதியாகு** மென்பது மிகவும் ரஹஸ்யமாம். ஆதலின் ஒவ்வொரு உபாஸகனும் பரதேவதையை அவசியமாய்ப் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டிய அம்சங்கள் இதன் மூலமாய் அறிந்து, அங்ஙனம் ஒழுக வேண்டுமென்பது மஹர்ஷியினது கருத்தாகுமென்பது அறியத் தக்கது. (55)

**(அவதாரிகை)** இந்த ஸ்தோத்திரத்தின் பாராயணத்தினால் ஏற்படும் பயன் இதில் பிரதிபாதிக்கப்படுகின்றது.

## பலச்ருதி

**इति त्रिपुरसुन्दरीस्तुतिमिमां पठेद्यः सुधी :**
**स सर्वदुरिताटवीपटलचण्डदावानलः ।**
**भवेन्मनसि वाञ्छितप्रथितसिद्धिवृद्धिर्भवे**
**दनेकविधसंपदा पदमनन्यतुल्यो भवेत् ॥ ५६ ॥**

**இதி த்ரிபுரஸுந்தரீ-ஸ்துதிமிமாம படேத்ய: ஸுதீ:**
**ஸ ஸர்வதுரிதாடவீ-படல-சண்ட-தாவானல: |**
**பவேன்மனஸி வாஞ்ச்சித-ப்ரதித-ஸித்தி-வருத்திர்-பவே-**
**தனேக-விதஸம்பதாம் பத-மனன்யதுல்யோ பவேத்** || 56 ||

**(பதவுரை)** (**இதி**) = இவ்வாறு; (**இமாம்**) = இந்த; (**த்ரிபுரஸுந்தரீ-ஸ்துதிம்**) = த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்திரத்தை; (**ய:**) = எந்த; (**ஸுதீ:**) = நல்லபுத்திமான்; (**படேத்**) = படிக்கின்றானோ; (**ஸ:**) = அவன்; (**ஸர்வ-துரித-அடவீ-படல**) = பாவமாகிற அடர்ந்த காட்டிற்கு; (**சண்ட-தாவானல:**) = கடுமையான காட்டுத்தீ போன்றவனாக; (**பவேத்**) = ஆவான்; (**மனஸி**) = மனதில்; (**வாஞ்சித**) = விரும்பிய; (**ப்ரதித-**) = பிரசித்தமான; (**ஸித்தி வ்ருத்தி:**) = ஸித்திகளின் விருத்தியானது; (**பவேத்**) = ஏற்படும்; (**அனேக-வித-**) = பலவகையான; (**ஸம்பதாம்**) = செல்வங்களின்; (**பதம்**) = இருப்பிடமாகவும்; (**அனன்ய-துல்ய:**) = ஒப்புயர்வற்றவ.கைவும்; (**பவேத்**) = ஆவான்.

**(தாத்பரியம்)** எந்த வித்தியோபாஸகன் பரதேவதா தியானத்தோடும், சிரத்தையோடும், இதுவரையில் கூறப்பட்டுள்ள **ஸ்ரீ திரிபுரஸுந்தரி மஹிம்ந ஸ்தோத்திரத்தைப்** பாராயணம் செய்கின்றனனோ, அவன், ஸகலமான பாபங்களாகிற அடர்ந்த காட்டிற்கு அதியுக்கிரமான காட்டுத் தீப்போல் ஆகின்றனன். அவன் மனத்தில் நினைத்த வாஞ்சைகளெல்லாம் யாதொரு தடையுமின்றி நிறைவேறுகின்றன; அவன் அநேக விதமான ஐஸ்வர்யங்களுக்கு இருப்பிடமாகின்றனன்; அவனுக்கு ஒப்பும் உயர்வும் இவ்வுலகத்திலும் எவ்வுலகத்திலுமில்லை.

**(விசேஷவுரை)** இந்த சக்திமஹிம்நஸ்தோத்திர பாராயணத்தின் பயன் **ஜீவன்முக்தியே** யாகும். ஸகல துரிதங்களாகும் அநர்த்தங்களின் நிவர்த்தியும், ஸர்வ காமங்களின் ஆப்தியும் ஜீவன் முக்தனுக்கே உரியனவாமென்பது ஸகல வேதாந்தங்களின் ஸித்தாந்தமாகும். அபயஸ்வரூபமே ஸம்பத்தாகும். (56)

**(அவதாரிகை)** இந்த மஹிம்நஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்பவர்களுக்கு ஏற்படும் ஐஹிக பலன்கள் இதில் கூறப்படுகின்றன.

## பலச்ருதி

**पृथ्वीपालप्रकटमुकुटस्त्रग्रजोराजिताविं**
**विद्वत्पुञ्जानतिनुतिसमाराधितो बाधितारिः ।**
**विद्याः सर्वाः कलयति हृदा व्याकरोति प्रवाचा**
**लोकाश्चर्यैर्नवनवपदैरिन्दुबिम्बप्रकाशैः ।। ५७ ||**

**ப்ருதவிபால-ப்ரகட-முகுட-ஸ்ரக்ரஜோ-ராஜிதாங்க்க்ரிர்-**
**வித்வத்புஞ்ஜா-நதி-நுதி-ஸமாராதிதோ பாதிதாரி: |**
**வித்யா: ஸர்வா: கலயதி ஹ்ருதா வ்யாகரோதி ப்ரவாசா**
**லோகாச்சர்யைா-நவ-நவபதைரிந்து-பிம்ப-ப்ரகாசை: || 57 ||**

(**பதவுரை**) பலச்ருதியான 56 வது சுலோகத்தின் தொடர்ச்சி - இந்த ஸ்தோத்திரத்தைப்படிப்பவன் - (**ப்ருத்வீ-பால-**) = பூமியை ஆள்பவர்களின்; (**ப்ரகட-முகுட-**) = சிறந்த கிரீடங்களில் உள்ள; (**ஸ்ரக்-ரஜ:**) = பூமாலைகளின் மகரந்தத்தால்; (**ராஜித-**) = பிரகாசிக்கும்; (**அங்க்க்ரி:**) = பாதங்களுடையவனாகவும்; (**வித்வத்புஞ்ஜா**) = வித்வத்ஸமூஹத்தின்; (**நதி-**) = நமஸ்காரத்தாலும்; (**நுதி-**) = ஸ்தோத்திரத்தாலும்; (**ஸமாராதித:**) = நன்கு போற்றப்பட்டவனாகவும்; (**பாதிதாரி:**) = எதிரிகளற்ற வனாகவும் இருப்பான்; (**வித்யா: ஸர்வா:**) = எல்லா வித்தைகளும்; (**ஹ்ருதா**) = அவனுடைய உள்ளத்தில்; (**கலயதி**) = தாமே விளங்கும்; (**இந்து-பிம்ப-ப்ரகாசை:**) = நிலவு போன்று பிரகாசிப்பனவும்; (**லோகாச்சர்யை:**) = உலகை அதிசயிக்கச் செய்பனவும் ஆன; (**நவ-நவ-பதை:**) = புதிய புதிய சொற்களால்; (**ப்ரவாசா**) = தன்னுடைய சிறந்த வாக்கால்; (**வ்யாகரோதி**) = பேசும் திறமையுடையவனாவான்.

(**தாத்பரியம்**) இந்த ஸ்தோத்திரத்தைச் சிரத்தையோடு பாராயணம் செய்யும் உபாஸகன் அரசர்களின் மகுடங்களில் அலங்கரிக்கப்பட்ட புஷ்பமாலைகளின் மகரந்தங்கள் படிந்த பாதங்களுடையவனாகவும், வித்வான்களின் ஸமூஹத்தின் ஸ்தோத்திர நமஸ்காரங்களால் ஆராதிக்கப்பட்டவனாகவும், சத்துருக்களின் பயம் நீங்கப் பெற்றவனாகவும விளங்குவான்; அன்றியும், ஸகலவித வித்தைகளும் அவன் மனதில் ஸ்புரித்து உலகத்தார் ஆச்சரியப்படும்படியான புதிய புதிய சிறந்த பதங்களால் ஆய கவிதாப்பிரவாஹம் அவன் முகத்திலிருந்து பிரவஹிக்கும். அக்கவிதைகள் சந்திரிகையைப் போல் யாவருக்கும் ஸந்தோஷந்தரத்தக் கனவாயும் இருக்கும். (57)

(**அவதாரிகை**) இந்த ஸ்லோகத்திலும் மஹிம்நஸ்தோத்திர பாராயணத்தின் பலனே கூறப்படுகின்றது.

## பலச்ருதி

**संगीतं गिरिजे कवित्वसरणिं चाम्नायवाक्यस्मृते:**
**व्याख्यानं हृदि तावकीनचरणद्वन्द्वं च सर्वज्ञताम् ।**
**श्रद्धां कर्मणि कालिकेऽतिविपुलश्रीजृम्भणं मन्दिरे**
**सौन्दर्यं वपुषि प्रकाशमतुलं प्राप्नोति विद्वान्कवि: ॥५८ ॥**

**ஸங்கீதம் கிரிஜே கவித்வஸரணிஞ் சாம்னாய-வாக்ய-ஸ்ம்ருதே:**
**வ்யாக்க்யானம் ஹ்ருதி தாவகீன-சரணத்வந்த்வஞ்ச ஸர்வஜ்ஞுதாம் ।**
**ச்ரத்தாம் கர்மணி காலிகேடதிவிபுல-ஸ்ரீஜ்ரும்ப்பணம் மந்திரே**
**ஸௌந்தர்யம் வபுஷி ப்ரகாச-மதுலம் ப்ராப்னோதி வித்வான் கவி: ॥ 58 ॥**

**(பதவுரை)** பலச்ருதியின் தொடர்ச்சி: - (**கிரிஜே!**) = பர்வதராஜ குமாரியே! (**ஸங்கீதம்**) = ஸங்கீதமும்; (**கவித்வஸரணிம் ச**) = கவி பாடும் முறையும்; (**ஆம்னாய-வாக்ய ஸ்ம்ருதே:**) = வேதங்கள் ஸ்ம்ருதிகள் முதலியவற்றிற்கு; (**வ்யாக்க்யானம்**) = விளக்கம் செய்யக்கூடிய சக்தி; (**ஹ்ருதி**) = இருதயத்தில்; (**தாவகீனம்**) = உம்முடைய; (**சரணத்வந்த்வஞ்ச**) = திருவடிகள் இரண்டையும் போற்றுதல்; (**ஸர்வஜ்ஞுதாம்**) = அனைத்தையும் அறிதல்; (**காலிகே**) = அந்தந்தக் காலங்களுக்குரிய; (**கர்மணி**) = கருமங்களில்; (**ச்ரத்தாம்**) = சிரத்தை; (**மந்திரே**) = வீட்டில்; (**அதிவிபுல ஸ்ரீஜ்ரும்பணம்**) = மிகவும் பிரசித்தமான லக்ஷ்மீ கடாக்ஷத்தின் மலர்ச்சி; (**வபுஷி**) = சரீரத்தில்; (**ஸௌந்தர்யம்**) = அழகு; (**அதுலம்**) = ஒப்பற்ற; (**ப்ரகா:**) = தேஜஸ் ஆகியவற்றை; (**வித்வான் கவி:**) = வித்துவானும் கவியுமாகிய அவன்; (**ப்ராப்னோதி**) = அடைகிறான்.

**(தாத்பரியம்)** ஹே கிரிஜே! இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யும் உபாஸகனுக்கு உனது அநுக்கிரஹத்தால் ஸங்கீத சாஸ்திரத்தில் பாண்டித்தியமும், கவித்துவ சக்தியும், வேதங்கள் தர்ம சாஸ்திரங்கள் முதலியவற்றிற்கு வியாக்கியானம் செய்யும் மேதையும், உனது சரணங்களில் பிறழாத பக்தியும், ஸர்வக்ஞுத்துவமும், காலா காலங்களில் செய்ய வேண்டிய நித்திய நைமித்திக கர்மாக்களில் சிரத்தையும், தனது கிருஹத்தில் ஸ்ரீ லக்ஷ்மியின் விலாஸமும், தனது சரீரத்தில் ஸௌந்தர்யமும் தேஜஸ்ஸும் ஏற்பட்டு மஹாசிரேஷ்டமான ஆத்ம ஞானியாகவும் அவன் ஆய் விடுகின்றனன். (58)

**(அவதாரிகை)** இதில் ஸ்ரீவித்தியோபாஸகனது மஹிமை கூறப்படுகின்றது.

### பலச்ருதி

**भूष्यं बैदुष्यमुद्यद्दिनकरकिरणाकारमाकारतेजः**
**सुव्यक्तं भक्तिमार्गं निगमनिगदितं दुर्गमं योगमार्गम् ।**
**आयुष्यं ब्रह्मपोष्यं हरगिरिविशदां कीर्तिमभ्येत्य भूमी**
**देहान्ते ब्रह्मपारं परशिवचरणाकारमभ्येति विद्वान् । ५९ ॥**

**பூஷ்யம் வைதுஷ்ய-முத்யத்-தினகர-கிரணாகார-மாகாரதேஜ:**
**ஸுவ்யக்தம் பக்திமார்க்கம் நிகமநிகதிதம் துர்க்கமம் யோகமார்க்கம் ।**
**ஆயுஷ்யம் ப்ரஹ்ம-போஷ்யம் ஹரகிரிவிசதாம் கீர்த்தி-மப்ப்யேத்ய பூமௌ**
**தேஹாந்தே ப்ரஹ்மபாரம் பரசிவசரணாகார-மப்ப்யேதி வித்வான் ॥ 59 ॥**

**(பதவுரை)** பலச்ருதியின் தொடர்ச்சி: - (**பூஷ்யம்**) = போற்றத் தகுந்த; (**வைதுஷ்யம்**) = கல்வித்திறமையையும்; (**உதயத்**-) = உதிக்கும்; (**தினகர**-) = சூரியனுடைய; (**கிரணாகாரம்**) = கிரணங்களைப் போன்ற; (**ஆகாரதேஜ:**) = உடலின் பிரகாசத்தையும்; (**ஸுவ்யக்தம்**) நன்கு விளங்கும்; (**பக்திமார்க்கம்**) = பக்திமார்க்கத்தையும்; (**நிகமநிகதிதம்**) = வேதங்களில் கூறப்பட்ட; (**துர்க்கமம்**) = அடைதற்கரிய; (**யோகமார்க்கம்**) = யோகமார்க்கத்தையும்; (**ப்ரஹ்ம போஷ்யம்**) = பிரம்மாவால் அளிக்கப்பட்ட; (**ஆயுஷ்யம்**) = ஆயுளையும்; (**ஹரகிரிவிசதரம்**) = கைலாஸகிரி போலுயர்ந்து விளங்கும்; (**கீர்த்திம்**) = புகழையும்; (**பூமௌ**) = பூவுலகில்; (**அப்ப்யேத்ய**) = அடையப் பெற்று; (**தேஹாந்தே**) = உடல் விழுந்த பின்; (**பரசிவசரணாகா**ர) = பரசிவத்தின் திருவடி ஸ்வரூபமான; (**ப்ரஹ்மபாரம்**) = பிரம்ம நிர்வாணத்தை; (**வித்வான்**) = ஸ்ரீவித்யோபாஸகன்; (**அப்ப்யேதி**) = அடைகிறான்.

**(தாத்பரியம்)** வித்துவானெனத்தகும் ஸ்ரீவித்தியோபாஸகன் யாவராலும் போற்றத்தகுந்த பாண்டித்தியத்தையும், ஸூர்யனைப்போல் பிரகாசிக்கும் தேஹகாந்தியையும், வேதங்களிற் பிரதிபாதிக்கப்பட்டுள்ள வியக்தமான பக்தி மார்க்கத்தையும், கூடமும் ரஹஸ்யமுமான யோக மார்க்கத்தையும், சதுர்முகப் பிரஹ்மாவுக்குத் துல்யமான ஆயளையும், கைலாஸ பர்வதத்தைப்போற் பிரகாசிக்கும் கீர்த்தியையும் இவ்வுலகில் அடைந்து அனுபவித்து சரீரத்தியாகத்தின் முடிவில் பரதேவதையின் சரணகமல ஸ்வரூபமான பரப் பிரஹ்ம ஸ்வரூப நிர்வாணத்தையடைகின்றனன். (59)

**(அவதாரிகை)** இந்த மஹிம்நஸ்தோத்திரத்திற்குக் கர்த்தா தாமேயென்று ஸ்ரீ துர்வாஸ மஹர்ஷி இந்த ஶ்லோகத்தில் கூறிக் கொள்ளுகின்றனர்

## இந்த ஸ்தோத்திரத்தை இயற்றியவர்

**दुर्वाससा महितदिव्यमुनीश्वरेण**
**विद्याकलायुवतिमन्मथमूर्तिनैतत् ।**
**स्तोत्रं व्यधाथि रुचिरं त्रिपुराम्बिकाया:**
**वेदागमैकपटलीविदितैकमूर्ते ।। ६० ||**

**துர்வாஸஸா மஹித-திவ்ய-முனீச்வரேண**
**வித்யாகலா-யுவதி-மன்மத-மூர்த்தினைதத் ।**
**ஸ்தோத்ரம் வ்யதாயி ருசிரம் த்ரிபுராம்பிகாயா:**
**வேதாகமைக-படலீ-விதிதைக-மூர்த்தே ॥ 60 ॥**

**(பதவுரை)** (**வித்யா-கலா-யுவதி**-) = உபாஸனா மார்க்க வடிவிலும் கலைகள் வடிவிலும் விளங்கும் ஸ்திரீகளுக்கு; (**மன்மத-மூர்த்தினா**) = மன்மதனே உருவெடுத்தாற் போன்றவரும்; (**மஹித-திவ்ய-முனீச்வரேண**) = பரம பூஜ்யரும் தெய்வீகத்தன்மை வாய்ந்த முனிசிரேஷ்டரும் ஆன; (**துர்வாஸஸா**) = துர்வாஸரால்; (**வேத-ஆகம-ஏக படலீ-விதித**-) = வேத ஆகமத்தொகுதிகளால் அறியப்படும்; (**ஏகமூர்த்தே:**) = ஒரே மூர்த்தியான; (**த்ரிபுராம்பிகாயா:**) = திரிபுராம்பிகையின்; (**ருசிரம்**) = அழகிய; (**ஏதத்**) = இந்த; (**ஸ்தோத்ரம்**) = ஸ்தோத்திரமானது; (**வ்யதாயி**) = இயற்றப்பட்டதாகும்.

**(தாத்பரியம்)** வேத வேதாந்த நிகமாகமஸார லக்ஷ்யார்த்தமாய் விளங்கும் ஸ்ரீமஹாத் திரிபுர ஸுந்தரீ பரா பட்டாரிகையின் மஹிமையை விளக்குவதும், அம்பாளுக்கு மிகவும் பிரீதிகரமானதுமான இந்த ஸ்தோத்திரமானது, ஆத்ம ஞானிகளாய் விளங்கும் பரமயோகிகளுக்குத் தலைமையானவரும், வித்தியா ரூபமாயும் கலாஸ்வரூபமாயுமுள்ள யுவதிகளுக்கு மன்மதஸ்வரூபராய்த் தோற்று பவரும் ஆன துர்வாஸ மஹர்ஷியால் நன்கு இயற்றப்பட்டது.

**(விசேஷவுரை)** கிரந்த கர்த்தா தன்னைத்தானே பிரசம்ஸித்துக் கொள்ளுதல் சாஸ்திரியமானதேயாகும்; தற்புகழ்ச்சியில் சேராது. ஸகலமான வித்தைகளையும், அத்தியாத்ம ஞான சாஸ்திரங்களையும் ஸ்திரீகளுக்கு ஒப்பிடப்பட்டு அந்த ஸ்திரீகளுக்குத் தன்னை மன்மதனாகக் கூறிக்கொண்டிருப்பதனால், ஸகல சாஸ்திரங்களும் தாமே தன்னை வந்து அடைந்தனவென்று கூறுவது தொனிக்கின்றது.

## वेदागमैकपटलीविदिता एका मूर्तिः त्रिपुराम्बिका

வேதாகமமாகும் சாப்தப்பிரமாணமொன்றினால் மாத்திரம் அறியக் கூடியது **ஸஜாதீய**, **விஜாதீய**, **ஸ்வகதபேத ரஹித அத்விதீய ஸ்வரூபமாகும் திரிபுர ஸுந்தரி:** சப்தப் பிரமாணமும் வாச்சியார்த்தத்தினால் அல்லாமல் அல்லாமல் லக்ஷ்யார்த்தத்தினால் மாத்திரமே பிரஹ்மாபின்ன சித்சக்தியாகும் திரிபுர ஸுந்தரீ ஸ்வரூபத்தை யுணர்த்துகின்றது. இத்தகைய பரதேவதையின் ஸ்வரூபத்தை இந்த ஸ்தோத்திரம் நன்கு பிரதிபாதிப்பதால் இது வேதாகம துல்யமேயாகும். ஸதா ஜீவப்பிரஹ்மைக்கியாநுஸந்தானம் செய்யும் ராஜ யோகிகளுக்கெல்லாம் முதன்மையாய் விளங்குவதால் மஹர்ஷி துர்வாஸரது வாக்குகள் ஸத்தியமானதே யாகும். (60)

(**அவதாரிகை**) இதில் இந்த ஸ்தோத்திர கர்த்தாவாகும் ஸ்ரீ துர்வாஸ முனிவர் பரமேஶ்வர ஸ்வரூபராக ஸ்துதிக்கப்படுகின்றனர்.

## துர்வாஸர் பரமேசுவரஸ்வரூபி

**सदसदनुग्रहनिग्रहगृहीतमुनिविग्रहो भगवान् ।**
**सर्वासामुपनिषदां दुर्वासा जयति देशिकः प्रथमः ।।६१ ।।**

**।। इति श्रीदुर्वाससा मुनीन्द्रेण विरचितं**
**शक्तिमहिम्नःस्तोत्रं संपूर्णम् ।।**

**ஸதஸதனுக்ரஹ-நிக்ரஹ-க்ருஹீத-முனிவிக்ரஹோ பகவான் ।**
**ஸர்வாஸா-முபநிஷதாம் துர்வாஸா ஜயதி தேசிக: ப்ரதம: || 61 ||**

**இதி ஸ்ரீதுர்வாஸஸா முனீந்த்ரேண விரசிதம்**
**சக்திமஹிம்ன: ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்**

(**பதவுரை**) (**ஸத்-அஸத்**) = நல்லவர்களையும் கெட்டவர்களையும்; (**அனுக்ரஹ-நிக்ரஹ**-) = முறையே அனுக்ரஹிக்கவும் நிக்ரஹிக்கவும்; (**க்ருஹீத**-) = எடுத்துக் கொண்ட; (**முனிவிக்ரஹ:**) = முனிவடிவினரும்; (**ஸர்வாஸாம் உபநிஷதாம்**) = உபநிஷதங்கள் அனைத்திற்கும்; (**ப்ரதம: தேசிக:**) = ஆதிகுருவும் ஆன; (**பகவான்**) = பகவான் பரமேச்வரர்; (**துர்வாஸா**) = துர்வாஸராக; (**ஜயதி**) = வெற்றியுடன் விளங்குகிறார்.

இங்ஙனம் துர்வாஸ முனிசிரேஷ்டரால்
அருளப்பெற்ற சக்திமஹிம்ன: ஸ்தோத்ரம்
முற்றும்.

(**தாத்பரியம்**) ஸர்வோபநிஷத்துக்களின் ஸாரபூதமான அத்வைத தாத்பரியத்தை மஹா வாக்கியங்களின் மூலமாய் உபதேசித்த ஆதி குருவாய் விளங்கும் பகவான் பரமேஶ்வரன் ஸத் ஜனங்களை யநுக்கிரஹிக்கவும், அஸத்துக்களை சிக்ஷிக்கவும் **ஸ்ரீ குரோதபட்டாரகரென்னும்** துர்வாஸ முனியின் ரூபத்தை ஸ்வீகரித்துக்கொண்டு அவதரித்தனர். அத்தகைய பகவான் கைலாஸபதி ஸர்வோத் கிருஷ்டமாய் விளங்குகின்றனர்.

இது கிரந்தாந்த மங்களம். ஸ்ரீ துர்வாஸர் பரசிவாவதாரம்; ஆதலின் அபரசிவம். இது புராணப் பிரஸித்த விஷயம். குருபரம்பரையில் பரமேஸ்வரனே ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாகவும் ஸ்ரீ மஹா காமேஸ்வரராகவும் விளங்கி ஆதி தேசிகத்தன்மையை வஹித்துள்ளன னென்பது நிர்விவாதமாம். (61)

छत्रं चामरयोर्युगं व्यजनमादर्शस्तथा मर्दलो
भेरीशङ्खमृदङ्गकाहलकलागीतं च नृत्यं तथा ।
साष्टाङ्गं प्रणतिः स्तुतिर्बहुविधा चैतत्समस्तं मया
संकल्पेन समर्पितं तव शिवे संतुष्टये कल्पताम् ॥

उच्चेषु नीचेष्वपि दर्शनेषु प्रकाशते देवि तव स्वरूपम् ।
समुज्वलत्येव हि यज्ञवाटे मातङ्गवेश्मन्यपि जातवेदाः ।।

इति त्रैपुरं श्रीमहिम्नं मनोज्ञ
मया व्याकृतं प्रीतये सिद्धये च ।
सतां साधकानां सुविधैः सुधीरैः
श्चिरं लोकनीयं हृदा निश्चलेन ।

यत्रैव यत्रैव मनो मदीयं तत्रैव तत्रैव तव स्वरूपम् ।
यत्रैव यत्रैव शिरो मदीयं तत्रैव तत्रैव पदद्वयं ते ॥

इति श्रीदुर्वाससा मुनीन्द्रेण विरचितस्य श्रीमत्रिपुरसुन्दरीमहिम्नस्तोत्रस्य
रहस्यार्थविमर्शिन्याख्यद्राविडव्याख्या समाप्ता ॥